No. 15.

ஓம்.

ஸ்ரீக்ருஷ்ண பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீபகவத்கீதா பாஷ்யார்த்த போதினி.



சஞ்சிகை - ௧௫. } இஃது. { ௧௮௯௯-௵ ஜூலை௴

ஏ - சேஷாசாரியாரால்,

முமுக்ஷு ஜனங்களுக்கு உபயோகமாகத்

தமிழ்பாஷையில்,

சில வித்வான்களைக்கொண்டு எழுதுவித்து

சென்னை:

மீனாக்ஷிவிலாசம் அச்சுக்கூடத்தில்,

பதிப்பிக்கப்பட்டது.

ஓம்.

ஸ்ரீக்ருஷ்ணபரப்ரஹ்மணே நம:



# பகவத்கீதா பாஷ்யார்த்த போதிநீ.

## இரண்டாமத்தியாயம்.

---

## சாங்க்யயோகம்.



### சஞ்சயன் சொல்வது.

---

శ్లో॥ తంతథాకృపయావిష్ట । మశ్రుపూర్ణాకులేక్షణమ్ ।
విషీద న్తమిదంవాక్య । మువాచమధుసూదనః॥ ౧॥

தம்ததாக்ருபயாவிஷ்ட । மஶ்ருபூர்ணாகுலேக்ஷணம்
விஷீதந்தமிதம்வாக்ய । முவாசமதுஸூதநः॥

---

### பதவுரை.

---

ததா - அந்தப்ரகாரமாக, க்ருபயா - தயையினால், ஆவிஷ்டம்-வ்யாப்தமானவனும், விஷீதந்தம்-விசநமடைந்திருப்பவனும், அஶ்ரு பூர்ணாதலேக்ஷணம் - கண்ணீரினால் நிரம்பினதும் தடுக்கப்பட்டது மாகிய பார்வையை யுடையவனும் ஆகிய, தம் - அந்த அர்ஜுனனைக் குறித்து, மதுசூதநः - ஸ்ரீக்ருஷ்ணபகவான், இதம் - இங்குக் கீழே சொல்லப்படப்போகிற, வாக்யம் - வாக்யத்தை, உவாச - சொன்னார்.

---

### தாத்பர்யம்.

---

அந்தப்ரகாரமாக தம்மவர்களிடத்திலுள்ள தயையினால் தம்மவர்களைக் கொல்ல நேரிட்டதேயென்று மிகவும் விசனமடைந்து,

கண்ணீரினால் பார்க்கக்கூடாமலிருக்கிற அர்ஜுநனோடு ஸ்ரீக்ருஷ்ண பகவான் கீழேவருகிற வாக்யத்தைச் சொன்னாரென்று தாத்பர்யம்.

## ரஹஸ்யார்த்தம்.

நித்யா நித்யவஸ்து விவேகத்தால் பிறந்ததும், தீவிரமானதும் ஆகிய வைராக்யத்தாலும், (சகல விஷயங்களிலும் ஆசையில்லா திருத்தல்) மோக்ஷத்தை அடையவேண்டு மென்கிற கோரிக்கை யினாலும் சர்வகர்மங்களையும் விட்டவனும் மோக்ஷத்தை விரும்பி யிருப்பவனும் ஆகிய பிராமணனுக்கு நித்யாநித்யவஸ்து விவே கம், இஹாமுத்ரபலபோக விராகம், (இவ்வுலக சுகத்தை அநு பவிப்பதிலும் பரலோகசுகத்தை அநுபவிப்பதிலும் ஆசையில்லாதி ருத்தல்) முமுக்ஷுத்வம், (மோக்ஷமடைய வேண்டுமென்கிறகோரி க்கையுண்டாயிருத்தல்(மாஸதிஷட்கஸம்பத்தி (லக்ஷ்யத்தில்மனதை நிறுத்துதல்(சமம், பாஹ்யேந்திரியங்களையும் அந்தரிந்திரியங்களையும் அவ்வவற்றின் எல்லைகளில்நிறுத்தி விஷயங்களின்மேற் செல்லாதிரு க்கச்செய்தல், தமம், மனதுக்கு வெளிவியாபாரங்களுண்டாகாமற் செய்துகொள்ளுதல், உபரதி, சகல துக்கங்களையும் மாறுசெய் யாமலேபொறுத்துக்கொள்ளுதல், சஹித்தல், சிந்தாகுலங்களைவிட் டுவிடுதல் திதிக்ஷை, சாஸ்திரத்திலும் குருவாக்யத்திலும் நம்பிக்கை யுண்டாயிருத்தல் சிரத்தை, பரிசுத்தமாகிய பரப்ரஹ்மத்தில் எல்லா க்காலங்களிலும் புத்தியை நிறுத்துதல் சமாதாநம், என்கிற ஆறு குணங்களும்) உண்டாயிருப்பதும், நான்குவிதமாகிய சாதநங்கள் ஸித்திக்கும் பொருட்டும், ப்ராஹ்மணத்வம் சித்திக்கும் பொருட்டும்,

“𑌅𑌥𑌾𑌤𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑌾”

அதாதோப்ரஹ் மஜிஜ்ஞாஸா,

(சாதநசதுஷ்டய் சம்பத்தி உண்டானபிறகு ப்ரஹ்ம விசாரம் செய்யவேண்டும்)

𑌶𑍍𑌰𑍁॥ “𑌆𑌤𑍍𑌮𑌾 𑌵𑌾 𑌅𑌰𑍇 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌵𑍍𑌯𑌃 𑌶𑍍𑌰𑍋𑌤𑌵𑍍𑌯𑌃”

“ஆத்மாவாரேத்ரஷ்டவ்யஸ் ஸ்ரோதவ்யஃ”.

(ஆத்மாவைப் பார்க்கவேண்டும் கேட்கவேண்டும்.

శ్రు॥ "తద్విజ్ఞానార్థంసగురుమేవాభిగచ్ఛేత్
శ్రోత్రియంబ్రహ్మనిష్ఠమ్"

தத்விஜ்ஞானார்த்தம்ஸ குருமேவாபிகச்சேத்
ஶ்ரோத்ரியம் ப்ரஹ்மநிஷ்டம்.

(ஆத்ம ஞானத்தின்பொருட்டு ஶ்ரோத்ரியனும் ப்ரஹ்மநிஷ்டனும் ஆகியகுருவினிடத்துக்குப் போகவேண்டும்.) என்கிறப்ரமாண வசநங்களில் சொல்லப்பட்ட பிரகாரமே ஶ்ரோத்ரியனும், ப்ரஹ்ம நிஷ்டனும் ஆகிய சற்குருவைச் சம்பாதித்துக் கொண்டு, ப்ரஹ்ம விசாரம் செய்யவேண்டும் என்கிற விஷயத்தைக் குறிப்பிக்கும் பொருட்டும் ஸதஸத்விவேகம் (நித்யாநித்ய வஸ்துஜ்ஞானம்) உள்ளவனும் பரமார்த்தத்தை விரும்புகிறவனும்,

అధ్యా॥ ౨॥ (౭) శ్లో॥ "శిష్యస్తేహంశాధిమాంత్వాంప్రపన్నమ్"

"ஶிஷ்யஸ்தேஹம் ஶாதிமாம்த்வாம்ப்ரபந்நம்."

(நான் உனக்கு சீடனானேன். உன்னைச்சரண மடைந்த என்னை சிக்ஷைசெய்) என்கிற வசநத்தினால் நாராயணனையே ஆசாரியனாகச்செய்து கொண்டவனுமாகிய அர்ச்சுனனுக்கு பகவானாகிய வாசுதேவனால் செய்யப்பட்ட ஆத்மாநாத்மோப தேசப்ரகாரத்தை (இது ஆத்மஸ்வரூபம் இது ஆத்மஸ்வரூபமல்ல என்று தெரியும்படி சொல்லும் விதத்தை) தெரிவிக்கும்பொருட்டும் இந்த இரண்டாம் அத்தியாயம் ஆரம்பிக்கப்படுகின்றது. இப்படிப்பட்ட விஷயங்களுள்ள இந்த அத்யாயத்தில் முதலில்.

శ్రు॥ "సోహంభగవశ్శోచామితం
మాంభగవాంచ్ఛోకస్యపారంతారయతు"

"ஸோஹம்பகவஶ்ஶோ சாமிதம்மாபகவாம்
சோகஸ்யபாரம் தாரயது"

(ஓபகவானே நான் துக்கித்துக் கொண்டிருக்கிறேன் அப்படி துக்கித்துக் கொண்டிருக்கிற என்னை துக்கத்தின் முடிவை அடைவியும்) என்கிற சுருதிப்ரமாணத்துக் கிணங்க ஸம்சார துக்கத்தினால் துக்கித்துக்கொண் டிருப்பவனும் தன்னைச் சரணடைந்தவனும் ஆகிய அர்ஜுநனுக்கு வாசுதேவன், சீடனுக்கு அபயம் கொடுத்து அபிமுகனாகச் செய்துகொண்டு ஆசார்யனானவன் தத்வத்தை போதிக்கவேண்டும் என்கிற நியாயத்துக்கிணங்க தத்வத்தை போதித்தானென்று சஞ்சயன் இந்த வாக்யத்தால் த்ருதராஷ்ட்ரனுக்கு அறிவிக்கிறான். மேலும் யுத்தத்தில் மரணமடையத்தகுந்த குருபிதாப்ராதாபுத்ரன் முதலானவர்க ளிடத்திலுள்ள தயையினால் வ்யாப்தமானவன் என்கையாலே அர்ஜுநனுக்கு.

శ్లో॥ "దయాసర్వభూతేషుక్షాంతిరనసూయాశౌచమనాయాసో
మాంగల్యమకార్పణ్యమస్పృహాచేత్యష్టావాత్మగుణాః"

"தயாஸர்வபூதேஷு க்ஷாந்திரநஸூயாஶௌசமநாயாஸோ
மாங்கல்யமகார்ப்பண்யமஸ்ப்ருஹாசேத்யஷ்டாவாத்மகுணாः"

சகல பூதங்களினிடத்தும் க்ருபை, பொறுமை, பிறருடைய செல்வத்தைக்கண்டு சஹித்தல், பரிசுத்தம், ஆயாசமில்லா திருத்தல், மாங்கல்யம், லோபமில்லாதிருத்தல், ஆசையில்லாதிருத்தல், என்கிற எட்டும் ஆத்மகுணங்கள்) என்றுகௌதமமுனிவரால் சொல்லப்பட்ட எட்டுக்குணங்களும் உளவென்று தோன்றுகின்றது, ஆகையால் அர்ஜுநனுக்கு ப்ரஹ்மஜ்ஞாந முண்டாவதற்கு சந்தேகமில்லையென்றும், இப்படிப்பட்ட குணங்களையுடையவர்களுக்கே ப்ரஹ்மஜ்ஞானம் உண்டாகுமென்றும் அறியவேண்டும், மேலும் துக்கித்துக் கொண்டிருக்கிற அர்ஜுநன் என்கையாலே அர்ஜுநன்.

శ్రు॥ "సోహంభగవశ్శోచామి"

"ஸோஹம் பகவஶ்ஶோசாமி."

(அவிவேகமுள்ள நான் துக்கித்துக்கொண்டிருக்கிறேன்) என்கிறஶ்ருதிப்ரமாணத்துக் கிணங்க நான் எப்படி சமுசார துக்கத்தை நீக்கிக்கொள்ளக் கடவேன் என்று துக்கித்துககொண்டிருக்கிறானெ

ன்று தோன்றுகின்றது. மேலும இப்படி சமசாரதுக்கம எந்தவித மாய் நசிக்குமென்று விசநமடைகிறவனுக்கு ஈசுவரன் அநுக்ரஹிப் பானென்றும், மோக்ஷத்தையடையவேண்டுமென்கிறஎண்ணமுள்ள வன் சதாசாரியனை ஆசிரயிக்க வேண்டுமென்றும் மேலே சொல லப்பட்ட வாக்யார்த்தத்தால் தோன்றுகின்றதென்று அறியவே ண்டும்.

மேலும், அஹிம்ஸை எல்லாவற்றினும் உத்தமமானதாமமென் றும், ஆகையால் ஹிம்ஸாக்ருத்யமாகிய யுத்ததைவிட்டு பிக்ஷைச் சோற்றையுண்டு உயிர்வாழ்தலே உசிதமென்றும், எண்ணி யுத்தம் பண்ணமாட்டேனென்றான் என்று அர்ஜுநன் சொன்னவார்த்தையை க்கேட்டு, த்ருதராஷ்டரன் தன்புத்ரர்களுக்கு இனிராஜ்யம் ஸ்த்திர மா யிருக்குமென்று எண்ணி, ஸ்வஸ்த சித்தனாய், பிறகு என்ன நடந்ததென்று வினவுவானென்று நினைத்து, சஞ்சயன் அப்படிப் பட்ட வினவுக்கு இடமிலலா திருக்கும்பொருட்டு, இந்த வாக்யத் தைச் சொல்லுகிறானென்றும் தோன்றுகின்றது. மேலும், தயை யினால் (இவர்கள் எம்மவாகள் என்கிற அன்பே காரணமாயுள்ள ஸ் நேஹ விசேஷத்தால்) வ்யாப்த மானவனென்று சொல்லுதலால், ஸ்வதந்த்ரமாகிய கர்த்தா, காமத்தினும் ப்ரதாநமாகையால், கர்த் தாவாகிய தயை தன்கிடையே அர்ஜுநனை அடைந்த தென் றும்,அப்படியாகையால் அர்ஜுநன் இயற்கையாகவே தயையுடைய வனே யன்றி ஏதோ ஒருகாரணத்தால் தயையுள்ளவனல்ல வென் றும் தோன்றுகின்றது, மேலும் விசநமடையா நின்றவன் என்கிற இடத்தில் விசநமடைவதற்கு அர்ஜுநன் கர்த்தா ஆனான் ஆகை யால் அர்ஜுநனுக்கு இயற்கையாய் விசநமில்லை யென்றும், ஏதோ ஒருநிமித்ததால் விசநத்தை அடைவான் என்றும் தோன்றுகின் றது. மதுசூதநன் என்கையாலே நாராயணன் தானே துஷ்டநிக்ர ஹகர்த்தா ஆகையால் அர்ஜுநனுக்கு துஷ்ட நிக்ரஹததைக் குறித் தே சொன்னானென்றும், உபேக்ஷை செய்யவில்லை யென்றும் தோ ன்றுகின்றது. மேலும் இந்த மதுசூதநபதத்தால் ஸ்ரீக்ருஷ்ணபக வான்.

శ్రు॥ "ఇయంపృథివీసర్వేషాంభూతానాంమధు"

"இயம்ப்ருதிவீஸர்வேஷாம்பூதாநாம்மது"

(இந்தப்ருதுவி யானது சகல பூதங்களுக்கும் மது) என்கிற சுருதியினால் சொல்லப்படுகிற ஸ்வரூபாநந்தத்தை உண்டாக்குவோன் என்று தோன்றுகின்றது. மேலும், இந்த மதுசூதந பதத்தாலேயே, க்ருஷ்ணபகவான் சகல பூதங்களுக்கும் தமது தேஹத்தில் தேன்போலப் பொருந்தியிருக்கிற அஹங்காரத்தை நசிக்கப்பண்ணுகிறவன் என்று தோன்றுகின்றது.

ஸ்ரீக்ருஷ்ணபகவான்சொல்லுதல்.

శ్లో॥ కుతస్త్వాకశ్మలమిదం । విషమేసముపస్థితమ్।
అనార్యజుష్టమస్వర్గ్య । మకీర్తికరమర్జున॥ ౨॥

குதஸ்த்வாகஶ்மலமிதம் । விஷமேஸமுபஸ்த்திதம்।
அநார்யஜுஷ்டமஸ்வர்க்ய । மகீர்த்திகரமர்ஜுந॥

பதவுரை.

ஹே அர்ஜுந - ஓ அர்ஜுநா, குதஃ-எந்தக்காரணத்தால், விஷமே - சங்கடத்தில், அநார்யஜுஷ்டம் பாமரர்களால் சேவிக்கப் படுவதும், அஸ்வர்க்யம் - ஸ்வர்க்கலோகத்தைக் கொடாததும், அகீர்த்திகரஞ்ச - அபகீர்த்தியை உண்டாகுவதும் ஆகிய, இதம்-இந்த, கஶ்மலம் - மோஹம், த்வா - உன்னை, ஸமுபஸ்த்திதம் - அடைந்தது.

தாத்பர்யம்.

அர்ஜுநா; யுத்தம்செய்யத் தகுந்த சமயத்தில், சூரருக்குத் தகாததும், ஸ்வர்க்கத்தைக் கொடாததும், அபகீர்த்திக்குக் காரணமானதும் ஆகிய இந்த துக்கரூபமான அதைரியம் உனக்கு எப்படியுண்டாயிற்றென்று தாத்பர்யம்.

ரஹஸ்யார்த்தம்.

அந்த பகவான் சொன்ன வார்த்தைகளை இந்த வாக்யத்தால் சஞ்சயன் சொல்லுகிறான்.

శ్లో "ఐశ్వర్యస్యసమగ్రస్య । ధర్మస్యయశసశ్శ్రియః ।
వైరాగ్యస్యాథమోక్షస్య । షణ్ణాంభగఇతీంగనా॥ "

"ஐஶ்வர்யஸ்யஸமக்ரஸ்ய । தர்மஸ்யயஶஸஶ்ஶ்ரியஃ
வைராக்யஸ்யாதமோக்ஷஸ்ய । ஷண்ணாம்பகஇதீம்கநா"॥

நிறைந்தசெல்வம், நிறைந்ததர்மம், நிறைந்தகீர்த்தி, நிறைந்த சம்பத்து, நிறைந்தவைராக்யம், நிறைந்தமோக்ஷ சாதகமான ஞானம் என்கிற ஆறுக்கும் பகனென்றுபேர்) என்றுஸ்ம்ருதியில் சொல்லப்பட்ட ஆறுகுணங்களும் க்ருஷ்ணருக்கு உண்டாயிருக்கின்றன என்றும், ஆகையாலே க்ருஷ்ணருக்குபகவான் என்கிறபெயர் உண்டாயிற்றென்றும், அறியவேண்டும், மேலும்.

శ్లో॥ "ఉత్పత్తించవినాశంచ । భూతానామాగతింగతిమ్ ।
వేత్తివిద్యామవిద్యాంచ । సవాచ్యోభగవానితి॥ "

"உத்பத்திஞ்சவிநாஶஞ்ச । பூதாநாமாகதிம்கதிம்।
வேத்திவித்யாமவித்யாஞ்ச । ஸவாச்யோபகவாநிதி॥

(பூதங்களின் உத்பத்திஸ்த்திதிகளையும் அவற்றின் காரணங்களையும், வருதல்போதல் என்பவைகளை யேஸ்வபாவ மாகவுடைய சம்பத்து ஆபத்துகளையும், வித்யை அவித்யைகளையும், அறிந்தவன் பகவான் என்று சொல்லப்படுவான்.) எனகிற ஸ்ம்ருதியில் சொல்லப்பட்ட குணங்கள் எல்லாவற்றையும் உடையவனாதலாலும் ஸ்ரீக்ருஷ்ணருக்கு பகவான் என்கிறபெயர் உண்டாயிற்றென்று அறியவேண்டும். மோஹம் என்று சொல்லாமல் கஶ்மலம் என்று சொல்லுதலால் அர்ஜுனனுக் குண்டான எண்ணம் சிஷ்டஜனங்களால் நிந்திக்கத்தக்கதென்று தோன்றுகின்றது. இந்த மோஹம் உன்னை எப்படி அடைந்தது என்கையாலே, மோக்ஷத்தை அடையவேண்டும் எனகிற எண்ணமுண்டா; ஸ்வர்க்கத்தை அடையவேண்டும் என்கிற எண்ணமுண்டா; கீர்த்தியை அடையவேண்டு மென்கிற எண்ணமுண்டா; என்றுபகவான் வினவினதாகத் தோன்றுகின்றது. இப்படிப்பட்ட எண்ணமுடையவனுகையாலே தான்பகவான் பாமரர்களால் சேவிக்கப்பட்டதும்,

ஸ்வர்க்கத்தைக் கொடுக்கத் தகாததும், கீர்த்தியை உண்டாக்காததும் ஆகிய மோஹம் என்று சொன்னதாகத் தெரிந்துகொள்ள வேண்டும. மேலும், பாமரர்களால் சேவிக்கப்பட்டது என்கையாலே அர்ஜுனனுக் குண்டான மோஹம் மோக்ஷத்தை உண்டாக்கமாட்டாதென்றும், சம்சார பந்தத்தையே உண்டாக்குமென்றும், ஸ்வர்க்கத்தைக் கொடுக்காதது என்கையாலே நரகத்தை உண்டாக்குவ தென்றும், கீர்த்தியைக் கொடுக்காதது என்கையாலே அபகீர்த்தியை யுண்டாக்குவ தென்றும் தோன்றுகின்றது. மேலும், இப்படிப்பட்ட வாக்யத்தைச் சொல்லுதலால், ஸ்வதர்மங்களை ஆசரித்துஅதனுல் சித்தசுத்தியை உண்டாக்கிக்கொண்டு மோக்ஷத்தை அடைய விரும்புவோரும், த்ருடவைராக்ய மில்லாதவரும் ஆனவர்கள்ஸ்வதர்மத்தை விடக்கூடாதென்றும்,ஆகையால் ஸ்வதர்மமான யுத்தத்தைச்செய்தேதீரவேண்டு மென்றும், ஸ்வதர்மத்தை ஆசரிக்காதவனுக்குசித்தசுத்தி உண்டாகாதென்றும், சித்தசுத்தியில்லாமல் வைராக்யம்உண்டாகாதென்றும், வைராக்யமில்லாமல்மோக்ஷவிருப்பமுண்டாகாதென்றும், ஒருவேளைஉண்டானுலும்அதுஉறுதியாய் நில்லாதென்றும் பகவானது அபிப்ராய மென்று தோன்று கின்றது. மேலும், ஸ்வதர்மத்தை ஆசரித்தலால் சித்தசுத்தியை அடையாமல் மோக்ஷத்தை விரும்புகிறவன் அபக்வகஷாயன். (ராகத்வேஷாதிகளை விடாதவன்) என்றும், அப்படிப்பட்டவன் ஸ்வதர்மத்தை விடுதற்கு (அதாவது முற்றத்துறத்தற்கு)தகாதவன் என்றும், அறியவேணடும். மேலும், அர்ஜுனா; (பரிசுத்தஸ்வபாவமுள்ளவனே.) என்று அழைத்தலால் பரிசுத்தஸ்வபாவமுள்ள அர்ஜுனனுக்கு இந்தமோஹத்தை யடைதல்உசிதமல்லவென்று தோன்று கின்றது.

---

శ్లో॥ క్లైబ్యంమాస్మగమఃపార్థ । నైతత్త్వయ్యుపపద్యతే ।
క్షుద్రంహృదయదౌర్బల్యం । త్యక్త్వోత్తిష్ఠపరంతప॥ ౩॥

க்லைப்யம்மாஸ்மகமஃபார்த்த । நைதத்தவய்யுபபத்யதே।
க்ஷுத்ரம்ஹ்ருதயதௌர்பல்யம் । த்யக்த்வோத்திஷ்டபரந்தப

---

## பதவுரை.

ஹேபார்த்த - ப்ரதை யென்பவளுக்கு (குந்திதேவிக்கு) புத ல்வனான ஓ அர்ஜுனா; க்லைப்யம் - பயத்தை, மாஸ்மகப: - அடை யாதே, த்வயி - உன்னிடத்தில், ஏதத் - இந்தபயத்தை யடைதல், நோபபத்யதே-தகாது, ஹேபரந்தப - சத்ருக்களைத் தபிக்கச்செய் கிற அர்ஜுனா; க்ஷுத்ரம் - நீசமான, ஹ்ருதயதௌர் பல்யம்-மன த்திலுள்ள பலஹீநத்தை, த்யக்த்வா - விட்டு, உத்திஷ்ட - யுத்தத் துக்கு எழுந்திரு.

## தாத்பர்யம்.

குந்திபுத்ரனான ஓ அர்ஜுனா; நீபயத்தை யடையாதே; நீ பயப் படுதல் தகாது, பகைவரைத் தவிக்கப்பண்ணுகிற ஓ அர்ஜுனா, நீச மான இந்தபயத்தை விட்டுவிட்டு யுத்தம்செய்வதற்கு எழுந்திரு என்று தாத்பர்யம்.

## ரஹஸ்யார்த்தம்.

கீர்த்தியை உண்டாக்காததாயினும், ஸ்வர்க்கத்தைக் கொடா ததாயினும், பாமரர்களால் கொள்ளத் தகுந்ததாயினும் ஆகட்டும், பந்துஜநங்களுடைய சேனையைப் பார்த்தபிறகு, இதை எப்படிக் கொலவேன், கொல்வேனானல் பந்துக்களில்லாதவனாவேன், பந் துக்களெல்லாரும் போனபிறகு எனக்குத் திக்குயார், என்கிற அதைரியத்தால் நான் வில்லொன்றையும் தாங்கமாட்டாதவனாயிரு க்கிறேனென்று அர்ஜுனன் சொல்வானோ என்று எண்ணிபகவான் இந்த வாக்யத்தைச் சொல்லுகிறாரென்று தோன்றுகின்றது, மே லும் தபோபலத்தை யுடைய குந்திதேவிக்கு தேவப்ரஸாதத்தால் பிறந்தவனென்றும், ஆகையாலே நீமஹாவீரிய முள்ளவனென்றும், ஆகையால் நீ இப்படிப்பட்ட அதைரியத்தை யடைதல் தகாதென் றும் சொல்லநினைத்து, குந்திக்குப் புத்ரனான அர்ஜுனா, என்று பக வான் அழைத்ததாகத் தோன்றுகின்றது. மேலும், பரமேசுவரனு டன் போர்செய்து வெற்றியையடைந்த வுனக்கு இந்த அதைரி

யத்தை யடைதல் தகாதென்னுங் கருத்தால், உன்னிடத்தில் இது தகாதென்றுரென்று தோன்றுகின்றது. மேலும்,

శ్లో॥ నచశక్నోమ్యవస్థాతుం భ్రమతీవచమేమనః॥

"நசஶக்நோம்யவஸ்த்தாதும் ப்ரமதீவசமேமநஃ"

(என்மனம் சுழல்வது போலிருக்கின்றது, ஆகையால் நான் நிற்கமாட்டேன்), என்றும் சொல்லி யிருந்தேனல்லவா என்று அர்ஜுநன் சொல்லுவனே என்று நினைத்து, நீசமான இந்த அதைரியத்தை விட்டுவிடக் கடவையென்று சொன்னதாகத் தோன்றுகின்றது மேலும், அதைரியத்தை விட்டுவிட்டு எழுந்திரு என்று சொல்லுதலால், பகைவரைத் தபிக்கப்பண்ணுகிறவனான நீவிவேகத்தால் இப்பொழுது உனக்குண்டான மோஹங்களை விட்டு, ஸ்வதர்மமான யுத்தத்துக்கு ஆயத்தமாகக் கடவாயென்று பகவானான வாசுதேவன் சொன்னதாகத் தோன்றுகின்றது.

---

அர்ஜுநன் சொல்வது.

---

శ్లో॥ కథంభీష్మమహంసంఖ్యే । ద్రోణంచమధుసూదన॥
ఇషుభిఃప్రతియోత్స్యామి । పూజార్హావరిసూదన॥ ౪॥

கதம்பீஷ்மமஹம்ஸங்க்யே । த்ரோணஞ்சமதுஸூதந ।
இஷுபிஃப்ரதியோத்ஸ்யாமி । பூஜார்ஹாவரிஸூதந॥

---

பதவுரை.

---

மதுஸூதந - மதுவென்னும் அசுரனைக் கொன்றவனும், அரிஸூதந - பகைவரைச் சங்கரிக்குமவனு மாகியஶ்ரீக்ருஷ்ணா; ஸங்க்யே-யுத்தத்தில், அஹம் - நான், இஷுபிஃ-பாணங்களால், பூஜார்ஹௌ-பூசிக்கத்தகுந்த, பீஷ்மம் - பீஷ்மாசாரியனை, த்ரோணஞ்ச - த்ரோணாசாரியனை, கதம் - எப்படி, ப்ரதியோத்ஸ்யாமி - அடிக்கமாட்டுவேன்.

---

தாத்பர்யம்.

மதுவென்கிற அசுரனைக் கொன்றவனும், பகைவனைக் கொல்வோனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணு; நான் பூஜ்யராகிய பீஷ்மத்ரோணர்களை யுத்தத்தில் பாணங்களால் எப்படி அடிப்பேன், அடிக்கமாட்டேன் என்று தாத்பர்யம்.

ரஹஸ்யார்த்தம்.

ஐயா க்ருஷ்ணு; இப்பொழுது நான்சோக மோஹாதிகளால் ஸ்வதர்மமான யுத்தத்தைவிட்டு விட்டேனல்லேன், மற்றென்னெனின், அதர்மமாதலாலும், தர்மரஹிதமாதலாலும் விட்டுவிட்டேனென்று சொல்லநினைத்து பகவானுடைய கருத்தைத் தெரிந்து கொள்ளமாட்டாத அர்ஜுநன் இந்தவாக்யத்தைச்சொல்லுகிறுன். பூஜ்யரானவர்களை மலர்முதலான வற்றுல் பூஜிக்கவேண்டுமென்றும், விளையாடுங்காலத்திலும் பூஜ்யரானவர்களுடனே சந்தோஷத்தின் பொருட்டுக் கடுஞ்சொற்களையும் சொல்லக் கூடாதென்றும், தர்மசாஸ்திரம் முதலானவைகளில் சொல்லப் பட்டிருத்தலால், அர்ஜுநன். பூஜ்யரான பீஷ்மத்ரோணர்களை யுத்தத்தில் பாணங்களால் நான் எப்படி அடிப்பேனென்று னென்று தோன்றுகின்றது. ஆசாரியர்களைப் பூசிக்கவேண்டுமென்றுசாஸ்திரங்களில் சொல்லப் பட்டபடியே ஆசாரியர்களோடு யுத்தத்தைச் செய்யவேண்டுமென்று சொல்லப்படாமையால் பீஷ்மத்ரோணுதியருடன் யுத்தஞ் செய்தல் உசிதமல்ல, ஆனாலும் துரியோதநாதியரால் முன்னிட்டுக் கொண்டு வருகையால் இப்பொழுது பீஷ்மத்ரோணர்களுடன் யுத்தம்பண்ணுதல் உசிதமேயென்று சொல்லக்கூடாது, காரணமென்னெனின்.

శ్లో॥ "గురుంహుంకృత్యత్వంకృత్య"
"குரும்ஹுங்க்ருத்யத்வம்க்ருத்ய"

(ஆசாரியனை அச்சுறுத்தியும், ஏகவசநமாய் அழைத்தும் பாவத்தை யடைவான்) என்கிற ஸ்ம்ருதியால், வாக்கு மாத்திரத்தாலும் ஆசாரியனை அவமதித்தவன் பாவத்தை யடைவான் என்று

சொல்லப்படுதலா லென்றறியவேண்டும். ஆகையாற்றான் அர்ஜுனன் ஆசாரியர்களோடு யுத்தம்பண்ணுதல் அதர்மமென்றும், கிஷித்தக்ருத்ய மென்றும் எண்ணினதாகத் தோன்றுகின்றது. மேலும், அர்ஜுனன் சோகவியாகுல மனத்தை யுடையவனுதலால், மதுசூதநா; அரிசூதநா; என்று இரண்டுதரம் அழைத்தானுதலால் இது புநருக்தி யல்லவென்று அறியவேண்டும்.

---

శ్లో॥ గురూనహత్వాహిమహానుభావాం ।
శ్రేయోభోక్తుం భైక్ష్యమపీహలోకే ।
హత్వార్థకామాంస్తుగురూనిహైవ ।
భుంజీయభోగాన్రుధిరప్రదిగ్ధాన్॥ ౫॥

குருநஹத்வாஹிமஹாநுபாவாம் ।
ச்ரேயோபோக்தும்பைக்ஷ்யமபீஹலோகே ।
ஹத்வார்த்தகாமாம்ஸ்துகுருநிஹைவ ।
புஞ்ஜீயபோகாந்ருதிரப்ரதிக்தாந்॥

---

பதவுரை.

---

மஹாநுபாவாந் - மஹாத்மக்களான, குருந் - ஆசாரியர்களை அஹத்வா - கொல்லாமல், இஹலோகே - இந்தலோகத்தில், போக்தும் - புசித்தற்கு, பைக்ஷயமபி - பிச்சை யெடுத்துச் சம்பாதித்த பொருளும், ஶ்ரேயோஹி - சிரேஷ்டமானதல்லவா, குருந்ஸ்து - (மஹாநுபாவர்களான) ஆசாரியர்களை, ஹத்வா - கொன்று, ருதிரப்ரதிக்தாந் - ரக்தத்தால் வ்யாப்தங்களான, அர்த்தகாமாந் - அர்த்தகாமாத்மகங்களாகிய, போகாந்-சப்தாதிவிஷயங்களை, இஹைவ- இந்தவுலகத்திலேயே; புஞ்ஜீய - அநுபவிப்பார்கள்.

---

தாத்பர்யம்.

---

ஐயா, க்ருஷ்ணு; மஹாநுபாவர்களும் ஆசாரியர்களுமான பீஷ்மத்ரோணுதிகளைக் கொல்லாமல்பிச்சையெடுத்துச் சம்பாதித்ததிர

வியத்தை யுண்டு உயிர்வாழ்தலே சிரேஷ்டம், தர்மத்தை விட்டு, ஆசாரியர்களைக் கொன்று, அவர்களுடைய உதிரத்தைப் பார்த்து, அர்த்தகா மாத்மகங்களான போகங்களை அநுபவிப்பேனானால் இந்த வுலகத்தில் மாத்திரமேயன்றிப் பரலோகத்தில் அநுபவிக்கமாட்டேன் என்று தாத்பர்யம்.

---

ரஹஸ்யார்த்தம்.

---

அர்ஜுனா? பூர்வத்தில் பீஷ்மத்ரோணாதிகள் ஆசாரியர்களும் பூசிக்கத் தகுந்தவர்களுமானபோது ஆகட்டும், இப்பொழுது பூசிக்கத்தகுந்தவர் களென்றும் ஆசாரியர் களென்றும் சொல்வது உசிதமல்ல. மேலும்,

శ్లో॥ "గురోరప్యవలిప్తస్య । కార్యాకార్యమజానతః ।
ఉత్పథంప్రతిపన్నస్య । పరిత్యాగోవిధీయతే॥

குரோரப்யவலிப்தஸ்ய । கார்யாகார்யமஜாநதः ।
உத்பதம்ப்ரதிபந்நஸ்ய । பரித்யாகோவிதீயதே॥

(குருமர்யாதையைக் கடந்து, நன்மை தீமைகளை அறியாமல், துர்மார்க்கத்தில் பிரவேசித்து, துஷ்க்ருத்யங்களைச் செய்கிற ஆசாரியர்களையும பரித்யஜிக்கவேண்டும்) என்று ஸ்ம்ருதியில் சொல்லப்படுதலால், யுத்தகர்வமுள்ளவரும், அநியாயமாய் ராஜ்யத்தை அபகரிக்க எண்ணினவர்களும், சிஷ்யருக்கு த்ரோஹம்செய்ய நினைத்தவர்களும், யுக்தா யுக்த விவேக மில்லாதவர்களுமாகிய பீஷ்மத்ரோணாதியர் இப்பொழுது கொலைசெய்யத் தகுந்தவர்களே யன்றி பூஜிக்கத் தகுந்தவர்களல்லர் ஆகையால் நீ பீஷ்மத்ரோணாதியர் ஆசாரியர்கள் என்றெண்ணி அவர்களோடு யுத்தஞ்செய்தல் தகாதென்கிற கருத்துடனே சும்மாயிருத்தல் உசிதமல்லவென்று க்ருஷ்ணமூர்த்தி சொல்லுவரோ என்னவோ என்று நினைத்து அர்ஜுனன் இந்தவாக்யத்தைச் சொல்லுகிறானென்று தோன்றுகின்றது. மேலும் பிச்சையெடுத்துச் சம்பாதித்த பொருளை உண்டு உயிர்வாழ்தலே மேன்மையென்று சொல்லுதலால் க்ஷத்ரியர்களுக்குப்ராஹ்மண குலத்

துக்குத்தகுந்த பிக்ஷாஜீவனம் தகாத தர்மமாயினும் குருத்ரோகம் செய்து உயிர்வாழ்தலைக் காட்டிலும் சிறந்ததென்று தோன்றுகின்றது. மேலும் பீஷ்மத்ரோணாதியர் வேத வேதாங்கங்களைப் படித்தவர்களென்றும், தவம் ஆசாரம் முதலான சதாசாரங்களை யுடையவர்களென்றும், காலகாமாதிகளை ஸ்வாதீனம் செய்துகொண்டவர்களென்றும, மிகவும் புண்யாத்மாககளென்றும் இப்படிப்பட்டவர்களாகையாலேயே க்ருஷ்ணபகவானுடைய கருத்துக்கிணங்க கர்வமுடையவர்களென்று நினைத்து, பீஷ்மத்ரோணர்களைக் கொல்லுதல் உசிதமல்லவென்றும், யுத்தத்துக்கு வருதல் மாத்திரத்தாலேயே பீஷ்மத்ரோணர்களிடத்துள்ள யோக்யதை குறையவில்லை யென்றும் அறிவிக்கும்பொருட்டு மஹானுபாவர்களான ஆசாரியர்களென்று அருச்சுநன் சொன்னதாகத் தோன்றுகின்றது. மேலும் வேறுசிலர் இந்த ஶ்லோகத்தில்.

"హిమహానుభావాన."

ஹிமஹாநுபாவான்.

என்கிற இடத்தில், ஹிமஹாநுபாவான், (என்று. ஒருபதமாகப் பிரித்து, ஹிம - பனியை, ஹ - நசிக்கச்செய்கிற சூரியன் அல்லது அக்னிதேவன் என்கிற இவர்களுடைய, அநுபாவான் - சாமர்த்தியத்தைப் போன்றசாமர்த்தியத்தை யுடையவர்கள்),என்று அர்த்தம் சொல்லுகிறார்கள். இப்படிச் சொல்லுதலால் பீஷ்மத்ரோணர்கள் சூரியாக்நிகளுடைய சாமர்த்தியம் போன்றசாமர்த்திய முடையவர்களென்றும் அதிக ஒளியுள்ளவர்களென்றும் ஆகையாலேயே,

శ్లో॥ "ధర్మవ్యతిక్రమోదృష్ట। ఈశ్వరాణాంచసాహసం।
తేజీయసాంనదోషాయ। వహ్నేస్సర్వభుజోయథా"

"தர்மவ்யதிக்ரமோத்ருஷ்டா ஈஶ்வராணாஞ்சஸாஹஸம்
தேஜீயஸாம்நதோஷாய வஹ்னேஸ்ஸர்வபுஜோயதா"

(ஈஶ்வரரானவர்கள் தர்மத்தை அதிக்ரமித்தாலும், தேஜோவந்தர்கள் ஸாஹஸத்தை அவலம்பித்தாலும், ஸர்வபக்ஷகத்வத்தால் அக்நிதேவன் தோஷமில்லாதவன் ஆதல்போல தோஷமில்லாதவர்களாவார்கள்.) என்கிற ஸ்ம்ருதிப்ரமாணத்தால் யுத்தகர்வத்

தினால் தோஷமுள்ளவர்கள் ஆகவில்லையென்றும் ஆகையால்கொலை செய்யத்தகுந்தவர்க ளல்லரென்றும் பூஜிக்கத் தக்கவர்களே யென் றும் தோண்றுகின்றது. மேலும் அர்ச்சுன பூர்வகாலத்தில் பீஷ்மர் தர்மருடனே,

శ్లో॥ "అర్థస్యపురుషోదాసోదాసస్త్వర్థోనకస్యచిత్॥
ఇతిసత్యంమహారాజబద్ధోస్మ్యర్థేనకౌరవైః॥"

"அர்த்தஸ்யபுருஷோதா ஸோதாஸஸ்த்வர்த்தே நகஸ்யசித்
இதிஸத்யம்மஹாராஜ பத்தோர்ஸ்ம்யர்த்தேநகௌரவைஃ."

த்ரவ்யத்துக்கு புருஷன் தாஸனாகிறான். த்ரவ்யத்தின் பொரு ட்டு புருஷன் அந்நியருக்கு தாஸனாகிறான் அந்தவார்த்தை சத்ய மென்பதற்குச் சந்தேஹமில்லை. த்ரவ்யத்தால் நான் துரியோத னாதிகளுக்கு தாஸனானேன்) என்று சொல்லுதலால் பீஷ்மத்ரோ ணாதியர் த்ரவ்யலோபத்தால் தமது சரீரங்களை அந்நியருக்கு விக்ர யித்தவர்கள் ஆதலால் அன்னியாயமான யுத்தத்திற்கு வந்தார்கள். இப்படிப்பட்ட பீஷ்மத்ரோணர்களிடத்தில் பெருமை யெப்படியிரு க்கும்! இராது ஆதலால் பீஷ்மத்ரோணாதியர் கொலைசெய்யத்தகு ந்தவர்களே யென்று க்ருஷ்ணபகவான் சொல்லுவரோ என்னவோ என்றெண்ணி பீஷ்மத்ரோணாதிகள் எப்படிப்பட்டவர்க ளாயினும் எங்களுக்கு ஆசாரியர்களே யாதலால் நாங்கள் அவர்களைக் கொல் லத்தகாதென்று அறிவித்தற்பொருட்டு அருச்சுனன் ஆசாரியர்களை யென்று மறுபடியும் சொன்னானென்று தோன்றுகின்றது. மேலும், அர்த்தகாமங்கள் என்கையாலே பீஷ்மத்ரோணர்களை வதைசெய் தால் தர்மமோக்ஷங்கள் இல்லையென்று தோன்றுகின்றது. மேலும், சிலர் இந்தசுலோகத்திலுள்ள அர்த்தகாமாந் என்கிறபதத்தை, குரூந் என்பதற்கு விசேஷண்மாக்கி (அர்த்தத்தில் விருப்பமுள்ள ஆசாரி யர்களை) என்று அர்த்தம் சொல்லுகிறார்கள். இப்படி சொல்வதி னாலும் மேலே எழுதின பீஷ்மருடைய வசநத்தை இவ்விடத்தில் உதஹரிக்க அவகாசமுள்ளதென்று அறியவேண்டும்.

శ్లో॥ నచైతద్విద్మఃకతరన్నోగరీయో ।
యద్వాజయేమయదివానోజయేయుః ।

యా నేవహత్వానజిజీవిషామ ।
స్తేవస్థితాః ప్రముఖేధార్తరాష్ట్రాః॥ ౬॥.

நசைதத்வித்மஃ கதரந்நோகரீயோ
யத்வாஜயே மயதிவாநோஜயேயுஃ
யாநேவஹத்வாநஜி ஜீவிஷாம
ஸ்தேவஸ்த்திதாஃ ப்ரமுகேதார்த்தராஷ்ட்ராஃ ||

பதவுரை.

கிஞ்ச - இவ்வளவேயல்ல, (வயம் - நாம்.) ஜயேமயத்வா - வெல்லுவோமோவெல்லமாட்டோமோ(அன்றி) தார்த்தராஷ்ட்ராஃ- பீஷ்மாதிகள், நஃ - நம்மை, ஜயேயுர்யதி-வெல்லுவரோ என்னவோ, ஏதயோஃ - இந்தவெற்றி தோல்வி இரண்டினுள், நஃ - நமக்கு, கதரத் - எது, கரீயஃ - சிரேஷ்ட்டமானதோ, ஏதத் - இந்த ஜயாபஜய ரூபமான காரியத்தை, நவித்மஃ - அறியோம், யாந் - எந்தபீஷ்மாதிகளோ, ஹத்வா - கொன்று, நஜிஜீவிஷாமஃ - சீவிக்கவிரும்போமோ, கத - அப்படிப்பட்ட பீஷ்மாதிகள், ப்ரமுகே-அக்ரபாகத்தில், அவஸ்த்திதாஃ - வந்திருக்கிறுர்கள்.

தாத்பர்யம்.

ஐயா ; க்ருஷ்ணு ; இந்தயுத்தத்தில் நாமேவெற்றியை யடைவோமோ ; அன்றி துரியோதநாதியர்களே வெற்றியை யடைவார்களோ ; இந்தவிஷயத்தைநாம் அறிந்துகொள்ளாமலிருக்கிறேம், மேலும், எந்த பீஷ்மாதிகளைக் கொன்ற பிறகு நாம் ஜீவிக்கமாட்டோமோ; அப்படிப்பட்ட பீஷ்மாதிகள் இப்பொழுது யுத்த சந்நத்தராய் நமக்கெதிரில் வந்திருக்கிறுர்கள், ஆகையால் இப்பொழுது எனக்கு ஒன்றும் தோன்றவில்லை யென்று தாத்பர்யம்.

ரஹஸ்யார்த்தம்.

ஐயா; க்ருஷ்ணு; ஒருவேளை நாம் அதர்மத்தை அங்கீகரித்தாலும் நமக்கு ஜயா பஜயங்களில் எது உத்தமமோ, தெரியவில்லை,

இந்த விஷயத்தைத் தெரிவியும் என்று அர்ஜுநன் இந்த வாக்யத்தைச் சொல்லுகிறான். மேலும், நாம்யாரைக் கொன்றபிறகு ஜீவிக்கமாட்டோமோ, அப்படிப்பட்ட பீஷ்மாதிகள் நமக்கெதிரில் வந்திருக்கிறார்கள் என்கையாலே நாம் ஜெயித்தாலும் ப்ரயோஜநமில்லையென்றும் யுத்தத்தைச் செய்வதைப் பார்க்கிலும் பிக்ஷையெடுத்துண்டு ஜீவித்தலே உத்தமமென்றும், அர்ஜுநன் நினைத்ததாகத் தோன்றுகின்றது. வேறுசிலர், இந்த சுலோகத்திலுள்ள.

"న చైతద్విద్మఃకతరన్నో గరీయః"

"நசைதத்வித்மஃகதரந்நோகரீயஃ"

என்பதற்கு மேலே சொல்லப்பட்ட பிக்ஷாங்க யுத்தங்களில் எது உத்தமமோ, எங்களுக்குத் தெரியவில்லையென்று தாத்பர்யம் சொல்லுகிறார்கள், இப்படி சொல்லுகிறவர்களுடைய மதத்தில், அர்ஜுநா; பிக்ஷையெடுத்துச் சம்பாதித்த பொருளையுண்டு உயிர்வாழ்தல் க்ஷத்ரியருக்குத் தகுந்ததர்மமல்ல. க்ஷத்ரியருக்கு ஸ்வதர்மமான யுத்தம் சிரேஷ்ட்டமான தென்று சுருதிஸ் மிருதிகளில் சொல்லப்பட்ட தாதலால், நீபிக்ஷைச்சோற்றை யுண்டு ஜீவிப்பேனென்றெண்ணாமல் யுத்தம்செய்யக்கடவாயென்று க்ருஷ்ணர் சொல்லுவரோ என்னவோ என்றுநினைத்து அர்ஜுநன் இந்த வாக்கியத்தைச் சொன்னானென்று அறியவேண்டும். மேலும், நாமே வெல்லுவோமோ பீஷ்மாதிகளே வெல்லுவார்களோ என்கையாலே இருதிறத்தாரும் சமானமான பலமுள்ளவர்களேயென்று ஆகையாலேயே அர்ஜுநனனுக்கு சந்தேஹம் உண்டாயிற்றென்றும் அறியவேண்டும் மேலும் இவ்விதமாக இதுவரைக்கும் சொல்லப்பட்ட க்ரந்தத்தில் ப்ரஹ்மஜ்ஞானோப தேசத்தை அடையத்தகுந்த அதிகாரியின் குணங்களாகிய நித்யா நித்யவஸ்து விவேகம் (இதுநசிக்காது இது நசிக்கும் என்னும்அறிவு) முமுக்ஷுத்வம் (மோக்ஷவிருப்பம்) சமாதிஷட்கசம்பத்தி (சமம், தமம், உபரதி, திதிக்ஷை, சிரத்தை, சமாதானம் என்கிற அறுவகைசம்பத்து) இஹாமுத்ர பலபோக விராகம் (இகலோக சுகத்திலும் பரலோக சுகத்திலும் விருப்பமில்லா திருத்தல்) என்கிறநான்கும் சொல்லப்பட்டன வென்று அறியவேண்டும். மேலும் இந்த நான்கு குணங்களும் எந்தெந்த இடங்களில் சொல்லப்பட்டனவோ அதை விவரிக்கிறேன்.

"నచశ్రేయోనుపశ్యామిహత్వాస్వజనమాహవే"

"நசஸ்ரேயோநுபஸ்யாமி ஹத்வாஸ்வஜநமாஹவே".

என்கிற முதலாமத்தியாயத்திலுள்ள முப்பத்தொன்றாவது சுலோகத்தில் போரில் இறந்தவன் ஸர்வ கர்ம சந்யாசியான ப்ரஹ்மஜ்ஞானியடைகிற லோகத்தை அடைவானென்று சொல்லுதலால்.

శ్రు॥ "అన్యచ్ఛ్రేయోన్యదుతైవప్రేయః"

"அந்யச்ச்ரேயோந்ய துதைவப்ரேயஃ"

(இதரமான ஞானம் ஸ்ரேயஸ்ஸாதநம், மேலும் இதரமான கர்மம் ப்ரேயஸ்ஸாதநம்,) என்கிற ஸ்ருதியில் சொல்லப்பட்ட மோக்ஷமென்கிற பெயருள்ள ஸ்ரேயசு சொல்லப்படுகையாலே அர்த்தத்தின்வழியாய் நித்யா நித்யவஸ்து விவேகம் காட்டப்பட்டதாயிற்று. மேலும்,

"నకాంక్షేవిజయంకృష్ణ"

"நகாம்க்ஷேவிஜயம் க்ருஷ்ண"

என்கிற முதலாமத்தியாயத்திலுள்ள முப்பத்திரண்டாவது சுலோகத்திலுள்ள இந்த உலகசுகத்தில் ஆசையில்லையென்று சொல்லப்பட்டது.

"అపిత్రైలోక్యరాజ్యస్యహేతోః"

"அபித்ரைலோக்ய ராஜ்யஸ்யஹேதோஃ"

என்கிற முதலத்யாயத்திலுள்ள முப்பத்தைந்தாவது சுலோகத்தில் பரலோகசுகத்தில் ஆசையில்லையென்று சொல்லப்பட்டது.

"నరకేనియతంవాసః"

"நரகேநியதம்வாஸஃ".

என்கிற முதலாமத்தியாயத்திலுள்ள நாற்பத்து நான்காவது சுலோகத்தில் ஆத்மாஸ்தூல சரீரத்தைக் காட்டிலும் வேறாயிருக்கிறானென்று ஆத்மஞானம் சொல்லப்பட்டது.

"కినోరాజ్యేనగోవింద"

"கிந்நோராஜ்யேநகோவிந்த".

என்கிற முதலா மத்யாயத்திலுள்ள மூப்பத்திரண்டாவது சுலோகத்தில் சமம்சொல்லப்பட்டது.

"యద్యప్యేతేనపశ్యన్తి"

"யத்யப்யேதேநபஶ்யந்தி".

என்கிற முதலாவதத்யாயத்திலுள்ள முப்பத்தெட்டாவது சுலோகத்தில் லோபகுண மில்லையென்று சொல்லப்பட்டது.

"తన్మే క్షేమతరంభవేత్"

"தந்மேக்ஷேமதரம்பவேத்".

என்கிற முதலாமத்யாயத்திலுள்ள 46 - வது சுலோகத்தில் திதிக்ஷை சொல்லப்பட்டது. ஆகையால் இவையெல்லாம் சந்நியாசத்துக்கு சாதநங்களென்று அறியவேண்டும். மேலும், இந்த இரண்டாமத்தியாயத்தில்

"శ్రేయోభోక్తుంభైక్ష్యమపీహలోకే"

"ஶ்ரேயோபோக்தும்பைக்ஷ்யமபீஹலோகே"

என்கிற ரு-வது சுலோகத்தில் சந்நியாசம் பிக்ஷாசர்யத்தால் உபலக்ஷிதமாய்ப்ரதி பாதிக்கப்பட்டதென்று அறியவேண்டும். இவ்விதமாய் அர்ஜுநன் சாதந சதுஷ்டய சம்பத்தியுள்ளவ னாதலால் ப்ரஹ்மஜ்ஞாநோப தேசத்தை அடையத்தகுந்தவன் என்றும், இப்படிப்பட்ட குணங்களுள்ளவனுக்கே ப்ரஹ்மஜ்ஞாநத்தை உபதேசிக்கவேண்டுமென்றும் அறியவேண்டும்.

శ్లో॥ కార్పణ్యదోషోపహతస్వభావః ।
పృచ్ఛామిత్వాంధర్మసమ్మూఢచేతాః ।
యచ్ఛ్రేయస్స్యాన్నిశ్చితంబ్రూహితన్మే ।
శిష్యస్తేహంశాధిమాంత్వాంప్రపన్నమ్॥ ౭॥

கார்ப்பண்யதோஷோ பஹதஸ்வபாவஃ
ப்ருச்சாமித்வாம் தர்மஸம்மூடசேதாஃ
யச்ச்ரேயஸ்யாந் நிஶ்சிதம்ப்ரூஹிதந்மே
ஶிஷ்யஸ்தேஹம்ஶாதி மாம்த்வாம்ப்ரபந்நம்.

## பதவுரை.

கார்ப்பண்ய - க்ருபணத்வம் என்கிற, தோஷ - தோஷத்தால், உபஹத - அடிக்கப்பட்ட, ஸ்வபாவஃ - சௌரியலக்ஷணங்களுள்ள, அஹம் - நான், தர்மஸம்மூட சேதாஸ்ஸந் - தர்மம் விஷயமாய் ஞானமில்லாத மனத்தையுடையேனாகி, த்வாம் - உன்னை, ப்ருச்சாமி - கேட்கிறேன், மே - எனக்கு, யத் - எது, நிஸ்சிதம் - நிச்சயிக்கப்பட்ட, ஶ்ரேயஃ - சிரேயசு, ஸ்யாத் - ஆகுமோ, தத் - அதை, ப்ரூஹி - சொல்லக்கடவாய், தே - உனக்கு, அஹம் - நான், ஶிஷ்யஃ - சிஷ்யன், த்வாம் - உன்னை, ப்ரபந்நம் - சரணடைந்த, மாம் - என்னை, ஶாதி - சிக்ஷைசெய்யும்.

## தாத்பர்யம்.

ஐயா ; க்ருஷ்ண ; நான்க்ருபணத்வம் என்கிற தோஷத்தால் அடிக்கப்பட்ட ஸ்வபாவமுடையேன், ஆதலால்தர்மம் இதுவென்று நிர்ணயிக்கமாட்டாம லிருக்கிறேன். ஆகையால் நான் இப்பொழுது எதுசெய்யத் தகுந்ததென்றும் தெரியாமலிருக்கிறேன், எந்தக்காரியம் கீர்த்திக்குக் காரணமென்று நிர்ணயிக்கப்பட்டதோ ; அப்படிப் பட்டதை எனக்குச் சொல்லும், நான் உனக்கு சிஷ்யன், மேலும் உன்னைச் சரணடைந்தவன். ஆகையால் என்னை சிக்ஷைபண்ணும் என்று தாத்பர்யம்.

## ரஹஸ்யார்த்தம்.

சம்சார சமுத்ரத்தில் முழுகியிருந்த துக்கங்களை அநுபவிக்க மாட்டாமல் சம்சாரத்தில் விரக்தியடைந்து சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட பிரகாரமாக ஆசாரியனிடத்திற் போனவனுக்கு ப்ரஹ்ம வித்தையை யடைவதற்கு அதிகார முண்டாதலால், பீஷ்மாதிகளோடு யுத்தம்பண்ண நேரிட்டதனால் உண்டான விசநத்தால் அர்ஜுநன்

శ్లో॥ "వ్యుత్థాయాథభిక్షాచర్యంచరన్తి"
"வ்யுத்தாயாதபிக்ஷா சர்யம்சரந்தி॥"

(தாபத்ரயத்தைவிட்ட பிறகு பிக்ஷாசர்யத்தை அவலம்பிக்க வேண்டும்) என்கிற சுருதியில் சொல்லப்பட்ட பிக்ஷாசர்யத்தில்விருப்பதனைக்காட்டி, பிறகு சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட பிரகாரம் ஆசாரியனாகிய உன்னிடத்திற்கு வந்தேனென்று இந்த சுலோகத்தால் க்ருஷ்ணபகவானோடு சொல்லுகிறான். மேலும், க்ருபணத்வமென்கிற தோஷத்தால் அடிக்கப்பட்ட மனமுடையவன் என்று சொல்லுதலால், அர்ஜுனன்கொஞ்சமாகிலும் திரவியம்செலவாய்ப் போகக்கூடாதென்று எண்ணுகிறவன்போல மிகவும் லோபகுணமுள்ளவன் என்று சொன்னதாக அறியவேண்டும். மேலும்,

శ్రు॥ "యోవా ఏతదక్షరంగార్గ్యవిదిత్వాస్మాల్లో
కాత్ప్రైతిసకృపణః"

"யோவா ஏததக்ஷரம்கார்க்ய விதித்வாஸ்மால்லோகாத்ப்ரைதி ஸக்ருபணః॥

(எவன் அக்ஷரமாகிய பரப்ரஹ்மத்தை அறியாமலே இந்தவுலகத்திலிருந்து மரணமடைகிறானோ அவன் க்ருபணன் (நீசன்) எனப்படுவான். என்கிற சுருதியில் சொல்லப்பட்ட பிரகாரம் அர்ஜுனனுக்கு ப்ரஹ்மஜ்ஞான மில்லையென்றும், ஆகையாலேயே தான் க்ருபணத்வ முள்ளவனானேன் என்றும் சொன்னதாக அறியவேண்டும். மேலும், அர்ஜுனன் கார்ப்பண்யம் என்கிற தோஷத்தால் அடிக்கப்பட்ட ஸ்வபாவமுடையேன் என்கையாலே அர்ஜுனன் இவர் என்னவனொன்றும், நான் இவர்களுக்கு வேண்டியவனென்றும் மமதை என்கிற தோஷத்தால் விவேகமில்லாதவனாய், யுத்தம்பண்ணுதல் என்கிற க்ஷத்ரியதர்மத்தை விட்டுவிட்டவனானானென்று தோன்றுகின்றது. மேலும், தர்மம் விஷயமாய் ஞானமில்லாத மனமுடையவனாய்க் கேட்கிறேன் என்கையாலே அர்ஜுனன் தர்மம் விஷயமாய நிர்ணயிக்கத்தகுந்த பிரமாணம் இல்லாமற் போதலால் பீஷ்மாதிகளைக் கொல்லுதல் தர்மமா; பீஷ்மாதிகளைக் காப்பாற்றுதல் தர்மமா; அன்றி முன்போலவே அரண்யத்தில் இருப்பதே தர்மமா; என்கிற சந்தேகங்கள் உள்ளவனானானென்றும், ஆகையாலேயே எந்தக்காரியம் நல்லதென்று வினவினானென்றும் அறியவேண்டும். மே

லும் எதுஶ்ரேயசு என்று நிச்சயிக்கப்பட்டதோ அதைச்சொல்லும் என்கையாலே,

శ్లో॥ "దుఃఖత్రయాభిఘాతాజ్జిజ్ఞాసా తదపఘాతకే హేతౌ ।
దృష్టే సాపార్థా చేన్నైకాంతాత్యన్తతోఽభావాత్॥
దృష్టవదానుశ్రవికస్సహ్యవిశుద్ధిక్షయాతిశయయుక్తః ।
తద్విపరీతశ్శ్రేయాన్ వ్యక్తావ్యక్తజ్ఞవిజ్ఞానాత్"

"துஃகத்ரயாபிகாதாஜ்ஜிஜ்ஞாஸா ததபகாதகே ஹேதௌ
த்ருஷ்டே ஸாபார்த்தா சேந்நைகாந்தாத்யந்ததோபாவாத்॥
த்ருஷ்டவதாநுஶ்ரவிகஸ்ஸஹ்யவிஶுத்திக்ஷயாதிஶயயுக்தஃ।
தத்விபரீதஶ்ஶ்ரேயாந்வ்யக்தாவ்யக்தஜ்ஞவிஜ்ஞாநாத்॥

(மூன்றுவிதமாகிய துக்கங்கள் உண்டானபோது அவற்றைப்
போக்கிக் கொள்ளத் தகுந்த காரணத்தை அறியவேண்டு மென்ற
விருப்பமுண்டாகும், பிறகு அப்படிப்பட்ட காரணம் காணப்பட்
டாலும், அதனால் அந்த துக்கம் போகாதபக்ஷத்தில் ப்ரயோஜந
மில்லை. மேலும். இந்தவுலகத்தில் உண்டாகிறவிஷயங்கள்போல, பர
லோகத்திலும் உண்டாகுமென்று வேதம் முதலியவற்றால் போதிக்
கப்பட்டுக் கொண்டிருக்கிற விஷயங்களும் வ்ருத்திக்ஷயங்களை யுடை
யனவாகி யிருக்கின்றன, ஆத்மாநாத்ம விவேகத்தால் உண்டான
விஜ்ஞாநத்தால் மேலே சொல்லப்பட்டவைகளைப் பார்க்கிலும்
விபரீதமாகிய ஶ்ரேயஸ்ஸு (மோக்ஷம்) உண்டாகும், என்கிற ஸ்ம்
ருதியில் சொல்லப்பட்ட பிரகாரமாய் ஐகாந்திகமும் (சாதநமுண்
டானபிறகு அவசியமாய் உண்டாவதும்) அத்யந்திகமும் (பிறந்த
பிறகு நசிக்காததும்) புருஷார்த்தரூபமும் ஆகிய மோக்ஷம் நல்ல
தென்று நிர்ணயிக்கப்பட்டதோ; அன்றி இந்த இரண்டுவகையு மல்
லாதது நிர்ணயிக்கப்பட்டதோ; எனக்குத்தெரியச் சொல்லவே
ண்டு மென்றானென்று தோன்றுகின்றது, (அதாவது - ஔஷதம்
கொடுப்பதனால் ஒவ்வொருவேளை வியாதி நசிக்காமற் போவதும்
உண்டு, ஒவ்வொருவேளை வியாதி நீங்குவதும் உண்டு, நீங்கினாலும்
மறுபடியும் வியாதியுண்டாகும். ஆகையால் ஔஷதம் வியாதியை
நீக்கத்தகுந்த காரணமானாலும் ஒரோவொரு தடையினால் அதனால்

எல்லாக்காலங்களிலும்ரோகநிவர்த்தி (சௌக்கியம்) உண்டாகாது. இப்படியே ஸ்வர்க்கத்தை யடைவதற்கு யாகம் காரணமானாலும் தடையினால் ஸ்வர்க்கம் உண்டாகாமற் போவதும் உண்டு, ஒருவேளை ஸ்வர்க்கமுண்டானாலும் கொஞ்ச நாளையில் அந்தஸ்வர்க்கம் நசிக்கும், ஆகையால் ஔஷதயாகங்கள் இகலோக பரலோக சுகங்களுக்கு ஐகாந்திகங்களும் அத்யந்திகளும் ஆகிய காரணங்கள் ஆகா. ஆகையால் ஐகாந்திகமும் அத்யந்திகமும் ஆகிய மோக்ஷரூப புருஷார்த்தத்தைச் சொல்லவேண்டுமென்று அர்ஜுநன் கேட்டானென்று அறியவேண்டும்) மேலும், அர்ஜுநா; நீ எனக்கு சிநேகனேயன்றி சிஷ்யனல்ல, ஆகையால் உனக்கு நான்எப்படி போதிப்பேனென்று க்ருஷ்ணபகவான் கேட்பரோ என்னவோ என்று எண்ணி, நான்சிநேக னல்லேன் என்றும், உனக்குள்ளஜ்ஞாநத்தைப் பார்க்கிலும் குறைந்தஞானத்தை யுடையேனாதலால் சிஷ்யன் என்றும், என்னைக்கருணையால் விவேகமுள்ளவனாகச் செய்யவேண்டும் என்றும் தெரிவிக்கும்பொருட்டு உனக்கு சிஷ்யனும் சரணடைந்தவனும் ஆகிய என்னை சிக்ஷியுமென்று அர்ஜுநன் சொன்னானென்று அறியவேண்டும். மேலும், இந்த சுலோகார்த்தத்தால்.

శ్రు॥ తద్విజ్ఞానార్థంసగురుమేవాభిగచ్ఛేత్ ।
సమిత్పాణిఃశ్రోత్రియంబ్రహ్మనిష్ఠం ।
భృగుర్వై వారుణిర్వరుణంపితరముపససార॥

"தத்விஜ்ஞாநார்த்தம்ஸகுருமேவாபிகச்சேத் ।
ஸமித்பாணிஃஸ்ரோத்ரியம்ப்ரஹ்மநிஷ்டம் ।
ப்ருகுர்வைவாருணிர்வருணம்பிதரமுபஸஸார॥

(சாதநசதுஷ்டய சம்பத்தியுள்ளவன் தர்ப்பைகளைக் கையில் வைத்துக் கொண்டு, சுரோத்ரியனும், ப்ரஹ்மநிஷ்டனுமாகிய ஆசாரியனிடத்துக்கு ப்ரஹ்மஜ்ஞாநத்தை அறிந்து கொள்வதற்குப் போகவேண்டும், வருணனுக்கு சம்பந்தியாகிய ப்ருகுதந்தையாகிய வருணதேவனிடத்துக்கு ப்ரஹ்மஜ்ஞாநத்தின் பொருட்டு மேற்சொல்லப்பட்ட பிரகாரமாகப் போனான்) என்கிற சுருதியர்த்தம்

சொல்லப்பட்டதென்றும், அர்ஜுநன் சாதநசதுஷ்டய சம்பத்தி யுள்ளவனும், பரமாசாரியனுகிய ஸ்ரீக்ருஷ்ணபகவானை ஆசாரியனாகக் கொண்டானென்றும், ஆகையால் ஸ்ரீக்ருஷ்ணபகவான் இனிமேல் ப்ரஹ்மஜ்ஞாநத்தை உபதேசிப்பாரென்றும், உலகத்தி லுள்ளவர்கள் எல்லாரும சாதந சதுஷ்டய சம்பத்தியுண்டான பிறகு ஆசாரியனை பஜிக்கவேண்டு மென்றும் அறிந்துகொள்ள வேண்டும்.

---

శ్లో॥ నహిప్రపశ్యామిమమాపనుద్యా ।
ద్యచ్ఛోకముచ్ఛోషణమిన్ద్రియాణామ్ ।
అవాప్యభూమావసపత్నమృద్ధం ।
రాజ్యంసురాణామపిచాధిపత్యమ్॥ ౮॥

நஹிப்ரபஸ்யாமிமமாபநுத்யா ।
த்யச்சோகமுச்சோஷணமிந்த்ரியாணும் ।
அவாப்யபூமாவஸபத்நம்ருத்தம் ।
ராஜ்யம்ஸுராணுமபிசாதிபத்யம்॥

---

### பதவுரை.

யத் - எந்தஶ்ரேயஸு, மம - என்னுடைய, இந்த்ரியாணும் - இந்திரியங்களுக்கு, உச்சோஷணம் - சந்தாபத்தை யுண்டாக்குகிற, ஶோகம் - துக்கத்தை, அபநுத்யாத் - போக்குமோ, (தத் - அப்படிப்பட்ட ஶ்ரேயஸ்ஸை) பூமௌ - பூலோகத்தில், அஸபத்நம் - சத்ருக்களில்லாததும், ருத்தம் - சகல சம்ருத்திகளும் உள்ளதும் ஆகிய, ராஜ்யம் - ராஜ்யத்தை, சுராணும் - தேவர்களுடைய, ஆதிபத்யம் - ப்ரபுத்வத்தை, (தேவேந்த்ர பதவியை) அவாப்யாபி - அடைந்தும், நஹிப்ரபஸ்யாமி - பார்க்கமாட்டேன்.

---

### தாத்பர்யம்.

ஐப்ா; க்ருஷ்ணு; பூலோகராஜ்யம் கிடைத்தாலும், தேவலோ கத்தில் இந்த்ரபதவி கிடைத்தாலும், என்னுடைய இந்த்ரியங்களு

க்கு சந்தாபத்தை யுண்டாக்குகிற இப்பொழுதைய துக்கம்போ காது. ஆதலால், பூலோகத்திலும் தேவலோகத்திலுமுள்ள ப்ர புத்வத்தைக் காட்டிலும் அதிகமான ஸ்ரேயஸ்ஸை எனக்குச் சொ ல்லக்கடவை, அப்படிப்பட்ட ஸ்ரேயஸ்ஸு எனக்குக் காணப்பட வில்லே, ஆகையால் அதைபோதித்து என் துக்கத்தை நீக்கவேண் டும் என்று தாத்பர்யம்.

---

## ரஹஸ்யார்த்தம்.

அர்ஜுநா; நீவேத வேதாங்கங்கள் எல்லாவற்றையும் படித்தவன், ஆகையால் நீயேதகுந்த ஸ்ரேயஸ்ஸை விசாரித்துத் தெரிந்துகொள் ளக்கடவை, எனக்கு ஏன்சொல்லுகிறாய், என்று க்ருஷ்ணர் கேட்ப ரோ என்னவோ என்று நினைத்து, அர்ஜுநன் என்னுடைய இந்த்ரி யங்களின் சந்தாபத்தை நீக்குகிற ஸ்ரேயஸ்ஸு எனக்குக் காணப் படவில்லே யென்றானென்று அறியவேண்டும். மேலும் இப்படி சொல்லுதலால்.

శ్రు॥ “సోహంభగవశ్శోచామి, తంమాభగవాంచ్ఛోకస్యపారం తారయతు”

“ஸோஹம்பகவஶ்ஶோசாமி, தம்மாபகவாம்சோகஸ்யபாரம் தாரயது॥

(ஓபகவானே; அப்படிப்பட்ட நான் துக்கிக்கிறேன், ஆகையால் பகவானுன நீஎன்னைத் துக்கத்தினின்றும் விலக்கவேண்டும்) என் கிற சுருதியர்த்தம் சொல்லப்பட்ட தென்றும், மோக்ஷமடைய நினைத்தவன் ஆசாரியனிடத்துக்குப்போய், என் துக்கத்தை நீக்க வேண்டுமென்று கேட்கவேண்டு மென்றும், தான் எவ்வளவு பண் டிதனானாலும் சதாசாரியனுடைய உபதேசமில்லாமல் தரிக்கமாட் டானென்றும், அறியவேண்டும். மேலும், அர்ஜுநா; இந்தயுத்தத் தில் ஜெயித்தாயானால் சகல பூமண்டலாதி பத்தியமும் உண்டா கும், அல்லது நீயுத்தத்தில் மரணமடைந்தால் ஸ்வர்க்கலோக சுகங் களைப்பெறுவாய், ஆகையாலே உன் துக்கம் நசிப்பதற்கு ஜயா பஜய ங்கள் இரண்டும் காரணங்களா யிருக்கின்றன, ஆகையால் யுத்தம்

செய்யக் கடவாயென்று ஸ்ரீக்ருஷ்ணபகவான் சொல்லுவரோ என்னவோவென்று நினைத்து, அர்ஜுநன் எனக்கு பூலோகராஜ்யம் உண்டானாலும், தேவேந்த்ரபதவி உண்டானாலும் என்துக்கம் போகாதென்றுனென்று அறியவேண்டும். இப்படிசொல்லுதலால்.

శ్రు॥ "తద్యథేహకర్మచితో లోకః క్షీయతే, ఏవమేవాముత్రపుణ్య
చితో లోకః క్షీయతే"
"యత్కృతకంతదనిత్యమ్"

"தத்யதேஹகர்மசிதோலோகஃக்ஷீயதே, ஏவமேவாமுத்ரபுண்
யசிதோலோகஃக்ஷீயதே.
யத்க்ருதகம்ததநித்யம்".

(கர்மத்தால் சம்பாதிக்கப்பட்ட இந்தவுலகத்திலுள்ள விஷயங்கள் எவ்விதமாய் நசிக்கின்றனவோ அவ்விதமாகவே புண்யத்தால் சம்பாதிக்கப்பட்டவையும பரலோகத்தில் உண்டாவனவும் ஆகிய விஷயங்களும் நசிக்கும், எதுசெய்யப் படுமோ அதுநசிக்கும்) என்கிற சுருதியினுடையவும், அநுமாநப்ரமாணம் (காரணத்தால் காரியத்தை நிச்சயித்தல் என்கிற ப்ரமாணத்தினுடையவும் அர்த்தம் தெரிவிக்கப்பட்ட தென்றும், உண்மையாய் இந்த வுலகத்திலுள்ள சுகதுக்கங்களைப் போலவே பரலோகத்திலுள்ள சுகதுக்கங்களும் நசிக்குமென்றும், ஆகையால் மோக்ஷத்தை யடைய நினைத்தவன் இஹாமுத்ர பலபோக விராகன் (இந்தவுலக சுகங்களிலும் பரலோகசுகங்களிலும் விருப்பமில்லாதவன்) ஆகவேண்டுமென்றும், இந்தவுலகசுகத்தைப்போல ஒருவேளை பரலோகசுகத்தை அநுபவிக்கும்போது கொஞ்சமாகிலும் துக்கமில்லாததா யிருந்தாலும் அது நசித்துப் போகும்போது மிகுந்த துக்கமுண்டாகு மென்றும்; ஆகையால் இப்படிப்பட்டதை விரும்பாமல் மோக்ஷசுகத்தையே விரும்பவேண்டு மென்றும், அறிந்துகொள்ள வேண்டும். மேலும், இந்த சுலோகார்த்தத்தால் முமுக்ஷுவுக்கு (மோக்ஷவிருப்ப முள்ளவனுக்கு) முக்கியமா யிருக்கவேண்டிய இஹாமுத்ர பலபோக விராகம் காட்டப்பட்டதென்றும், அர்ஜுநன் இப்படிப்பட்டவனுனென்றும் அறியவேண்டும்.

### சஞ்சயன் சொல்வது.

శ్లో॥ ఏవముక్త్వాహృషీకేశం । గుడాకేశఃపరంతపః।
నయోత్స్యఇతిగోవింద । ముక్త్వాతూష్ణీంబభూవహ॥ ౯॥

ஏவமுக்த்வாஹ்ருஷீகேஶம் । குடாகேஶஃபரந்தபஃ
நயோத்ஸ்யஇதிகோவிந்த । முக்த்வாதூஷ்ணீம்பபூவஹ॥

### பதவுரை.

பரந்தபஃ - பகைவரைத் தவிக்கப்பண்ணுகிறவனும், குடாகேஶஃ - ஆலசியத்தை வென்றவனும் ஆகிய அர்ஜுநன், ஹ்ருஷீகேஶம் - இந்த்ரியப்ரேரகனான க்ருஷ்ணபகவானுடன், ஏவம் - இந்த ப்ரகாரமாக, உக்த்வா - சொல்லி, புநஃ - மறுபடியும், நயோத்ஸ்யே - யுத்தம்செய்ய மாட்டேன், இதி - இப்படியென்று, கோவிந்தம் - (வேதலக்ஷணமாகிய வித்தையை அறிந்த) க்ருஷ்ணபகவானுடன், உக்த்வா - சொல்லி, (ததஃ - பிறகு) தூஷ்ணீம்பபூவஹ - சும்மா இருந்தான்.

### தாத்பர்யம்.

சத்ருக்களைத் தவிக்கச்செய்பவனும், ஆலசிய மில்லாதவனுமாகிய அர்ஜுநன் இவ்விதமாக சர்வேந்த்ரிய நியாமகனான க்ருஷ்ணபகவானுடன் சொல்லி, அவ்வளவில் சும்மா இராமல் மறுபடியும் நான் யுத்தம் பண்ணமாட்டே னென்று சர்வஜ்ஞனான கோவிந்தனுடன் சொல்லி, சும்மா இருந்தான் என்று தாத்பர்யம்.

### ரஹஸ்யார்த்தம்.

பிறகு, அர்ஜுநன் என்னசெய்தானென்று த்ருதராஷ்ட்ரன் கேட்பானென்றெண்ணி சஞ்சயன் இந்த வாக்யத்தைச் சொன்னானென்று அறியவேண்டும். மேலும் அர்ஜுநன் இந்தக்காலத்தில் ஆலசியம் (இளைப்பினால்வந்த சோம்பல்) உள்ளவன் ஆனாலும், தாபத்தை யுடையவனானாலும், இந்த இரண்டு குணங்களும் காலவசத்

தால் நேரிட்டனவென்றும், இயற்கையாய் அர்ஜுனனுக்கு இளைப்பும் தாபமும் இல்லையென்றும் தெரிவிக்கும் பொருட்டு ஆலசியத்தை வென்றவனென்றும், சத்ருக்களைத் தபிக்கப் பண்ணுகிறவனென்றும் சொல்லப்பட்டா னென்று அறியவேண்டும். மேலும் பகவானான வாசுதேவனுக்கு அர்ஜுனனுடைய சோக மோஹங்களைப் போக்கத்தகுந்த சாமர்த்தியமுள்ளதென்று தெரிவிக்கும் பொருட்டு, சர்வாந்தர்யாமி யென்றும், சர்வஜ்ஞன் என்றும் தெரிவிக்கத்தகுந்த ஹ்ருஷீகேஸ கோவிந்தபதங்களை உபயோகித்ததாக அறியவேண்டும்.

---

శ్లో॥ తమువాచహృషీకేశః । ప్రహసన్నివభారత।
సేనయోరుభయోర్మధ్యే । విషీదన్తమిదంవచః॥ ౧౦॥

தமுவாசஹ்ருஷீகேஸஃ । ப்ரஹஸந்நிவபாரத
ஸேநயோருபயோர்மத்யே । விஷீதந்தமிதம்வசஃ॥

---

பதவுரை.

---

ஹேபாரத-ஒத்ருதராஷ்ட்ரனே, உபயோஃ-இரண்டாகிய, ஸேநயோஃ - சேனைகளுடைய, மத்யே - நடுவில், விஷீதந்தம் - துக்கித்துக்கொண்டிருக்கிற, தம் - அந்த அர்ஜுனனைக் குறித்து, ஹ்ருஷீகேஸஃ-சர்வேந்த்ரியப்ரேரகனான ஸ்ரீக்ருஷ்ணபகவான், ப்ரஹஸந்நிவ-சிரித்துக்கொண்டிருந்து, இதம் - இந்த, வசஃ-வாக்யத்தை, உவாச - சொன்னார்.

---

தாத்பர்யம்.

---

ஒத்ருதராஷ்ட்ரனே; இரண்டு சேனைகளுக்கும் நடுவில்நின்று, இதுவரைக்கும் சொல்லப்பட்ட ப்ரகாரம் விசனப்பட்டுக் கொண்டிருக்கிற அர்ஜுனனைப் பரிஹஸிப்பவன்போல, ஸ்ரீக்ருஷ்ணர் கீழே சொல்லப்படப்போகிற வாக்யத்தைச் சொன்னாரென்று தாத்பர்யம்.

---

## ரஹஸ்யார்த்தம்,

இவ்விதமாய் அர்ஜுநன் உபேக்ஷித்தபிறகு, இனிநமக்கே ராஜ்யம் கிடைக்குமல்லவா வென்று, த்ருதராஷ்ட்ரனுக்கு உண்டாகிற துராசையை நீக்கும்பொருட்டு பகவான்சும்மா இருக்க வில்லையென்று சஞ்சயன் இந்தவாக்யத்தைச் சொன்னானென்று அறியவேண்டும். மேலும், இரண்டு சேனைகளுக்கும் நடுவில் விசநமடைந்து கொண்டிருக்கிற அர்ஜுநனை நகைத்துக்கொண்டே ஸ்ரீக்ருஷ்ணர் இப்படிசொன்னார் என்கையாலே அர்ஜுநன் யுத்தத்துக்கு வந்த பிறகு யுத்தோத்ஸாஹத்தை அடையாமல் நீயேன் இப்படி யுத்தப் பிரயத்நத்துக்கு விரோதமாய் துக்கிக்கிறாயென்று ஸ்ரீக்ருஷ்ணர் பரிஹாஸம் செய்தார் என்றும், அநுசிதமாய்ப் பேசிக்கொண்டிருக்கிற அர்ஜுநனுக்கு வெட்கத்தை யுண்டாக்கி யுத்தம் செய்விக்க நினைத்தாரென்றும், மேலும், அர்ஜுநா; அநுசிதமாய்ப் பேசிக்கொண்டிருக்கிறாய் யென்று அர்ஜுநனுக்குத் தெரிவிக்க நினைத்தாரென்றும், தகாதகாரியத்தைச் செய்கிறாயென்று சொன்னபிறகு சும்மா இருப்பது தகுதியல்ல ஆதலால் ஞானோபதேசம் செய்ய நினைத்தாரென்றும், அறியவேண்டும். மேலும், நகைத்துக் கொண்டிருப்பவன்போல என்கையாலே ஸ்ரீக்ருஷ்ணர் உண்மையாக அர்ஜுநனைப் பரிஹாசம் பண்ணவில்லையென்றும், அர்ஜுநனுக் குண்டான அவிவேகத்தைப் பார்த்து நகைத்தாரென்றும், இனிமேல் சொல்லப்படப்போகிற வசநங்களால் அர்ஜுநனுக் குண்டாயிருக்கிற அவிவேகத்தை நீக்குவரென்றும் அறியவேண்டும்.

---

శ్లో॥ అశోచ్యానన్వశోచ స్త్వం । ప్రజ్ఞావాదాంశ్చ భాషసే॥
గతాసూనగతాసూంశ్చ । నానుశోచన్తి పండితాః॥ ౧౧॥

அஶோச்யாநந்வஶோசஸ்த்வம்।ப்ரஜ்ஞாவாதாம்ஶ்சபாஷஸே।
கதாஸூநகதாஸூம்ஶ்ச । நாநுஶோசந்திபண்டிதா:॥

---

## பதவுரை.

(ஹே அர்ஜுந - ஓ அர்ஜுநா) த்வம் - நீ, அஶோச்யாந் - துக்கிக்கத்தகாத பீஷ்மாதிகளைக் குறித்து, அந்வஶோச: - துக்கித்தாய்,

ப்ரஜ்ஞாவாதாம் ஶ்ச - பண்டிதர் சொல்லேயும், பாஷஸே-சொல்லு கிருய், பண்டிதாః - ஆத்மஞானமுள்ளவர்கள், கதாஸூந் - இறந்தவர்களைக் குறித்தும், அகதாஸூம்ஶ்ச - இறவா திருப்பவர்களைக் குறித்தும், நாநுஶோசந்தி - துக்கிக்கமாட்டார்கள்.

தாத்பர்யம்.

ஓ அர்ஜுனா; ஆத்மாநாத்ம விவேகமுள்ள பண்டிதர்கள், இறந்தவர்களைக் குறித்தாயினும் இறவாதவர்களைக் குறித்தாயினும் துக்கிக்கமாட்டார்கள், நீபண்டிதர்போல வைராக்யமாய்ப் பேசிக்கொண்டும், விசாரிக்குமிடத்தில் துக்கிக்கத்தகாத பீஷ்மாதிகளைக் குறித்து பித்தன்போல துக்கித்தாய், இப்படி துக்கித்தல் உனக்குத் தகாது என்று தாத்பர்யம்.

சங்கரபாஷ்யதாத்பர்யம்.

இந்த சாஸ்திரத்தில், முதலாமத்தியாயத்தில், முதலாவதான.

" ధర్మక్షేత్రే"

"தர்மக்ஷேத்ரே".

என்கிற சுலோகம் ஒருவாக்கியம், இரண்டாவது சுலோக முதற்கொண்டு.

" నయోత్స్యఇతిగోవిందం"

"நயோத்ஸ்யஇதிகோவிந்தம்".

என்கிற இரண்டாவது அத்தியாயத்திலுள்ள ஒன்பதாவது சுலோகம் வரைக்கும் ஒருவாக்கியம். இரண்டாவது அத்தியாயத்திலுள்ள பத்தாவதான.

" తమువాచహృషీకేశ"

"தமுவாசஹ்ருஷீகேஶ".

என்கிற சுலோகம் ஒருவாக்கியம். முதல்வாக்யத்தில் வேதாந்தார்த்தத்தைத் தெரிவிக்கிற இந்தக் கீதாசாஸ்திரத்தை, மஹாபாரதத்தில் தெரிவிக்கத்தகுந்த கதையின் சந்தர்ப்பம் சொல்லப்

பட்டது, இரண்டாம் வாக்கியத்தில் சகல ப்ராணிகளுக்கும் துக்க ரூபமாகிய சம்சாரத்தை உண்டாக்குகிற சோகத்தை, (மனத்தி லுள்ளசந்தாபம்) மோஹம் (அவிவேகம்) அந்தசோக மோஹங்களு டையஅவாந்தர பேதங்களானக்ரோதம், காமம், லோபம்,முதலான தோஷங்களுக்குக் காரணமான அஹங்காரமும், அதற்குக் காரண மான அவித்யையும் (அவ்யக்தம்) சொல்லப்பட்டன. மூன்றுவது வாக்கியம், ஆசாரியர்களையும், பந்துக்களையும் கொல்ல நேரிட்டதே யென்று துக்கித்துக் கொண்டிருக்கிற அர்ஜுனனைத் தேற்றும் பொ ருட்டுச் சொல்லப்பட்டது, அந்த மூன்றுவாக்கியங்களில் முதலா வது வாக்கியம் கதையின் சந்தர்ப்பத்தைத் தெரிவிப்பதாகையால் ஒருவாக்கியமென்று சொல்லலாம், மூன்றுவது வாக்கியமும் அர் ஜுனனைத் தேற்றுவதைத் தெரிவித்தலால் ஒருவாக்கியமென்றே சொல்லலாமன்றி, இரண்டாவது வாக்கியத்தில் அநேகமான விஷ யங்களும் சுலோகங்களும் உண்டாயிருத்தலால் அதுவும் ஒருவாக் கியம் எப்படியாகும் என்று சொல்லக்கூடாது, காரண மென்ன வென்றால், அவையெல்லாம் சகல ப்ராணிகளுக்கும் துக்கரூப மாகிய சம்சாரத்தை உண்டாக்குவதான சோகமோஹாதிரூபதோ ஷங்களுக்குக் காரணமானது அஹங்காரமென்றும், அதற்குக் கார ணமானது அவித்யையென்றும், ஒருவிஷயத்தையே தெரிவிப்பதனு லென்க. மேலும், இவ்விதமாய் வாக்கியத்தைப் பிரித்துச் சொல் லுதல், பூர்வோத்தரக்ரந்த சந்தர்ப்பம் விசதமாய்த் தெரியும்பொரு ட்டென்று அறியவேண்டும். மேலும், இரண்டாவது வாக்கியத்தில்.

"కథంభీష్మమహంసంఖ్యే"

"கதம்பீஷ்மமஹங்ஸங்க்யே".

என்கிற இரண்டாவது அத்தியாயத்தில் எட்டாவது சுலோக முதற்கொண்டு, பிரபுத்வத்திலும் பூஜிக்கத்தகுந்த த்ரோண க்ருபா திகளிடத்திலும், அபிமந்யன் முதலான புத்ரர்களிடத்திலும், வே றொரு சம்பந்தமில்லாமலே சிநேகிதரான அசுவத்தாமன் முதலா கிய குருபுத்ரர் முதலானவரிடத்திலும், பிரதியுபகாரம் விரும்பா மல் தாமாகவே உபகாரம் செய்கிற சுபாவமுள்ளவரும் அன்புள்ள வரும் ஆகிய ஸ்ரீக்ருஷ்ணர் முதலானவரிடத்திலும், தந்தை, பாட்

டன், முதலானவர்கள் விஷயமாய், பரம்பரையாக அன்புள்ள விராடன் காசிராஜன் முதலானவரிடத்திலும், (இவர்கள் விஷயமாய்) நான் இவர்களுக்கு வேண்டியவன், இவர்கள் எம்மவர்கள், என்கிற பீஷ்மாதியரிடத்தில் பிரமையாலுண்டான சிநேஹம், பிரிவு, நாசம், அவர்களைக் கொல்வதனால் உண்டாகிற பாவம், அதனாலுண்டாகிற லோகநிந்தை, முதலானவைகளுக்குக் காரணங்களான சோகமோஹங்கள் தனக்கிருப்பதாக அர்ஜுநன் காண்பித்தான், அர்ஜுநன் முன்னே விவேகம் ஞானம் என்பவற்றை யுடையவனானாலும் இப்போது இப்படி சோகமோஹங்களால் அவைநசித்தலால் முன்னே தானே ஸ்வதர்மமாகிய யுத்தத்தைச்செய்ய நினைத்தும், மறுபடியும் அந்த யுத்தத்தைச்செய்ய நினையாதவனானான். மேலும், ப்ராஹ்மண தர்மமான பிக்ஷாஜீவநத்தையும், சகலகர்மங்களையும் விட்டுவிடுதலையும், ஆத்மத்யாகத்தையும் செய்ய நினைத்தான். பிரசித்தமான மஹிமையையுடைய அர்ஜுநனே இப்படி ஸ்வதர்மத்தை விட நினைத்து அந்யதர்மத்தைச் செய்ய ஆயத்தமாயிருக்கும்போது சாமாந்யஜநங்கள் அப்படிசெய்வதற்கு சந்தேஹம் ஒன்றுமில்லை, யாருக்கு சோகமோஹாதிகள் இருக்குமோ அவர்களெல்லாருக்கும் சம்சார துக்கமிருக்கும். அதனால் அவர்கள் ஸ்வதர்மத்தை விட்டு அந்யதர்மத்தையும் செய்வார்களென்று நமக்கெல்லாருக்கும் விசதமாய்த் தெரிந்தவிஷயமே யல்லவா ஆகையால் இப்போது அர்ஜுநனிடத்தில் காணப்படுகிற சோகமோஹாதிகள் சம்சாரத்துக்கு வித்தென்றே சொல்லவேண்டும்.

ஆனால் உலகத்தில் எல்லாரும் இப்படியே ஸ்வதர்மத்தை யுட்டு நிஷித்த கர்மங்களைச் செய்துகொண்டிருக்கிறார்களா; அநேக ஜநங்கள் நிஷித்தகர்மங்களை விட்டு ஸ்வதர்மத்தை ஆசரித்துக் கொண்டிருக்க வில்லையா, அவர்களுக்கு சோகமோஹாதிகள் சம்சாரதுக்கத்துக்குக் காரணமாயினவா; என்று சொல்லக்கூடாது. அவர்களுக்கும் அவை துக்க ஹேதுக்களானவைகளேயென்று சொல்லவேணடும். ஏனென்றால், அவர்கள் நிஷித்த கர்மங்களைவிட்டு ஸ்வதர்மங்களை ஆசரித்துக் கொண்டிருப்பவர்களே யாயினும், ஸ்வர்க்காதி லோகங்களில் ஏதோ ஒருபயனை விரும்பியே செய்து, கொண்டிருக்கிறார்கள், அப்படிபயனை விரும்பிச் செய்வதனால்

அவர்களுடைய மனோவாக்காயங்க ளுடையவும், த்வக்கு, சக்ஷுஸ, ஸ்ரோத்திரம், ஜிஹ்வை, க்ராணம், வாக்கு, பாணி, பாதம், பாயு, உபஸ்த்தை, என்கிற, ஞானேந்த்ரிய கர்மேந்த்ரியங்களி னுடையவும், ப்ரவர்த்தகம், அஹங்காரத்தை (நான்செய்கிறேன் நான் புஜிக்கிறேன் என்கிற அபிமானம்) உடையதாயிருக்கும். இப்படி அஹங்காரமுண்டாகி, கர்மத்தைச் செய்கிறவர்கள் சுபாசுப கர்மங்கள் இரண்டையும் செய்வார்கள், அதில்யஜ்ஞம் முதலான சுபகர்மங்களைச் செய்தலால் உண்டான புண்யாதிசயத்தால் தமக்கிஷ்டமான தேவாதி ஜந்மத்தையும், அதனால் சுகத்தையும் அடைகிறார்கள், அசுபகர்மத்தைச் செய்வதனால் பாவமிகுதி யுடையவராகி, அதற்குத் தகுதியாக பசுமுதலிய ஜந்மத்தையும் அதனால் சுகதுக்கத்தையும் அடைகிறார்கள், சுபாசுபகர்மங்கள் இரண்டையும் கலப்பாகச் செய்வதனால் அதற்குப்பலமாக மநுஷ்ய ஜந்மத்தையும் அதனால் சுகதுக்கங்களையும் அடைகிறார்கள். இப்படி மேலுமேலும் ஜநநமரணாதிரூபமான துக்கசம்சாரம்எப்பொழுதும் முடிவில்லாமல் விருத்தி யடைந்துகொண்டே யிருக்கும். அப்படி இடையறாத சம்சாரம் சர்வகர்ம சந்நியாச பூர்வகமான ஆத்மஜ்ஞாநத்தினாலேயே நிவர்த்தியாகுமன்றி வேறொன்றினாலும் நிவர்த்தியாக மாட்டாது. (அதாவது, அஹங்காரத்தையும் பலாபிலாஷையையும் விட்டு வேதோக்தயஜ்ஞாதி கர்மங்களைச்செய்து, சித்தசுத்தியையுண்டாக்கிக் கொண்டு ஆத்மஸ்வரூபத்தைத் தெரிந்துகொண்ட மாத்திரத்தாலேயே, சம்சாரத்துக்குக் காரணங்களான சோகமோஹங்கள் நிவர்த்தியாகுமே யன்றி, இல்லாதபக்ஷத்தில் நிவர்த்தியாகாது) ஆகையால் பரமதயாளுவாகிய பகவான், அப்படிப்பட்ட ஆத்மஜ்ஞாநத்தை உபதேசிக்க நினைத்து, லோகத்தை அநுக்ரஹிக்கும்பொருட்டு அர்ஜுனனை நிமித்தமாக்கிக் கொண்டு (அதாவது ப்ரக்ருதத்தில் அர்ஜுனனுக்கு உபதேசித்த பக்ஷத்தில் இந்த கீதாசாஸ்திரார்த்தத்தைத் தெரிந்துகொண்டு சகலப்ராணிகளும் சம்சார துக்கத்தை விட்டு முக்தராவார் என்கிற கருத்தோடு),

"అశోచ్యానన్వశోచస్త్వం"

"அசோச்யாநந்வசோசஸ்த்வம்."

(நீதுக்கிக்கத்தகாத பீஷ்மாதிகளைக் குறித்து துக்கித்தாய்) என்பது முதலானவற்றைச் சொன்னார். இங்கே அர்ஜுநனுக்குச் சொன்னபோது அர்ஜுநனை அநுக்ரஹிக்கும் பொருட்டே இந்தக் கீதா சாஸ்திரத்தை உபதேசித்தாரென்று சொல்ல வேண்டுமே யன்றி லோகத்தை அநுக்ரஹிக்கும் பொருட்டென்று எப்படிசொல்லலாம்என்று சங்கிக்கக்கூடாது. ஏனென்றால், ஸ்வதர்மங்களை ஆசரித்து சித்த சுத்தியையடைந்த பிறகு உபதேசிக்கத்தகுந்த ஆத்மஜ்ஞாநத்தை, அப்படிப்பட்ட துக்காவஸ்தையிலுள்ள அர்ஜுநனுக்கு உபதேசிப்பதற்கு பகவானுக்கு இஷ்டமில்லை யென்றும், ஆதலாலேயே லோகாநுக்ர ஹார்த்தமாகச் சொன்னார் என்றும், அர்ஜுநனை நிமித்தமாக்கிக்கொண்டு என்கையாலே விவரிக்கப் பட்டது, ஆகையாலே யென்று அறியவேண்டும். இவ்வளவினாலே அர்ஜுநன் பொருட்டல்லவென்று சங்கிக்காமல், ப்ரத்யக்ஷமாய் இந்த கீதாசாஸ்திரத்தை அர்ஜுநனுக்கே சொன்னாராதலால் அர்ஜுநா நுக்ரஹார்த்தமாகவும் சொன்னாரென்று பொருள் படுகின்றதென்று அறியவேண்டும். இப்படி வேதத்தில் சொன்ன கர்மங்களையும், ஸ்ம்ருதிகளில் சொன்ன கர்மங்களையும், பலத்தை விரும்பாமலே செய்து, சித்தசுத்தியை யடைந்தபிறகு உண்டாகிற ஆத்மஜ்ஞாநத்தினாலேயே முக்தி யுண்டாகும், இதுவே பகவானுக்கு இஷ்டமான கீதாசாஸ்திரார்த்தம்.

இதற்கு விரோதமாக வ்ருத்திகாராதிகள் சொல்லுகிறார்கள், எப்படியென்றால் இரண்டாமத்தியாயத்தில்,

“ అథ చే త్త్వమిమంధర్మ్యం । సంగ్రామంనకరిష్యసి।
తతస్స్వధర్మంకీర్తించ । హిత్వాపాపమవాప్స్యసి”

“அதசேத்த்வமிமம்தர்ம்யம் । ஸங்க்ராமம்நகரிஷ்யஸி ।
ததஸ்ஸ்வதர்மம்கீர்த்திஞ்ச । ஹித்வாபாபமவாப்ஸ்யஸி”

(ஓ அர்ஜுநா; ஸ்வதர்மமான யுத்தத்தைச் செய்யாமற் போனாலும் அபகீர்த்தியையும் பாவத்தையும் அடையக் கடவாய்) என்கிற முப்பத்து மூன்றாவது சுலோகம், அந்த அத்யாயத்திற்றானே,

"కర్మణ్యేవాధికారస్తే । మాఫలేషుకదాచన ।
మాకర్మఫలహేతుర్భూః । మాతేసంగోస్త్వకర్మణి"

"கர்மண்யேவாதிகாரஸ்தே । மாபலேஷுகதாசந ।
மாகர்மபலஹேதுர்ப்பூர் । மாதேஸங்கோஸ்த்வகர்மணி"

(ஓ அர்ஜுநா; உனக்குக் கர்மத்திலேயே அதிகாரமேயன்றி, ஜ்ஞாநத்தில் அதிகாரமில்லை. பலத்தை விரும்பிக் கர்மத்தைச் செய்தவிடத்தில் பிறப்புண்டாகுமாதலால், பிறப்புக்குக் காரணமான பலத்தை விரும்பாமல் கர்மங்களைச் செய்யவேண்டும்) என்கிற நாற்பத்தேழாவது சுலோகம் முதலான சுலோகங்களில் சொல்லப்பட்டவிதத்தை விசாரிக்கையில் இந்தக்கீதாசாஸ்திர முழுதிலும் அக்கிஹோத்ரம் (ப்ரதிதினமும் அக்கியில் ப்ராஹ்மணுள் செய்கிற ஹோமம் முதலான கர்மவிசேஷம்) யுத்தம் முதலான ஸ்ரௌதஸ்மார்த்த காமங்களோடு (வேதத்தில் சொல்லப்பட்டவையும், மநுஸ்ம்ருதி முதலான தர்மசாஸ்திரங்களில் சொல்லப் பட்டவையுமான கர்மங்களோடு) கூடின ஆத்மஜ்ஞாநத்தினலேயே மோக்ஷமுண்டாகுமேயன்றி, சர்வகர்மத்யாகத்தோடு கூடின கேவலாத்மஜ்ஞாநத்தால மோக்ஷமுண்டாகுமென்று சொல்லப்படவில்லையென்று தோன்றுகின்றது. ஆகையால் ஸ்ரௌதஸ்மார்த்த கர்மத்தோடு கூடின ஆத்மஜ்ஞானமே மோக்ஷத்துக்குக் காரணமன்றி சர்வகர்மரஹிதமான ஆத்மஜ்ஞாநம் மோக்ஷத்துக்குக் காரணமல்லவென்று வ்ருத்திகாராதிகள் சொல்லுகிறுர்கள். இதற்கு விரோதமாய்ச் சிலர் சொல்லுகிறுர்கள், எப்படியென்றுல்,

"నాహింస్యాత్సర్వభూతాని"

"நாஹிம்ஸ்யாத் ஸர்வபூதாநி"

(சகலப்ராணிகளையும் ஹிம்ஸைசெய்யக்கூடாது)

"అహింసాపరమోధర్మః"

அஹிம்ஸாபரமோதர்மஃ

(சர்வப்ராணிகளையும் ஹிம்சைசெய்யாதிருப்பது சிறந்ததர்மம்) என்கிற வசகம் முதலியவற்றால் ஜீவஹிம்ஸை கூடாதென்றல்லவா சொல்லப் பட்டிருக்கின்றது. அப்படி யிருக்கையில், வேதத்தில் சொல்லப்பட்ட யஜ்ஞம் முதலானகர்மங்களில் பசுக்கொலை முதலானவையும், ஸ்ம்ருதியில் சொல்லப்பட்ட யுத்தம் முதலான கர்மங்களில் அநேக ப்ராணிகளுடைய ஹிம்ஸையும் சம்பவிக்கின்றது, அப்படிப்பட்ட ஹிம்ஸையோடுகூடினவைக்ரூர கர்மங்களல்லவா; அப்படிப்பட்ட க்ரூரகர்மங்களோடு கூடின ஆத்மஜ்ஞானத்தால் எப்படி மோக்ஷமுண்டாகும், எவ்வகையாலும் மோக்ஷமுண்டாகாது. என்று சொல்லக்கூடாது. ஏனென்றால்,

"అథచేత్త్వమిమంధర్మ్యం, కర్మణ్యేవాధికారస్తే"

కురుకర్మైవతస్మాత్త్వమ్"

"அதசேத்வமிமம்தர்ம்யம் । கர்மண்யேவாதிகாரஸ்தே

குருகர்மைவதஸ்மாத்த்வம்."

என்கிற முன்சொல்லப்பட்ட சுலோகங்களால் பகவான் க்ஷத்ரதர்மமாகிய யுத்தரூபகர்மம், ஆசாரியர்களான த்ரோணாதியரும், அண்ணன் தம்பிமாரான துரியோதநாதியரும், அபிமந்யன் முதலான புத்ரர்களும், இன்னம் அநேக ப்ராணிகளும், இறத்தற்குக் காரணமாதலால் மிகவும் கொடியதாயினும், ஓ அர்ஜுநா; க்ஷத்ரியனான உனக்கு ஸ்வதர்மமான தாகையால் பாவத்துக்குக் காரணமல்ல, இந்தயுத்தத்தைச் செய்யாதிருப்பையானால் பாவத்தையும் அபகீர்த்தியையும் அடைவாய் என்று அர்ஜுநனுக்கு உபதேசித்தார் அல்லவா; அந்தயுத்தம் க்ரூரகர்மமாய் பாவத்துக்குக் காரணமே யானபோது, அப்படிப்பட்ட யுத்தத்தைச் செய்யக்கடவையென்று ஏன் உபதேசிக்கிறார், பரமாப்தரான பகவான் அர்ஜுநனுக்குப்பாபஹேதுவான கர்மத்தை உபதேசித்தாரென்று சொல்லலாமா; சொல்லக்கூடாது, மற்றென்னவென்றால், குருபுத்ரர் முதலானவர்களுடைய ஹிம்ஸையோடு கூடினதானாலும் ஸ்வதர்மமாகையால் யுத்தம் க்ரூரகர்மமல்ல, அப்படிப்பட்ட யுத்தத்தைச் செய்ததனால் பாவமும் சம்பவிக்காது என்றே பகவானுடைய

அபிப்ராயமென்று சொல்லவேண்டும், இவ்விதமாய் ஸ்மார்த்த கர்மமே பாபஹேதுவாகாதபோது அதிலும் ப்ரபலமான வேதங்களில் சொல்லப்பட்ட யஜ்ஞம் முதலான கர்மம் பசுக்கொலை முதலானவற்றை உடையதாயினும் ஹிம்ஸை தேவதாப்ரீதிகரமாகையால் பயனற்றதல்ல ஆகையால், எவ்வளவும் பாபஹேது வல்லவென்றே சொல்லவேண்டும். மேலும்,

"నాహింస్యాత్సర్వభూతాని"

"நாஹிம்ஸ்யாத்ஸர்வபூதாநி".

என்கிற சாமாந்யவசநத்துக்கு பயனற்ற ஹிம்ஸையே செய்யக்கூடாதென்று தாத்பர்யமென்றும் சொல்லவேண்டும். இவ்விதமாக ஸ்ரௌதஸ்மார்த்த கர்மங்கள் ஹிம்ஸையோடு கூடினவையாயினும் பாபஹேதுக்களல்ல, ஆகையால் தர்ஸபூர்ணமாஸாதி கர்மங்கள் தமக்கு அவயவ கர்மங்களான ப்ரயாஜை, அநுயாஜை முதலானவற்றோடு கூடினவைகளாய் எவ்விதமாய் ஸ்வர்க்காதி பலங்களுக்குக் கருவிகளாகின்றனவோ; அந்தப்ரகாரமாகவே மேற்சொன்னபடியே பாபஹேதுக்களல்லாத ஸ்ரௌதஸ்மார்த்த கர்மங்களோடுகூடின ஆத்மஜ்ஞாநமே மோக்ஷஹேதுவல்லது கேவலாத்மஜ்ஞாநம் மோக்ஷஹேது வல்லவென்று வ்ருத்திகாராதிகள் சொன்ன வார்த்தை சரியல்ல.

ஏனென்றால், சாங்க்ய புத்தியென்றும், யோகபுத்தி யென்றும் புத்தி இரண்டுவிதமா யிருக்கும், அதில், ஜாயதே, அஸ்தி, வர்த்ததே, விபரிணமதே, அபக்ஷீயதே, நஸ்யதி (பிறத்தல், இருத்தல், விருத்தியடைதல், மாறுபடல், குறைதல், நசித்தல் என்கிற ஆறு விகாரங்களும்) நான்செய்கிறேன், நான் அநுபவிக்கிறேன் என்கிற அபிமாநமும் இல்லாதவன் ஆத்மாவென்று ஆத்மதத்வத்தைத் தெரிந்து கொள்ளுதல் சாங்க்ய புத்தியெனப்படும், அப்படிப்பட்ட சாங்க்யபுத்தி உண்டாவதற்கு முன்னே நான் செய்கிறேன், நான் அநுபவிக்கிறேன் என்கிற அபிமாந முள்ளவனும், இது தர்மம், இது அதர்மம் என்று முன்னே விசாரித்து மோக்ஷசாதநங்களான லோகத்தில் சொல்லப்பட்ட யஜ்ஞாதி புண்ய கர்மங்களைச் செய்ய

வேண்டுமென்கிற விருப்பம்யோக புத்தி யெனப்படும். சாங்க்ய புத்தி யுள்ளவர்கள் சாங்க்யர் எனப்படுவர், இவர்களே கர்மங்களை விட்டவர்களாதலால் சந்யாசிகள் என்றும், ஆத்மஜ்ஞானமுள்ள வர்களாதலால் ஞானிகள் என்றும் சொல்லப்படுவர். யோகபுத்தி யுள்ளவர்கள் யோகிகள் எனப்படுவர், இவர்களே கர்மடர்களும் (வேதத்தில் சொல்லப்பட்ட கர்மங்களைச் செய்பவர்களும்,) ஆவார்கள். பூர்வத்தில் சொல்லப்பட்ட சாங்க்யபுத்தி, இந்தஇரண்டாவது அத்பாயத்திலுள்ள,

"అశోచ్యా౯"

"அஶோச்யாந்"

என்கிற சுலோகமுதற் கொண்டு இந்த இரண்டாவது அத்பாயத்திலுள்ள,

"స్వధర్మమపిచావేక్ష్య"

"ஸ்வதர்மமபிசாவேக்ஷ்ய"

என்கிற முப்பத்தொன்றுவது சுலோகம் வரைக்கும் பகவானுலே சொல்லப்பட்டது. அந்த இரண்டாம் அத்யாயத்திலேயே,

"ఏషాతేభిహితాసాంఖ్యేబుద్ధిర్యోగేత్విమాంశృణు"

"ஏஷாதேபிஹிதாஸாங்க்யேபுத்திர்யோகேத்விமாம்ஶ்ருணு"

இந்த சாங்க்யமதத்திலுள்ள புத்திஉனக்குச் சொல்லப் பட்டது, யோகத்திலுள்ள புத்தியைச் சொல்லுகிறேன் கேள்) என்கிற முப்பத்தொன்பதாவது சுலோகத்திலும், மூன்றுவது அத்பாயத்தில்,

"లోకేస్మి౯ద్వివిధానిష్ఠాపురాప్రోక్తామయానఘ ।
జ్ఞానయోగేనసాంఖ్యానాంకర్మయోగేనయోగినామ్"

"லோகேஸ்மிந்த்விவிதாநிஷ்டாபுராப்ரோக்தாமயாநக ।
ஜ்ஞாநயோகேநஸாங்க்யாநாம்கர்மயோகேநயோகிநாம்",

(இரண்டுவிதமா யிருக்கிற ஜ்ஞாநகர்மங்களின்கிலே, ஜ்ஞாந சம்பந்தத்தால் சாங்கியர்களுக்கும், கர்மசம்பந்தத்தால் யோகிகளுக்கும், என்னல் சொல்லப்பட்டது) என்கிற மூன்றுவது சுலோகத்திலும், ஜ்ஞாநிகளுக்கு சாங்க்யபுத்தியென்றும், யோகிகளுக்கு யோகபுத்தியென்றும், பகவானலே பிரித்துச் சொல்லப்பட்டது, இப்படி ஜ்ஞாநகர்மங்கள் ஒரேகாலத்தில் ஒருபுருஷனலேயே செய்யத் தக்கவையாக மாட்டாவென்று பிரித்துச் சொல்லுதலால், வ்ருத்திகாரர்களுடைய கர்மசமுச்சயவாதம் (ஸ்ரௌதஸ்மார்த்த கர்மாநுஷ்டாநத்தோடு கூடின ஞானமே மோக்ஷஹேது என்கிற வாதம்) சரியல்ல, கர்மசமுச்சய வாதத்தில் என்னவாதை யுண்டானதனல் பகவான் இப்படிசொன்னர் என்று கேட்கும்பக்ஷத்தில் சொல்லுகிறோம். கர்மம், கர்த்த்ருத்வ புத்தியும், (நான் செய்கிறேன் என்கிற அபிமாநமும்) அநேகத்வபுத்தியும் (ஜீவேஸ்வரர்களுக்கு ஐக்யமில்லையென்கிற புத்தியும்) முதலான புத்திகளையுடையது ஜ்ஞாநமானல் அகர்த்த்ருத்வபுத்தியும், (நான்செய்கிறவன் அல்லேன் என்கிறபுத்தியும்,) ஏகத்வபுத்தியும் (ஜீவேஸ்வரர்களுக்கு ஐக்யபுத்தியும்,) உளதாயிருக்கின்றது. அதாவது கர்மத்தைச் செய்கிறவன் நான்செய்கிறேன் என்கிற அபிமாநத்தையும், ஜீவாத்மாக்களுக்கு பேதமுண்டென்கிற அபிப்ராயத்தையும் உடையவனு யிருப்பான். ஆகையால், ஒளியும்இருளும் ஒரேகாலத்தில் ஓரேஇடத்தில் இராததுபோல, ஜ்ஞாநகர்மங்கள் ஒரேகாலத்தில் ஒரு புருஷனிடத்தில் இருக்கமாட்டா. இப்படிப்பட்ட வாதையாலேயே பகவான் முன்சொன்னபடியே பிரித்துச் சொன்னுரென்று தெரிந்துகொள்ள வேண்டும். மேலும், ஜநகர் முதலானேர் ஞானிகளல்லரா; அவர்கள் கர்மங்களைச் செய்யவில்லையா; கர்மஜ்ஞாநங்கள் அவர்களிடத்தில் இருக்கவில்லையா; என்றுலோ; அவர்கள் சித்தசுத்தியின் பொருட்டே கர்மங்களைச் செய்தார்களென்று சொல்லவேண்டும், இப்படியல்லவானல், நாம் செய்யாதிருந்தாலும் உலகத்தாரும் கர்மங்களைச் செய்யாமல் சித்தசுத்தியில்லாமல் கெடுவார்களென்றும், நாம்செய்த பக்ஷத்தில் உலகத்தாரும் செய்வார்களென்றும், எண்ணி, லோகாநுக்ரஹத்தின் பொருட்டு கர்மங்களைச் செய்தார்களென்றுயினும் சொல்லவேண்டுமென்றி இவ்வளவினலேயே கர்ம

சமுச்சயவாதமே சரியென்று சொல்லக்கூடாது, மேலும், பகவானாலே சாங்க்யபுத்தி ஞானிகளுக்கென்றும், யோகபுத்தி கர்மடர்களுக்கென்றும் பிரித்துச் சொல்லப்பட்டபடியே சாதபதீய ப்ராஹ்மணத்திலும் சொல்லப்பட்டது.

"ఏతమేవప్రవ్రాజినోలోకమిచ్ఛన్తోబ్రాహ్మణాఃప్రవ్రజన్తి"

"ஏதமேவப்ரவ்ராஜி னோலோகமிச்சந்தோப்ராஹ்மணுஃ ப்ரவ்ரஜந்தி".

(ப்ராஹ்மணர்கள் நித்யவிஜ்ஞப்திஸ்வபாவனுன இந்தப்பரமாத்மனைத் தெரிந்துகொள்ளும் பொருட்டு நித்யநைமித்திக காம்யங்களான சந்தியாவந்தந சங்க்ராந்தி சிராத்தபுத்ரகாமேஷ்டி முதலானவைகள் என்கிற மூன்றுவிதங்களான கர்மங்களுடையவும், மநுஷ்யலோக ப்ராப்திக்கு சாதனமான புத்ரனைப் பெறத்தகுந்த விவாஹமும், பித்ருலோகப்ராப்திக்கு சாதநமான சிராத்தமுதலிய கர்மமும் என்கிற மூன்றுவிதங்களான கர்மங்களுடையவும் பயனை விரும்பாமல் கர்மங்களைவிட்டு,

"కింప్రజయాకరిష్యామోయేషాంనోయమాత్మా"

"கிம்ப்ரஜயாகரிஷ்யாமோயேஷாம்நோயமாத்மா".

(பிரபஞ்சமெல்லாம் அசாத்யமான ஆத்மாவேயாயிருக்க, புத்ரர்களால் ஆத்மஸ்வரூபமாகிய மநுஷ்யலோகம் சாதிக்கப்படாது) என்கிற ப்ரமாணத்துக்கிணங்க புத்ரர் முதலானவர்களிடத்திலுள்ள விருப்பத்தைவிட்டு ஜ்ஞாநநிஷ்ட்டையை யுடையவர்களாகிருர்கள். பரமாத்மதத்வத்தை அறியாதமூடன் விவாஹத்துக்கு முன்னே ப்ரஹ்மசர்ய விரதத்தைச் செய்துகொண்டு, ஆசாரியனிடத்தில் சாஸ்திரத்தில் சொல்லப்பட்டபடியே வேதத்தைப்படித்து, வேதத்தில் சொல்லப்பட்ட தர்மங்களைத் தெரிந்துகொண்ட பிறகு, மநுஷ்யலோக ப்ராப்திக்கு சாதநமான புத்ரனைப் பெறும்பொருட்டு விவாஹத்தைச்செய்து கொள்வதிலும், பித்ருலோக ப்ராப்திக்கு சாதநமானதும், மநுஷ்யவித்தம் என்னும் பெயருள்ளதும் ஆகிய சிராத்தாதி கர்மங்களையும், தேவலோக ப்ராப்திக்கு சாதனமானதும்

ஷைதவவித்தம் என்னும் பெயருள்ளதும் ஆகிய யஜ்ஞம் முதலான கர்மங்களையும் செய்வதிலும்,

"కామాయత జాయామేస్యాత్"

"காமாயத, ஜாயாமேஸ்யாத்".

(எனக்கு மனைவிவேண்டும், என்று அவர் விரும்பினர்) என்கிற சுருதிப்ரமாணாநு ஸாரமாய் விருப்பமுள்ளவனானன். இந்த இரண்டு சுருதிவாக்யங்களுள்ளே முதலாவது ஞானியிருக்க வேண்டிய இருப்பைத் தெரிவிக்கின்றது, இரண்டாவது ஆத்மதத்வத்தை அறியாதவன் இருக்கவேண்டிய இருப்பைத் தெரிவிக்கின்றது, இப்படி அஜ்ஞாநிக்கே ஸ்ரௌதாதி சர்வ கர்மங்களும் சொல்லப்பட்டன, ஜ்ஞாநிக்கே சர்வகர்ம சந்யாச பூர்வகமாய் ஆத்மஜ்ஞாநம் சொல்லப்பட்டிருக்கின்றது, இப்படிபிரித்துச் சொல்லுதலால் விசாரிக்குமிடத்தில் சிறிதும் விரோதம் காணப்படவில்லை, அப்படி விரோதமிருக்கிற பக்ஷத்தில் கர்ம சமுச்சயவாதமே பகவானுக்கு இஷ்டமென்று சொல்லலாம், அப்படிப்பட்ட விரோதங்கள் ஒன்றும் காணப்படவில்லை யாதலால் கர்ம சமுச்சயவாதம் சரியல்லவென்றே சொல்லவேண்டும்.

மேலும், மூன்றுமத்யாயத்தில்,

"జ్యాయసీచేత్కర్మణస్తేమతా బుద్ధిర్జనార్దన ।
తత్కింకర్మణిఘోరేమాం నియోజయసికేశవ"

"ஜ்யாயஸீசேத்கர்மணஸ்தேமதாபுத்திர்ஜநார்த்தந।
தத்கிம்கர்மணிகோரேமாம்நியோஜயஸிகேஸவ".

(ஓக்ருஷ்ணா; கர்மத்தினும் ஞானமே சிறந்ததானபோது, என்னை இந்தக்கோர கர்மத்தைச் செய்யென்று ஏன்கட்டளை யிடுகிறாய்,) என்கிற முதல்வாக்யத்தில் அர்ஜுனன், ஜ்ஞாநத்தைவிட்டு கோர கர்மத்தை ஏன்செய்யச் சொல்லுகிறாயென்று க்ருஷ்ணனைக் கேட்கப்போகிறா னல்லவா; க்ருஷ்ணன் அதுவனாக்கும் எப்படிசொல்லியிருக்கிற பக்ஷத்தில் அர்ஜுனன் இப்படி ஜ்ஞாநத்தை விட்டு, கோர

கர்மத்தை யேன்செய்யச் சொல்லுகிருயென்று கேட்கவேண்டும், ஜ்ஞாநகர்மங்களில் ஜ்ஞாநம் சிறந்ததென்றும், கர்மம் க்ரூரமான தென்றும், மூடன் கர்மத்துக்கு அதிகாரி, மூடனல்லாதவன் ஜ்ஞா நத்துக்கு அதிகாரிஎன்றும், அதுவனைக்கும் க்ருஷ்ணன் அர்ஜுந னுக்குச் சொல்லி யிருக்கவேண்டும், அப்படிசொல்லி யிருக்கிற பக்ஷத்திலேயே அர்ஜுநன் இப்படி ஞானத்தைவிட்டு, என்னைஏன் கோரகர்மத்தைச் செய்யச்சொல்லுகிரு யென்றுகேட்க நேரிடுமே யன்றி, உன்மதாநுசாரமாக கர்மஜ்ஞாநங்கள் இரண்டும் மோக்ஷ ஹேதுக்களே என்று, க்ருஷ்ணன் அதுவனைக்கும் சொல்லியிருக் கும் பக்ஷத்தில், அர்ஜுநன் இப்படி ஞானத்தைவிட்டு, கோரகர்ம த்தை ஏன்செய்யச் சொல்லுகிருயென்று கேட்பானு; அப்படி கே ட்பது பொருத்தமா யிருக்குமா; இராது, ஆகையால், க்ருஷ்ணனுல் அதுவனைக்கும் சொல்லப்படாததும், தான் (அர்ஜுநன்) கேட்கா ததும், ஆகியசொல்லை அர்ஜுநன் இப்படி பொருத்தமில்லாமல் சொ ல்வானு; சொல்லமாட்டான், உலகத்தில் வைத்தியன் பித்தரோகம் நீங்கும்பொருட்டு மதுரவஸ்துவையும் சீதளவஸ்துவையும் உண் ணென்று சொல்லும்போது, இந்தமதுரசீதள வஸ்துக்களில் பித்த த்தை நீக்கும்படியான வஸ்து எதுவென்று யாராயினும் கேட்ப துண்டா, இல்லை, அப்படிகேட்ட பக்ஷத்தில் ஒன்றுக்கொன்று சம் பந்த மில்லாமலிருக்கு மல்லவா; அப்படியே கர்மஜ்ஞாநங்கள் இர ண்டும் எல்லாருக்கும் மோக்ஷஹேதுக்களே யென்று சொன்ன போது, இங்கே சொல்லப்பட்ட விஷயம் அர்ஜுநனுக்கும் சொல் லப்பட்டதே யல்லவா; அப்படி இரண்டையும் உபதேசித் திருக் கையில்,

"యచ్ఛ్రేయఏతయోరేకంతన్మేబ్రూహిసునిశ్చితమ్"

"யச்ச்ரேயஏதயோரேகம்தந்மேப்ரூஹிஸுநிஸ்சிதம்".

(இந்தஜ்ஞாந கர்மங்களில் எதுசிறந்ததோ அதைச்சொல்லு வாய்) என்று ஏன்கேட்பான். அப்படிகேட்பது பரஸ்பர விருத்த மாயிருக்கின்றது, மேலும், பகவானுக்கு இஷ்டமானது இது, என் கிற தாத்பர்யத்தை நன்ருய் விசாரித்துத் தெரிந்துகொள்ள மாட் டாமல் அர்ஜுநன் இப்படி விருத்தமாய் இரண்டில் சிறந்ததைச்

சொல்லவேண்டு மென்று கேட்டானுதலால் அர்ஜுநனுடைய கே ள்வி பரஸ்பர விருத்தமாகாமல் சரியாகவே யிருக்கின்றது, என்று சொல்லக்கூடாதா; என்றுலோ; சரியே ஒப்புக்கொள்ளலா மாயி னும், கேட்டதற்குத் தகுந்தபடி நான்கர்மஜ்ஞாநங்கள் இரண்டும் மோக்ஷஹேது வென்று சொன்னபோது, நீ இப்படிஏன் நான்சொ ன்னதற்கு விருத்தமாய் ஜ்ஞாநகர்மங்களில் எதுசிறந்ததோ அதை ச்சொல்லவேண்டும் என்கிறுய் என்று க்ருஷ்ணபகவான் விடை சொல்லயேண்டு மல்லவா; அப்படி க்ருஷ்ணபகவான் சொல்ல, வில்லை, மற்றெப்படி சொன்னுரென்றுல், கர்மநிஷ்ட்டை ஜ்ஞாநநிஷ் ட்டைஎன்கிற இரண்டு நிஷ்ட்டைகள் என்னுலே பூர்வத்தில் சொல் லப்பட்டன, கர்மநிஷ்டைக்கு அதிகாரிவேறு, ஜ்ஞாநநிஷ்ட்டைக்கு அதிகாரிவேறு ஆவதேயன்றி ஒருவனே இரண்டுக்கும் அதிகாரியல் லன்என்று அர்ஜுநன்கேட்டதற்கு விரோதமாகவே க்ருஷ்ணர் உத் தரம் சொன்னுரோயன்றி அர்ஜுநன் கேட்டதற்குத் தகுந்தபடி சொல்லவில்லையென்று சொல்லவேண்டி வரும். அப்படி சொல்ல வேண்டி வந்தபோது, க்ருஷ்ணரும் அர்ஜுநன்போல பிரமித்து, அர்ஜுநனுடைய வாக்யத்துக்கு விரோதமாய் உத்தரம் சொன்னு ரென்று சொல்லவேண்டிவரும். ஒருவேளை அர்ஜுநனுக்கு பிர மையுண்டாயிற்று என்றுலும் ஒப்புக்கொள்ளலாமன்றி, சர்வஜ்ஞ ரான க்ருஷ்ணரும் பிரமையுடையவர் என்று சொல்லலாமா; சொ ல்லக்கூடாது, ஆனுல், கர்மம் ஸ்ரௌதம், ஸ்மார்த்தம் என்று இரண்டுவித மல்லவா; அதில் ஸ்ரௌத கர்மத்துக்கு சமுச்சயம் இல்லாமற் போனுலும் போகட்டும், யுத்தகர்மம் க்ஷத்ரியதர்ம மெ ன்று ஸ்ம்ருதியில் சொல்லப்பட்டிருக்கின்ற தல்லவா; அப்படிப் பட்ட யுத்தம் முதலான கர்மத்தோடு ஜ்ஞாநத்துக்கு சமுச்சயம் சொல்லக்கூடாதா; என்றுலோ; பூர்வத்தில் சொல்லப்பட்ட ஹே துக்களாலேயே சொல்லக்கூடாது. மேலும், ஸ்ம்ருதியில் யுத்த கர்மம் க்ஷத்ரிய தர்மமென்று அறிந்து முதலில் யுத்தம்செய்வதற்கு யத்நித்த அர்ஜுநன் கோரயுத்த கர்மத்தைச் செய்யென்று ஏன் சொல்லுகிறுயென்று ஸ்வதர்மமான யுத்தத்தைத் தூஷித்தானல்ல வா; கர்மசமுச்சயவாதமே சரியென்று பகவான் அர்ஜுநனுக்குச் சொன்னபக்ஷத்தில், இப்படிஸ்வதர்மமான யுத்தகர்மத்தை அர்

ஜுநன் தூஷிப்பானு; தூஷிக்கமாட்டான்; சமுச்சயவாதம் சரியல்லவென்றும், ஸாக்ஷாத்து மோக்ஷத்துக்குக் காரணமானது ஞானமேயென்றும், பகவான் சொன்னதினாலேயே அர்ஜுநன் ஸ்வதர்மமான யுத்தகர்மத்தைத் தூஷித்தான். அப்படி தூஷிப்பதும் சமுச்சய வாதத்துக்கு விருத்தமாகவே யிருக்கின்றது. ஆகையால் எத்தனை விதங்களால் விசாரித்தாலும் இந்தக்கீதாசாஸ்திர முழுதிலும் ஸ்ரௌத கர்மத்தோடாயினும் ஆத்மஜ்ஞாநத்துக்கு சமுச்சயமென்று எவ்வளவாயினும் சொல்லக்கூடாது. மேலும்,

“కుర్యాద్విద్వాంస్తథాసక్తశ్చికీర్షుర్లోకసంగ్రహమ్”

“குர்யாத்வித்வாம்ஸ்ததாஸக்தஸ்சிகீர்ஷுர்லோகஸங்க்ரஹம்”.

(வித்வான் லோகாநுக்ரஹார்த்தமாக ஸ்ரத்தையோடு கர்மத்தைச் செய்யவேண்டும்) என்று இந்தக்கீதா சாஸ்திரத்தாலேயே சொல்லப்பட்டிருக்கையில், கர்மம் ஞானத்தோடுகூடி மோக்ஷத்துக்குக் காரணமேயென்று சொல்லவேண்டு மல்லவா; நீயேன் அதுமோக்ஷஹேது அல்லவென்கிறாய் என்றாலோ; (கர்மத்துக்கு சமுச்சயம் ஏன் இல்லையென்கிறாய் என்றாலோ;) கேள்; யஜ்ஞதபோதாநாதி கர்மங்களைச் செய்து சித்தசுத்தியை யடைந்தவன், சாம்சாரிகஜ்ஞாநம் விஷயமாகாமல் உண்மையான ஸ்வரூபமே விஷயமாயுள்ள இந்தசமஸ்தமும் இரண்டாவது வஸ்துவில்லாத பரப்ரஹ்மமே யென்றும், அப்படிப்பட்ட பரப்ரஹ்மம் கர்த்ருத்வம் (நான்செய்கிறேன் என்பது) இல்லாததென்றும், என்கிற ஞானமுள்ளவனுவான். அப்படிப்பட்ட தத்வவேத்தாவானவன் செய்கிற கர்மம் கர்மாபாசமேயன்றி (கர்மத்தைப்போலத் தோன்றுவதேயன்றி) ஞானமுண்டாவதற்கு முன்புசெய்கிறவனுடைய கர்மம் போன்றதல்ல. ஏனென்றால், சோதநா சூத்ராநுஸாரமாய், சுருதிஸ்ம்ருதிகளால் சொல்லப்பட்ட கர்மம் செய்யத்தகுந்த தர்மமாயிருக்கின்றது. சுருதிஸ்ம்ருதிக் கிணங்கினதேயன்றி, வ்யாபாராதிகம் (நடத்தல், பேசுதல், புசித்தல் முதலானவை) மேற்சொல்லப்பட்ட கர்மம்போன்றதல்ல, ப்ரஹ்மவேத்தா வானவன் வர்ணாசிரமம் முதலான அபிமாநம் (எனது ப்ராஹ்மணவர்ணம், நான் இப்போது க்ருஹஸ்த்தா சிரமத்தி லிருக்கிறேன் என்பதுமுதலான

அபிமாநம்) இல்லாதவன் ஆதலாலும், இந்தக்கர்மம் விதிசோதித மாகையாலும், தர்மமாதலாலும் செய்யத்தக்கது. இதுவிதிசோதிதம் அல்ல ஆகையால் விடத்தக்கது என்கிற அபிமாநமும் இல்லாதவனே ஆயிருக்கிறான், ஆதலால் அவனுக்குக்கர்மத்தைச் செய்வதற்கு அதிகாரமுள்ளதென்று சொல்லக்கூடாது. ஆனால் அந்த தத்வவேத்தா வானவன் பேசிக்கொண்டிருக்கிறானே, அந்த வாக்குவ்யாபாரம் முதலாயினவை கர்மமல்லவா; என்றாலோ; அந்த வாக்குவ்யாபாரம் முதலாயினவை அந்த தத்வவேத்தாவுக்கு இன்னம்கொஞ்சம் அஜ்ஞாநமிருத்தலால் உண்டாகி, கர்மாபாசமா யிருக்கின்றதேயன்றி, கர்மமல்ல, ஆகையால்,

"కుర్యాద్విద్వాం స్తథాసక్తః"

"குர்யாத்வித்வாம்ஸ்ததாஸக்தஃ"

என்கிற வாக்யம் கர்மசமுச்சய வாதத்துக்கு சாதகமாக மாட்டாது. மேலும், அந்த தத்வவேத்தாவுக்குக் கர்மமும், அந்தக் கர்மத்தின் பயனும் நிவ்ருத்தமா யிருக்கின்றது. அதாவது அவன் கர்மத்தைச் செய்யவேண்டியவனும் ஆகமாட்டான், அப்படிப் பட்டவன் ஆகியும் தான்செய்யா திருந்தாலும் அந்நியரும் கர்மத்தைச் செய்யாமல் கர்மப்ரஷ்டர்களாகி, பிறகுஞானமில்லாதவர்களுமாகி, கெட்டுப்போவார்கள். தான்செய்த பக்ஷத்தில் பிறரும் கர்மத்தைச்செய்து, சித்தசுத்தியை அடைந்து, ஞானத்தினால் மோக்ஷத்தை அடைவார்களென்றும் யோசித்து, லோகாநுக்ர ஹார்த்தமாகத் தனக்கு ஞானமுண்டாவதற்கு முன்னே எப்படி கர்மத்தைச் செய்தானோ, அப்படியே ஞானமுண்டானபோதும் கர்மத்தைச் செய்கிறான். அந்தக்கர்மம், தனக்குப்பயனை விரும்பிச் செய்யப்பட்டதல்ல ஆதலாலும், லோகாநுக்ர ஹார்த்தமாகவே செய்யப்பட்ட தாதலாலும் கர்மாபாசமே யன்றி, ஞானத்துக்கு சமுச்சயமென்று சொல்லத்தகுந்த கர்மமாகமாட்டாது, அப்படிப் பட்ட வாக்குமுதலான ப்ரவ்ருத்திரூபமாகிய (பேசுதல் முதலானவையான) கர்மாபாசமே, ஞானத்தோடுகூடி மோக்ஷத்துக்குக் காரணமாகுமென்று சொல்லக்கூடாதா; என்றாலோ; உலகத்தில் எவ்விடத்திலாயினும் காரியத்துக்கு முன்பே, நியதமாய் காரண

மிருக்கவேண்டு மல்லவா, மோக்ஷரூப வாக்கியத்துக்கு முன்பா கவே ஞானம் எல்லாவற்றினும் நியதமாயிருக்கின்றது, கர்மாபா சம் அப்படியில்லை, எப்படியென்றால், உலகத்தில் சிலஞானிகள் அந்தக்கர்மாபாசம் யாத்ருச்சிகமாதலால் (இஷ்டத்தா லுண்டான தினால்) மோக்ஷரூப காரியத்துக்கு முன்பு நியதமாயிராது, ஆகை யால், ஞானம்போல மோக்ஷஹேதுவென்று சொல்லக்கூடாது, மேலும் க்ருஷ்ணர் க்ஷத்ரியதர்மமான யுத்தம் முதலான கர்மங் களைச் செய்துகொண்டு ஞானஸ்வரூபனுமாகி யிருக்கிறாரல்லவா, அவரிடத்தில் கர்மஜ்ஞாநங்கள் இரண்டும் இருக்கின்றன. அந்தக் கர்மம் மோக்ஷஹேதுவாகுமா; ஆகாது, மற்றென்ன வென்றால், அந்தப்கவான் அவாப்த சமஸ்தகாமன் (விரும்பினவற்றை யெல் லாம் அடைந்தவன்) ஆகையால் பலாபேக்ஷையும், அஹங்காரமும் இல்லாதவன் ஆதலால் அவரிடத்திலிருக்கிற கர்மம்ஜ்ஞாநத்தோடு சமுச்சயமுள்ளது, (ஜ்ஞாநத்தோடுகூடி மோக்ஷ ஹேதுவானது) அல்லவென்றே சொல்லவேண்டும், அப்படியே பலத்தை விரும்பா திருத்தலும், அஹங்காரம் இல்லாதிருத்தலும் என்கிற இரண்டு ஹேதுக்களும் க்ருஷ்ணரிடத்திற்போலேஜ்ஞாநியினிடத்திலும் இரு ப்பதனால் ஜ்ஞாநியினிடத்தி லிருக்கிறபேச்சுமுதலான கர்மாபாசம் மோக்ஷஹேது அல்லவென்று இந்த த்ருஷ்டாந்தத்தினாலும் வெளி ப்படுகின்றது. மேலும், பலத்தை விரும்பாதிருத்தல், அஹங்கா ரம் இல்லாதிருத்தல், என்கிற இரண்டு ஹேதுக்களும் ஜ்ஞாநியி னிடத்தில் சித்தமாயிருக்குமென்று எப்படி நம்பலாமென்று சொல் லுவையோ, ப்ரமாணத்தைச் சொல்லுகிறேன்,

శ్రు॥ "తత్త్వవిన్నాహంకరోమీతిమన్యతే ।
నచతత్ఫలమభిసంధత్తే"

"தத்வவிந்நாஹம்கரோமீதிமந்யதே ।
நசதத்பலம்பிஸம்தத்தே".

(தத்வவேத்தா வானவன் எந்தக்கர்மத்தை யாயினும் செய்து நான் செய்தேனென்று நினைக்கமாட்டான் அந்தக் கர்மபலத்தை யும் விரும்பமாட்டான்) என்கிற சுருதிப்ரமாணத்தால் ஜ்ஞாநி

அஹங்காரமும் பலாபேக்ஷையும் இல்லாதவன் என்று வெளிப்படு கின்றது. மேலும், இந்த சுருதிப்ரமாணம் பற்றுது, ஜ்ஞாநியினிட த்தில் பூர்வத்தில் சொல்லப்பட்ட இரண்டு ஹேதுக்களும் சித்தமா யிருக்கும் என்பதற்கு யுக்தியையும் சொல்லென்பையானுல் சொல் லுகிறேன்.

"ప్రయోజనమనుద్దిశ్యనమందోపిప్రవర్తతే"

"ப்ரயோஜநமநுத்திஶ்யநமந்தோபிப்ரவர்த்ததே".

(ப்ரயோஜநமில்லாமல் மூடனும் எந்தக்காரியத்தைச் செய்ய வும் ப்ரவர்த்திக்க மாட்டான்) என்கிற நியாயத்தால் எல்லாரும் கார்யகாரணபாவ மிருக்கிறபோதே எந்தக் கார்யத்திலாயினும் ப்ர வர்த்திக்கிறுர்கள், ஆகையால் அப்படிப் பட்டவர்களுக்கு அஹங் காரமும் பலாபேக்ஷையும் உண்டாவது அநுபவசித்தமா யிருக்கின றது, கார்யகாரண பாவமிருக்கிற இடங்களிளெல்லாம் நியதமாய் பலாபிலாஷையும் அஹங்காரமும் உண்டாகியே யிருக்கும். கார்ய காரண பாவமில்லாத இடத்தில் பலாபேக்ஷ யில்லாதிருத்தலும், அஹங்காரம் இல்லாதிருத்தலும் என்கிற இரண்டு ஹேதுக்களிருக் கும், அந்த இரண்டு ஹேதுக்கள் எங்கே யிருக்கின்றன வென்றுல், ஜ்ஞாநியினிடத்தில் அநுபவசித்தமா யிருக்கின்றன. எப்படியென் றுல், ஜ்ஞாநியானவன் தன்னை எவர்களாயினும் எந்தவிஷயத்தை யாயினும் கேட்டபோது அவர்களுக்கு அந்தவிஷயத்தைச்சொல்லி, நான்சொன்னே னென்று அஹங்கரிக்கவு மாட்டான், பிக்ஷாடநத் தால் கிடைத்த ஆஹாரத்தையுண்டு பசிதீர்தல் முதலானபலத்தை யடைந்தவனு மல்லன், ஆகையால் ஜ்ஞாநியினிடத்தில் அநுபவத் தாலும் மேலேசொன்ன இரண்டு காரணங்களும் அசித்தமாகாமல் சித்தமாகியே யிருக்கின்றன.

ஆனுல், பித்தனும், பலாபேக்ஷையும் அஹங்காரமும் இல்லாத வனுய் எவனிடத்திலாயினும் ப்ரவர்த்தித்துக கொண்டிருக்கிறு னல்லவா; அவனிடத்திலும் மேற்சொன்ன இரண்டுஹேதுக்களும் அநுபவசித்தமா யிருக்கின்றனவே; அவன்கூட ஞானிக்குச் சமாந மாவானு; அப்படியாவானுனுல் அவனும் முக்தனென்று சொல்ல வேண்டிவருமே; என்றுலோ? ஜ்ஞாநாம்ஶத்தில் ஒப்பாகாதவனுனு

லும், கார்யப்ரவ்ருத்தியில் ஒப்பானவனென்றே சொல்லவேண்டும். ஆகையாலேயே,

"బాలోన్మత్తపిశాచవత్"

"பாலோந்மத்தபிஶாசவத்".

என்று ஞானிக்கு கார்யப்ரவ்ருத்தி விஷயமாய் பித்தனோடு ஒப்புச்சொல்லப்பட்டது என்றும், ஞானமில்லாதவ னுகையால் முக்தனுக வில்லையென்றும் அறியவேண்டும், இப்படி விசாரிக்கையில் பித்தனிடத்திலேயே மேலேசொல்லப்பட்ட ஹேதுக்கள் இரண்டும் காணப்பட்டுக் கொண்டிருக்க, ஞானியினிடத்தில் இருக்குமோ இல்லையோ என்று எவ்வளவும் சந்தேஹிக்கக்கூடாது. மேலும், ஞானமுண்டாவதற்கு முன்னிருந்ததுபோல, ஞானமுண்டானபிறகும் கர்மப்ரவ்ருத்தி தத்வவேத்தாவினிடத்தில்நியதமாய்க் காணப்படுதலால், அந்த தத்வவேத்தாவி னிடத்திலுள்ள கர்மம் கர்மாபாசமென்று எப்படி சொல்லலாமென்று கேட்கிருயா; கேள்; காமமுள்ளவனுக்கே நித்யகர்மவிபாகம் சுபாவசித்தமாய் ஆவசியகமாயிருப்பதன்றி, காமமில்லாதவனுக்கு சுபாவமும் ஆவசியகமும் அல்ல. ஆகையாய் சுவர்க்கலோகம் முதலான சுகங்களை விரும்பி ஹோமம் செய்வதற்கும் அக்நியை முன்னே வைத்துக்கொண்டு அந்தசுவர்க்காதி சுகப்ராப்திக்கு சாதகமான அக்நிஹோத்ராதி கர்மங்களைச்செய்து கொண்டிருக்க, அந்தக்கர்மம் முடிவதற்கு முன்பே ஏதோ ஒருகாரணத்தால் அந்தசுவர்க்காதி சுகத்தில் உள்ளவிருப்பம் நஷ்டமானுல், பிறகு அதைப்பூர்த்தியாகச் செய்து கொண்டிருந்தாலும், அந்த அக்நிஹோத்ராதி கர்மமே காம்யகர்மம். (ஸ்வர்க்காதி சுகப்ராப்திக்கு .சாதகமானகர்மம்,) ஆகமாட்டாது, இப்படி மோக்ஷத்தைப் பார்க்கிலும் வேருன ஸ்வர்க்கசுகத்துக்கு சாதகமான கர்மமும் அரைப்பங்கு செய்தபிறகு அந்தக்கோரிக்கை நஷ்டமானுல், இதுநித்யகர்மம், இதுகாம்யகர்மம், இதுசெய்ய வேண்டியது, இதுசெய்யக்கூடாது என்கிற நிர்ப்பந்த மில்லையாதலால், ஸ்வர்க்காதி சுகசாதக மாகாதபோது கர்மங்க ளெல்லாவற்றையும் பூர்த்தியாகச்செய்து சித்தசுத்தியை யுடையவன் கர்மத்தைச் செய்தாலும் அந்தப்பேச்சு முதலான கர்மங்கள் மோக்ஷஹேதுவாகுமா;

ஆகாது. மேலே சொன்னபடி கோரிக்கை யில்லாதவனுதலால் இதுசெய்ய வேண்டும், இதுசெய்யக்கூடாது என்கிற நிர்ப்பந்த மில்லையாதலால் கர்மாபாசம் என்று சொல்லவேண்டுமே யன்றி, ஜ்ஞாநத்தோடுகூடி மோக்ஷசாதந மாகுமென்று எவ்வளவும் சொல்லக்கூடாது, ஞானிகர்மத்தைச் செய்தாலும் செய்யாதவனே, அந்தக்கர்மசம்பந்தம் ஞானிக்கு எவ்வளவும் இல்லை, இதற்குப் பிரமாணம்.

"కుర్వన్నపినకరోతినలిప్యతే"

"குர்வந்நபிநகரோதிநலிப்யதே".

(ஞானிகர்மத்தைச் செய்கிறவனு யிருந்தாலும் செய்யாதவனுகிருன், அந்தக்கர்மத்தால் சம்பந்திக்கப் படமாட்டான்) மேலும்,

"కర్మణైవహిసంసిద్ధి। మాస్థితాజనకాదయః"

"கர்மணைவஹிஸம்ஸித்திமாஸ்த்திதாஜநகாதயঃ".

(ஜநகர்முதலான தத்வவேத்தாக்கள் கர்மத்தாலேயே நல்ல நிலையை அடைந்தவர்கள்)

"పూర్వైఃపూర్వతరంకృతమ్"

"பூர்வைঃபூர்வதரம்க்ருதம்".

(முன்னோர்களான ஜநகாதியரால், தமக்கு ஞானமுண்டாவதற்கு மிகவும் முற்பட்டதான கர்மம் செய்யப்பட்டது) என்கிற இடத்தில் ஞானிகளான சனகாதியருடைய வ்யாபாரமும் கர்மசம்பந்தத்தால் சொல்லத்தகுந்ததா யிருக்கையாலும், ஸம்ஸித்தியை அடைந்தார்கள் என் கையாலும் கர்மாபாசம் என்பதற்கு இடமில்லை, மற்றென்னவென்றுல் ஞானத்தோடுகூடி மோக்ஷசாதநமேயாமென்று சொல்லவேண்டும் என்றுலோ, சொல்லுகிறேன் கேள்.

"కర్మణైవహిసంసిద్ధి। మాస్థితాజనకాదయః"

"கர்மணைவஹிஸம்ஸித்திமாஸ்த்திதாஜநகாதயঃ"

என்கிற இடத்தில், இப்படிவிகற்பித்து (இது இவ்விதமாகுமா; அன்றி மற்றொருவிதமாகுமா என்று) அர்த்தத்தை அறியவேண்டும், எப்படியென்றுல், ஜநகாதியரும் தத்வவேத்தாக்களாகி கர்மத்

தைச் செய்தார்களென்று சொல்லுகிருயா; அன்றி தத்வவேத்தாக்
கள் ஆகாமலே கர்மத்தைச்செய்கிருர்கள் என்கிருயா; ஞானிகளா
கியே கர்மத்தைச்செய்கிருர்கள் என்பாயானல், அவர்கள் தத்வ
வேத்தாக்க ளாகையாலும், தத்வவேத்தாக்களுக்கு கர்மம் அகிஞ்
சித்கரம் (சிறியபயனைத் தருவது) ஆகையாலும், தமக்கு ப்ரயோ
ஜநம் இல்லாமற்போனலும் லோகாநுக்ர ஹார்த்தமாய் அதாவது
பிறரும் தம்மைப்போலவேக்ரமமாகக் கர்மத்தைச்செய்து, சித்த
சுத்தியை யடைந்து, ஞானத்தால் மோக்ஷத்தை யடையக் கடவ
ரென்று, கர்மத்தைச் செய்துகொண்டு ஞானத்தாலேயே மோக்ஷ
த்தை அடைகின்ருர்களென்று சொல்லவேண்டும், ஞானிகள் எல்
லாவிஷயங்களிலும் உதாசீனர்கள் (சும்மா இருப்பவர்கள்) ஆகை
யால், அவர்களுக்கு லோகாநுக்ரஹார்த்தமாய் ப்ரவர்த்தித்தலும்
யுக்தமல்லவென்றே சொல்லவேண்டு மென்ருலோ; ௩-அ, ௨அ-
சுலோ,

"గుణాగుణేషువ ర్తన్తే"

"குணகுணேஷுவர்த்தந்தே".

(இந்த்ரியங்கள் விஷயங்களில் இருக்கும், அதாவது தத்வ
வேத்தா ஆனவன் கர்மத்தைச் செய்தாலும் விஷயங்களில் இந்த்ரி
யங்கள் இருக்குமேயன்றி, தான் (ஆக்மா) அவைகளில் இராது)
என்கிற ப்ரமாணத்தால் ஞானிகர்மத்தில் ப்ரவர்த்தித்தாலும் அந்த
க்கர்மசம்பந்தம் சிறிதும் உள்ளவனுக மாட்டான், ஆகையால் ஜந
காதியர் ஞானிகளாய், கர்மத்தில் ப்ரவர்த்தித்த இடத்தில், லோகா
நுக்ர ஹார்த்தமாய் ப்ரவர்த்தித்து, ஞானத்தினலேயே மோக்ஷ
மடைந்தார்களென்று சொல்லுதல் யுக்தமே, அவர்கள் தத்வவேத்
தாக்கள் அல்லஎன்கிருயா; அப்படிப்பட்ட ஜநகாதியர் பயனை விரு
ம்பாமல் ஈசுவரார்ப் பணபுத்தியோடு கர்மத்தைச்செய்து, அந்தக்
கர்மத்துக்குப் பயனுகிய சம்சித்தியை (ஞானம்பிறத்தலே லக்ஷண
ணைகளா யுள்ள சித்தசுத்தியை) அடைந்தார்களென்றே சொல்ல
வேண்டும், இந்த அர்த்தத்தையே, ரு-அ, ௧௦-சுலோ,

"కాయేనమనసాబుద్ధ్యా । కేవలైరిన్ద్రియైరపి । యోగినఃకర్మ
కుర్వన్తి । సఙ్గంత్యక్త్వాత్మశుద్ధయే"

"காயேநமநஸாபுத்த்யா । கேவலைரிந்த்ரியைரபி ।
யோகிநஃகர்மகுர்வந்தி । ஸங்கம்த்யக்த்வாத்மஶுத்தயே".

(ஞானிகள் சித்தசுத்தியின் பொருட்டு கர்மபல சம்பந்தத்தை விட்டுக் கர்மத்தைச் செய்கிறார்கள்).

"స్వకర్మణాతమభ్యర్చ్యసిద్ధింవిన్దతిమానవః"

"ஸ்வகர்மணாதமப்யர்ச்யஸித்திம்விந்ததிமாநவஃ".

(மனிதன் தன்கர்மத்தால் அந்தஈசுவரனை (என்னை) பூஜித்துச் சித்தசுத்தியை அடைகிறான்) என்றுசொல்லி,

"సిద్ధింప్రాప్తోయథాబ్రహ్మ"

"ஸித்திம்ப்ராப்தோயதாப்ரஹ்ம".

(என்பது முதலானவைகளால் பகவான் சொல்லப்போகிறார். முதலாவது சித்திசப்தத்துக்கு சித்தசுத்தியும், இரண்டாவதற்கு மோக்ஷசாதந ஜ்ஞாநசித்தியும் அர்த்தம், இந்தசுலோகார்த்தம், கர்மம் சித்தசுத்திமூலமாக ஞானமுண்டாவதற்கு ஹேதுவாவதில் ப்ரமாணமா யிருக்கிறது, ஆகையால் இந்தகீதா சாஸதிரத்தில் கேவல தத்வஜ்ஞாநத்தாலேயே மோக்ஷமுண்டாகுமே யன்றி, கர்ம சமுச்சிதமான தத்வஜ்ஞாநத்தால் மோக்ஷமுண்டாகாது என்கிற அர்த்தம் நிச்சயிக்கப் பட்டது. இவ்விடத்தில் சொன்னபடியே இந்தகீதா சாஸ்திரத்தில் அந்தந்த ப்ரகரணாநு சாரமாய் அவ்வவ் விடங்களில் இந்த அர்த்தத்தையே (ஆத்மஜ்ஞாநமே கேவலமுக்தி ஹேதுஎன்பதையே) காட்டப்போகிறா மாகையால், கீதாசாஸ் திரம் தத்வஜ்ஞாநமே ப்ரதாந விஷயமாகவுடைய ஒருவாக்யமான போதிலும் அந்தவாகயத்தினிடையில் கர்மமும் சொல்லப்பட்டது, ஆகையால் ப்ரகரண ப்ராமாண்யத்தால் கர்மம்ஞானத்துக்கு அங்கமென்று அறியவேண்டும், ஆகையால் கர்மத்துக்கு ஜ்ஞாநத்தோடு சமுச்சயம் உள்ளதென்று மறுபடியும் பிரமிக்கக்கூடாது.

மேலும், இந்தகீதாசாஸ்திரம் பதினெட்டு அத்யாயங்களை யுடையது, அதில்முதல் ஆறத்தியாயங்களும் ப்ரதமஷட்கம் என்றும், இரண்டாவது ஆறத்தியாயங்களும் த்விதீயஷட்கம் என்றும், மூன்றாவது ஆறத்தியாயங்களும் த்ருதீயஷட்கம் என்றும் சொல்

லப்படும், இவைகளுக்கே முறையே பூர்வகாண்டம், மத்யமகாண்டம், அந்திமகாண்டம் என்று பெயர்களுண்டு. அதில் பூர்வகாண்டத்தில் த்வம் பதார்த்தத்தை விஷயீகரிக்கிறான், (தத்த்வமஸி என்கிற மஹாவாக்யத்திலிருக்கிற த்வம் (நீ) என்கிறபதத்தால் சொல்லத்தகுந்த விஷயத்தைச் சொல்லுகிறார்) மத்யமகாண்டத்தில் தத்பதார்த்தத்தை அதுஎன்னும் பதத்துக்கு அர்த்தம் எதுவோ அதைச்சொல்லுகிறார். அந்திமகாண்டத்தில் தத்த்வம் என்னும் இரண்டு பதார்த்தங்களுக்கும் ஐக்யம் சொல்லுகிறார். அந்தஞானம் சாதநங்கள் இல்லாமல் உண்டாகாது, ஆகையால் அப்படிப்பட்ட ஐக்யஜ்ஞாநம் உண்டாவதற்குத்தகுந்த சாதநங்கள் ப்ரசங்கவசத்தால் அவ்வவ்விடங்களில் சொல்லப்படுகின்றன என்று அறிய வேண்டும், மேலும் தத்வஜ்ஞாநமே முக்யமாய் கைவல்யத்துக்கு (முக்திக்கு) சாதநமெனறு இதுவனைக்குமே விசதமாய்ச் சொல்லப்பட்டதென்றும், இதுசெய்யத்தகுந்தது இது செய்யத்தகாதது என்று தர்மவிஷயக ஜ்ஞாநமில்லாமல் அஹங்காரமமகாரங்கள் உள்ளவனாய், தாண்டக்கூடாத துக்கசாகரத்தில் மூழ்கி, சங்கடப்பட்டுக் கொண்டிருக்கிற அர்ஜுநனை பகவான்பார்த்து, ஆத்மஜ்ஞாநோபதேசத்தைப் பார்க்கிலும் அந்யமான சாதநம் அப்படிப்பட்ட துக்கசாகரத்தைத் தாண்டுதற்கு இல்லையென்று நினைத்து, தனக்கு அத்யந்தபக்தனும் அத்யந்தமித்திரனும் ஆகிய அர்ஜுநனுடைய துக்கத்தைப போக்குவதற்காக, ஜீவேசுவரர்களுக்கு பேதமில்லையென்கிற தத்வஜ்ஞாநத்தை உபதேசிக்க நினைத்தவனாய், அப்படிப்பட்ட ஞானம் சித்திக்கும்பொருட்டு பதார்த்த பரிசோதந விஷயமாக ப்ரவர்த்திக்கச் செய்துகொண்டு (அதாவது,)

“தத்த்வமஸி”

“தத்வமஸி”

என்கிற மஹாவாக்யத்தில் தத்என்னும் பதத்துக்கு என்ன அர்த்தமோ; த்வம் என்கிற பதத்துக்கு என்னஅர்த்தமோ; அஸி என்னும் பதத்துக்கு என்னஅர்த்தமோ அதையெல்லாம் நன்றாய் அறிந்து கொள்ளவேண்டும் என்கிற ஆசையை அர்ஜுநனுக்கு உண்டாக்கிக்கொண்டு) முன்னே த்வம் பதார்த்தத்தை நன்றாய்ச் சொல்லும்பொருட்டு,

"అశోచ్యానన్వశోచ స్త్వమ్"
"அஶோச்யாநந்வஶோசஸ்த்வம்".

என்பது முதலாகவுள்ள வாக்யத்தைச் சொன்னனென்று அறியவேண்டும்.

மேலும், எவனுக்கு அஜ்ஞாநமிருக்குமோ, அவனுக்கு பிரமை யிருக்கும், எவனுக்குபிரமை யிருக்குமோ, அவனுக்குப் பதார்த்த பரிசோதந பூர்வகம் (முன்பே இந்தப்பதத்துக்கு இந்த அர்த்தமென்று விசாரித்தலையுடையது) ஆகிய நல்லஜ்ஞாநம் வாக்யார்த்தத்தால் உண்டாகும், இது ஜ்ஞாநாதிகாரிகளுக்கு (சாதநசதுஷ்டய முள்ளவர்களுக்கு) உண்டாகின்றது. நீயும் ஜ்ஞாநாதிகாரி ஆகையால்முன்னே பீஷ்மாதிகள்யாரோ, அந்தபீஷ்மாதி பதங்களுக்கு அர்த்தம்யாதோ, அதைநன்றாய் விசாரிக்குமிடத்தில் ஆத்மஸ்வரூபம் இப்படிப்பட்டதென்று தெரியும், அப்படி தெரிவதனல் இப்பொழுதுண்டான சோகமோஹாதிகள் நீங்கும், அப்பொழுது ஸ்வதர்மமாகிய யுத்தத்தைச் செய்வதற்கு நீயே முயற்சிசெய்வாய் என்கிற கருத்துடனே ஸ்ரீக்ருஷ்ணர் அர்ஜுநனுக்கு,

"అశోచ్యానన్వశోచ స్త్వమ్"
"அஶோச்யாநந்வஶோசஸ்த்வம்".

இத்யாதி வாக்கியங்களைச் சொன்னனென்று அறியவேண்டும். மேலும், விசாரிக்கையில்,

"అశోచ్యానన్వశోచ స్త్వమ్"
"அஶோச்யாநந்வஶோசஸ்த்வம்".

என்கிற சுலோகத்தின் முக்கியமான கருத்து ஆத்மஸ்வரூபம் இப்படிப்பட்ட தென்றே தோன்றுகின்றது, (பலிதார்த்தமா யிருக்கின்றது) ஆகையால் சிலர்,

"ఆత్మావారే ద్రష్టవ్యః"

"ஆத்மாவாரேத்ரஷ்டவ்யঃ".

என்கிற சுருதியில் சொல்லப்பட்ட ஆத்மஸ்வரூப த்ரிசந விதி வாக்யார்த்தத்தை ஆத்மஸ்வ ரூபத்தைப் பார்க்கவேண்டும் என்று நியமித்துச் சொல்லுஞ்சொல்லை,

"అశోచ్యానన్వశోచస్త్వమ్"

"அஶோச்யாநந்வஶோசஸ்த்வம்".

என்கிற சுலோகத்தால் க்ருஷ்ணர்சொன்னர் என்றூர்கள், அப்படிசொல்லுதல் தகுதியல்ல, ஏனென்றூல்,

"అహరహస్సన్ధ్యాముపాసీత"

"அஹரஹஸ்ஸந்த்யாமுபாஸீத"

(நாள்தோறும் சந்தியாவந்தநத்தைச் செய்யவேண்டும்) என்கிற இடத்தில், விதி, ஆஜ்ஞாரூபமா யிருக்கின்றது. இவ்விடத்தில் சிரேயசு இல்லை.

"జ్యోతిష్టోమేనస్వర్గకామోయజేత"

"ஜ்யோதிஷ்டோமேநஸ்வர்க்ககாமோயஜேத".

(ஸ்வர்க்கத்தை விரும்புகிறவன் ஜ்யோதிஷ்டோமம் என்கிற யஜ்ஞகர்மத்தால் தேவதைகளைப் பூஜிக்கவேண்டும்) என்கிற விதி வாக்யத்தால் சொல்லப்படுகிற யஜ்ஞம்) செய்வதற்குத் தகுந்ததாகி ஸ்வர்க்கப்ராப்தி ரூபமான சிரேயசுக்கு சாதநமா யிருக்கின்றது, எதுசாத்தியமோ அது அநித்யமாதலால் நசிக்கத்தக்கது. யஜ்ஞத்தைச் செய்தல் சாதநம் ஸ்வர்க்க ப்ராப்திசாத்யம், அது அநித்யமாய் நசிப்பதாகவே யிருக்கின்றது, இப்படி உலகத்தில் விதி இரண்டுவிதமா யிருக்கின்றது, ப்ரக்ருதத்தில், ஆத்மாநித்யனும் நாசமில்லாதவனும் க்ரியாசூந்யனும் ஆதலால் ஆத்மஸ்வரூபம் க்ரியாசாத்யமல்ல. அப்படியல்லாமல் க்ரியா சாத்யமென்று சொன்ன பக்ஷத்தில் அது அநித்யமென்று சொல்லவேண்டும். அப்படிசொன்ன பக்ஷத்தில் ஆத்மஸ்வரூபம் நித்யமென்று சொல்லிக் கொண்டிருக்கிற சுருதிகளுக்கு விரோதமுண்டாகும்; ஆகையால் ஆத்மதரிசநத்தை விதித்தார் என்பதற்குத்தகுந்த ஹேதுவொன்றும் காணப்படவில்லை. ஆகையால்,

"ఆత్మా వా రే ద్రష్టవ్యః"

"ஆத்மாவாரேத்ரஷ்டவ்ய:"

என்கிற இடத்தில் ஆத்மதரிசநம் விதிக்கப்பட வில்லையென்று அறியவேண்டும்.

ஆனால், அவ்வவ்விடங்களில் லிங்லோட்டுக்கள்போல தவ்ய ப்ரத்யயமும் வித்யர்த்தகமாய்க் காணப்பட்டுக் கொண்டிருக்கின்றது. ஆதலால் இவ்விடத்திலும் புருஷசாத்ய மாகாததும், விதிக்கத்தகுந்த யாகாதிகள்போன்ற தல்லாததுமாகிய ஆத்மதரிசநத்தை விதிப்பது தகுதியாயிருக்கிற தென்றாலோ, அப்படிப்பட்ட அசங்கத தரிசநவிதியை ஏன்சொல்லவேண்டும். க்ருத்யங்களென்னும் பெயருள்ள ப்ரத்யயங்களில் உள்ள தவ்யப்ரத்யயத்துக்கு அர்ஹார்த்தமும் (யோக்யம் என்கிற அர்த்தமும்) உண்டு. ஆகையால், இவ்விடத்தில் ஆத்மாபார்க்கத் தகுந்தவனென்றே அர்த்தம் சொல்லலாம். இப்படிப்பட்ட அபிப்பிராயத்துடனே க்ருஷ்ணர்,

‘‘అశోచ్యాన్’’

‘‘அஸோச்யாந்’’.

இத்யாதி வாக்யங்களைச் சொன்னாரென்று அறியவேண்டும். மேலும், பீஷ்மாதியர் துக்கிக்கத்தகாதவர் என்றாயே, பீஷ்மாதியர் என்றால்யாவர், பீஷ்மாதி சப்தங்களுக்கு வாச்யார்த்தங்களான (சொல்லத்தகுந்த அர்த்தங்களான) சரீரங்களா; அன்றி லக்ஷ்யார்த்தங்களான (லக்ஷணையால் சொல்லத்தகுந்த அர்த்தங்களான) ஆத்மஸ்வரூபங்களா; என்றுகேட்டு விசாரிக்கவேண்டும், சரீரங்களேயென்று சொன்னபக்ஷத்தில் அவை சுருதிஸ்மிருதிகளில் சொல்லப்பட்டனவும் நிந்திக்கக் கூடாததுமாகிய ஆசாரங்களையுடையனவாகையால் அந்தச்சரீரங்கள் துக்கிக்கத் தகாதவையென்று அறியவேண்டும். இங்கே சரீரங்கள் சேதநவிசிஷ்டங்கள் என்று அறியவேண்டும். ஆத்மஸ்வரூபங்களே யென்று சொன்னபக்ஷத்திலும், அவை உண்மையாய் நித்யங்களாதலால் அப்பொழுதும் துக்கிக்கத் தகாதனவே யாயிருக்கின்றன. இப்படியிருக்கையில், ஓ அர்ஜுநா; வெள்ளியல்லாத முத்துச்சிப்பியை இதுவெள்ளியென்று எண்ணினாற்போல, நீபிராந்தியால் அஸோச்யர்களான பீஷ்மாதியரைக்குறித்து, அந்தபீஷ்மாதியர்என்னிமித்தமாக இறப்பார்களே, அவர்களில்லா திருந்தால் எனக்கு இந்தராஜ்யபுத்ர பார்யாதிகளாலுண்டாகிற சுகத்தைக்கொண்டு என்னபிரயோஜநம் என்று வீணாகத் துக்கித்தாய். மேலும், பண்டிதர்கள் (ஆத்மஜ்ஞாந முள்ளவர்

கள்) துக்கிக்கத் தகாதவர்களைக்குறித்து துக்கிக்கமாட்டார்க ளல்லவா; அ-க|| சக சுலோ.

"ఉత్సన్నకులధర్మాణాంమనుష్యాణాంజనార్దన ।
నరకేనియతంవాసోభవతీత్యనుశుశ్రుమ"

"உத்ஸந்நகுலதர்மாணும்மநுஷ்யாணும்ஜநார்த்தந ।
நரகேநியதம்வாஸோபவதீத்யநுஶுஶ்ரும".

(குலதர்மங்களை ஆசரிக்காத மனிதர்களுக்கு நரகத்தில் நித்ய நிவாசமுண்டாகும்) என்பது முதலான வாக்கியங்களைப் பண்டிதர்கள் சொன்னதுபோலச் சொல்லியநீயே இப்போது குலதர்மயாகிய யுத்தத்தைச் செய்யமாட்டேனென்று விருத்தமாய்ச் சொல்லுகிறாய், இதையெல்லாம் விசாரிக்கையில் (அதாவது துக்கிக்கத் தகாதவர்களைக் குறித்து நீதுக்கிப்பதைப் பார்க்கையில்) ஓ அர்ஜுனா; நீமூடனும், அதனாலேயே பிராந்தியுள்ளவனும் என்று சொல்லத்தகுந்தவனா யிருக்கிறாயென்று சொல்லவேண்டும், பண்டிதனென உன்னைக்குறித்து அப்படிசொல்லுதல் தகுதியல்ல.

ஆனால், ஸூக்ஷ்மபுத்தியுள்ளவன் பண்டிதன் என்று சொல்லலாகாதா ஆத்மஜ்ஞாந முள்ளவனே பண்டிதனென்று சொல்லவேண்டுமோ; அப்படிசொல்வதில் ப்ரமாணம் என்னவென்று கேட்கிறாயா; கேள்; சொல்லுகிறேன்.

"పాణ్డిత్యంనిర్విద్య"

"பாண்டித்யம்நிர்வித்ய".

என்று ப்ருஹதாரண்யக சுருதியிருக்கிறது. ஆத்மஜ்ஞானத்தை நிச்சயமாயடைந்து என்று இந்தசுருதிக்கு அர்த்தம். இப்படி சுருதி ப்ரமாணமிருத்தலால், பண்டிதன் என்றால் ஆத்மஜ்ஞாநமுள்ளவனேயென்று சொல்லவேண்டும்.

ஆனால், ஓக்ருஷ்ணா; நான்பண்டிதனென்று நீயே சொல்லுகிறாயல்லவா; பண்டிதன் என்றால் ஆத்மாவை அறிந்தவனல்லவா; ஆத்மாவை அறிந்தவனான எனக்கு மறுபடியும் இந்தமூடத்வமும் இந்தபிராந்தியும் எப்படி யுண்டாயினவென்று கேட்பாய், பலதரம் சிரவணமநந நிதித்யாஸநங்களால் உறுதியாக ஆத்மாவை அறியாதிருக்கையால் என்று அறியவேண்டும்.

ஆனுல், எனக்கு அப்படிப்பட்ட ஆத்மஜ்ஞாநம் இல்லையென்று உனக்கெப்படி தெரிந்ததென்று கேட்கிறுயோ; அப்படியானுல் துக்கிக்கத் தகாதவர்களான பீஷ்மாதியரைக் குறித்து ஏன் துக்கிக்கிறுய்; பண்டிதர்கள் அப்படி துக்கிக்கமாட்டார்களல்லவா; துக்கிக்கத் தகாதவர்களைக் குறித்து துக்கித்தல் என்கிற காரியம் உன்னிடத்தில் காணப்படுதலால், உனக்கு உறுதியான ஆத்மஜ்ஞாநமில்லையென்றும், ஆகையாலேயே இந்தமூடத்வமும் பிராந்தியும் உனக்குண்டாயின வென்றும் தெரிந்துகொள்ளக் கடவை, எவ்வெவ்விடங்களில் உறுதியான ஆத்மஜ்ஞாந மில்லையோ, அவ்வவ்விடங்களில் மூடத்வம் பிராந்தி முதலானவையுண்டு. இது பிரசித்தமான விஷயம், ஆகையால் அப்படிப்பட்ட மூடத்வம் பிராந்திமுதலானவைகள் நசிப்பதற்காக, பதார்த்த பரிசோதக பூர்வகமாக உறுதியான ஆத்மஜ்ஞாநத்தை சம்பாதித்துக் கொள்ளவேண்டு மென்று க்ருஷ்ணர் அர்ஜுநனேடு சொன்னுரென்று அறியவேண்டும்.

---

### ரஹஸ்யார்த்தம்.

பரமாத்மா, எலலாச்சரீரங்களி னுள்ளும் இருக்கிறவனுதலால் அந்தர்யாமியென்கிற பெயரை யுடையவனு யிருக்கிறுன். அவன் அந்தச்சரீரங்களை விட்டபோது அந்தப் பரமாத்மாவைக் குறித்தே மூடர்கள் (ஆத்மஸ்வரூபத்தை அறியாதவர்கள்) தமது அஜ்ஞாநத்தால் புத்ரர்முதலான சம்பந்தங்களைக் கற்பித்துக்கொண்டு, ஐயோ என்புத்ரன் இறந்தானே, என்குரு இறந்தாரே, என்பதுமுதலான ப்ரகாரங்களால் துக்கிக்கிறுர்களே யன்றி, சவமாயிருக்கிற சரீரத்தைக் குறித்தல்ல. அப்படியானபோது அந்தச்சரீரத்தை வீட்டில் வைத்துக்கொள்ளாமல் ஏன்சுடுகிறுர்கள், அதனுலே ஆத்மாவைக்குறித்தே துக்கிக்கிறுர்களென்று சொல்லவேண்டும், அப்படி ஆத்மாவைக்குறித்து துக்கித்தல் தகுதியல்ல, ஏனென்றுல், அந்த ஆத்மா, அஜன் (பிறப்பில்லாதவன்) ஆகையால் இறக்காதவனும், இறக்காதவனுதலால் நித்யனும் சாசுவதனுமாகி, பாவரூபனுகி, (ஸதை) என்றுல் காலத்ரயத்திலும் இருப்பவனுய், ஜநநமரணங்கள் இல்லாதவனுமா யிருக்கிறுன் என்று தெரிந்துகொண்டு, அவனுக்கு மரணமேதென்று பண்டிதர்கள் துக்கிக்க மாட்டார்கள். ஆகையாலேயென்று அறியவேண்டும்.

நித்யவஸ்துவென்பது யாதென்றால்,

"జాతస్యమరణంధ్రువమ్"

"ஜாதஸ்யமரணம்த்ருவம்"

(பிறந்தவனுக்கு இறப்பு அவசியமாயுண்டாகும்) என்கிற பிரமாணத்தால் ஜநநமில்லாத வஸ்துவுக்கு மரணமும் இல்லையென்கிற அர்த்தம் சித்தமாகின்றது, ஆகையால் ஜநந மரணங்கள் இல்லாத வஸ்துவே நித்யவஸ்துவென்றும், அந்த நித்யவஸ்துவே பரமாத்மாவென்றும் அறியவேண்டும்.

ஆனால், முயற்கொம்புகள் ஜநந மரணங்கள் இல்லாதவையாதலால், அவையும், ஆத்மாவைப்போல நித்யங்களாகின்றனவே என்றாலோ; ஆத்மாபாவரூபனாய், (ஸதை) என்றால் இருக்கிறவனாய் ஜநநமரணங்க ளில்லாதவனா யிருக்கிறான், முயற்கொம்புகளானால் அபாவரூபங்களாய் (அஸதைகளாய்) அதாவது இல்லாதவைகளாய், ஜநநமரணங்களில்லாதவைகளா யிருக்கின்றன, ஆதலால்தான் ஆத்மாமுயற்கொம்புபோல இல்லாத பொருளல்லவென்று அறிவித்தற்கு,

"శ్రు॥ అజోనిత్యశ్శాశ్వతోయంపురాణః"

"அஜோநித்யஶ்ஶாஶ்வதோயம்புராணஃ"

என்கிற சுருதியில் நித்யனென்றும் சாசுவதனென்றும் சொல்லப்பட்டானென்று அறியவேண்டும், ஆத்மஸ்வரூபத்தை இங்கே சொன்னபிரகாரமாய் அறிந்துகொள்ள மாட்டாமல் மூடர்கள் முன் சொன்னபிரகாரமாக துக்கிப்பார்களே யன்றி, பண்டிதர்கள் துக்கிக்க மாட்டார்கள் என்கிற அர்த்தமானது,

"అశోచ్యానన్వశోచస్త్వమ్"

"அஶோச்யாநந்வஶோசஸ்த்வம்".

என்கிற சுலோகத்தால் சொல்லப்பட்டதென்று அறியவேண்டும். மேலும், அந்த சுலோகத்தில் கண்டோக்தியாய்ச் சொல்லாமற்போனாலும், ஓ அர்ஜுனா; பண்டிதர்கள் சொல்லை நீசொல்லுகிறாய் என்பதனாலேயே அர்ஜுனன் பண்டிதன் என்று பொருள்படுகின்றதென்றும், பண்டிதர்கள் சொல்லையும் சொல்லுகின்றாய்

என்கிற இடத்தில் உம்மையால், யுத்தஞ்செய்ய வந்து யுத்தஞ்செய்யமாட்டேனென்று சொன்னேனேயென்று வெட்கப்பட்டு சும்மா இராமல் பண்டிதர்போலப் பேசுகிறாயே, இதைப்பார்க்கிலும் அநுசிதமான காரியமிருக்கிறதா, என்கிற அர்த்தம் குறிப்பிக்கப்பட்டதென்றும் அறியவேண்டும். மேலும்,

"ప్రజ్ఞావాదాంశ్చ"

"ப்ரஜ்ஞாவாதாம்ஸ்ச".

என்கிற இடத்தில் உம்மையே ஏகாரப்பொருளாகக் கொண்டு, பண்டிதர்கள் சொல்லைமாத்திரம் சொல்லுகிறாயேயன்றி, அந்தச் சொல்லின் தாத்பர்யத்தை நன்றாய் அறியாமலிருக்கிறாய் என்றானாலும் அர்த்தம் சொல்லலாமென்று அறியக்கடவது.

மேலும், பந்துநாசகாலத்தில் வசிஷ்ட்டாதியர் சிஷ்டர்களாய், மஹாநுபாவர்களாயும் துக்கிக்கவில்லையா; ஆகையால் நசித்த பந்துக்களைக் குறித்து துக்கிப்பது உசிதமே என்றுசொல்லக்கூடாது, ஏனென்றால், வசிஷ்ட்டாதியர் தாம்செய்த பாவகர்மமெதுவோ, அதிகமா யிருக்கிறதினால் துக்கித்தார்களென்றே சொல்லவேண்டுமென்று அறியக்கடவது.

இவ்வளவினாலேயே வசிஷ்ட்டாதியர் சிஷ்டர்களாதலால் அவர்கள் நசித்த பந்துஜநங்களைக் குறித்து துக்கிப்பது சிஷ்டாசாரமென்று சொல்லக்கூடாது. தூஷிக்கக்கூடாததாகி, வேதத்தில் சொல்லப்பட்ட கர்மம்யாதோ, அதை சிஷ்டர்கள் ஆசரித்த இடத்தில் அதுசிஷ்டாசாரமன்றி, தூஷிக்கத்தக்கதாகி வேதத்தில் சொல்லப்படாததாகிய துக்கிக்கத் தகாதவர்களைக் குறித்து துக்கித்தல் சிஷ்டாசாரம் ஆகமாட்டாது, அதுசிஷ்டாசார மாகுமானால் அந்த வசிஷ்டாதியர் உமிழ்ந்தால் அந்த உமிழ்தலும் சிஷ்டாசார மென்றே சொல்லவேண்டிவரும், ஆகையால் வேதத்தில் சொல்லப்பட்ட சிஷ்டாசரித கர்மமே சிஷ்டாசாரம் என்று சொல்லவேண்டும், மேலும், துக்கிக்கத் தகாதவர்களைக் குறித்து துக்கித்தாய், இதுஉனக்குத்தகாது என்கையால், துக்கிக்கத் தகுந்தவர்களைக் குறித்துதுக்கித்தல் தகும் என்கிற அர்த்தம் சித்திக்கிறதல்லவா, ஆனால்துக்கிக்கத்தகுந்தவர் யார், புத்ரர் முதலானவர்கள் புருஷார்த்த சாத

கங்களான காரியங்களைச் செய்யாமல், கெட்டகாரியங்களைச்செய்வார்களாயின் அவர்கள் துக்கிக்கத் தகுந்தவர்களென்று அறிய வேண்டும்.

மேலும், உலகத்தில் இருட்டில் கயிற்றைப் பார்த்தபோது பாம்பென்கிற பிராந்தி உண்டானவுடனே உண்மையாகவே பாம்பைப் பார்த்தபோது உண்டானதுபோல பயம்நடுக்கம் முதலானவைகள் உண்டாகின்றன, பிறகு கொஞ்சநேரத்தில் அது கயிறோ பாம்போ; உண்மையை அறிந்துகொள்வோமென்று தீபத்தை யெடுத்துக்கொண்டு போய்ப்பார்க்கிறபோது அதுகயிறென்றுதெரிந்தது, தெரிந்தவுடனே முன்புண்டானபயம் நடுக்கம் முதலானவைகள் நீங்குகின்றன அல்லவா; மேலும் வெல்லம் எப்பொழுதும் மதுரமான வஸ்துவென்று நம்மெல்லாருக்கும் நன்றாய்த் தெரிந்த விஷயமே யல்லவா; அது ஒவ்வொருகாலத்தில் பித்தம் அதிகரித்தவனுக்குக் கசப்பாயிருந்தாலும், அதுஎப்பொழுதும் கசப்பான பதார்த்தமென்று சொல்லலாமா; அதுமதுர பதார்த்தமென்கிற நிச்சயம் உலகத்தில் பிரபலமாகையால் கசப்புப் பதார்த்தமென்று சொல்லக்கூடாது, அந்தப்பித்தம் தணிந்தவுடனே அவனுக்கு அந்த வெல்லம் எப்பொழுதும் போலவே மதுரமா யிருக்குமேயன்றிக் கசப்பாயிருக்காதல்லவா; அப்படியே அஜ்ஞாநதசையி லிருக்கிறவர்கள் ஆத்மாவை அநாத்மாவாகப் பாவித்து சோகமோஹாதிகளை அடைகிறார்கள், ஜ்ஞாநதசையி லிருப்பவர்கள் ஆத்மாவை ஆத்மாவாகவே தெரிந்துகொண்டு சோகமோஹாதிகளை அடைய மாட்டார்கள், இந்த அர்த்தம்,

"గతాసూనగతాసూంశ్చనానుశోచన్తి పణ్డితాః"

"கதாஸூநகதாஸூம்ஶ்சநாநுஶோசந்திபண்டிதா:".

(பண்டிதர்கள் இறந்தவர்களைக் குறித்தும் உயிரோடிருப்பவர்களைக் குறித்தும் துக்கிக்கமாட்டார்கள்) என்கையாலே சொல்லப்பட்டதென்று அறியவேண்டும், மேலும்,

"ప్రజ్ఞావాదాంశ్చభాషసే"

"ப்ரஜ்ஞாவாதாம்ஶ்சபாஷஸே".

(என்கிற இடத்தில் ப்ராஜ்ஞையுள்ளவர்களுடைய அவாதங்களை என்றால் பண்டிதர்களுக்கு அநுசிதமான வார்த்தைகளைப் பேசுகிறாயென்று அர்த்தம் சொல்லலாமென்றும், அவ்விடத்திலிருக்கிற நஞ்என்கிற அவ்யயத்துக்குஅநுசிதம் அர்த்தமென்றும்அறியவேண்டும். மேலும், அநுஸோசநத்தைப் பண்டிதர்கள் போலப்பேசுவதும், இந்த் சுலோகார்த்தத்துக்கு முன்பு நடந்தவைகளே யாகியிருக்க.

"అన్వశోచః"

"அந்வஸோசః".

என்கிற இடத்தில் மாத்திரம் பூதார்த்தக ப்ரயோகமும்.

"భాషసే"

"பாஷஸே".

என்கிற இடத்தில் வர்த்தமாநார்த்தக ப்ரயோகமும் சரியாயிருக்கவில்லையே என்றாலோ; வேதத்தில் வ்யத்யஸ்தமாயும் ப்ரயோகங்கள் இருக்கும் ஆகையால், இந்தபாரதம்.

"భారతఃపఞ్చమోవేదః"

"பாரதஃபஞ்சமோவேதஃ".

என்கிற பிரமாணத்தினால் வேதமேயாதலால்,

"భాషసే"

"பாஷஸே".

(சொல்லுகிறாய்), என்கிற இடத்திலும் சொன்னாய் என்றே அர்த்தமென்று அறியவேண்டும்.

---

శ్లో॥ నత్వేవాహంజాతునాసం । నత్వంనేమేజనాధిపాః।
నచైవనభవిష్యామ । స్సర్వేవయమతఃపరమ్॥౧౨॥

நத்வேவாஹம்ஜாதுநாஸம் । நத்வம்நேமேஜநாதிபாஃ
நசைவநபவிஷ்யாமஸ் ஸர்வேவயமதஃபரம்.

---

## பதவுரை.

அஹம் - (சர்வேசுவரனாகிய) நான், ஜாது - ஒருகாலத்திலும், நாஸமிதிந - இல்லாதவனல்ல, த்வஞ்ச - நீயும், நாஸீரிதிந - இல்லாதவனல்ல, இமே - இந்த, ஜநாதிபா: பீஷ்மர்முதலான அரசர்களும், நாஸம்ஸிதிந - இல்லாதவர்களுமல்ல, வயம்ஸர்வே - நாமெல்லாரும், அத: - இந்ததேஹநாசத்தைக் காட்டிலும், பரம் - பிறகு, நபவிஷ்யாம இதிந,- இல்லாமற் போகிறவர்களல்ல.

## தாத்பர்யம்.

ஐயா; அர்ஜுனா; சர்வேசுவரனான நான்ஒருகாலத்திலும் இல்லாதவன் அல்லேன், என்றால் எல்லாக்காலங்களிலும் இருப்பவன். என்னைப்போல நீயும் இந்தபீஷ்மாதிகளும் ஸ்த்திரமா யிருப்பவர்களேயன்றி எந்தக்காலத்திலும் இல்லாதவர்களல்ல; ஆகையால் நாமெல்லாரும் முக்காலத்திலும் இருப்பவர்களே யென்று தாத்பர்யம்.

## சங்கரபாஷ்யதாத்பர்யம்.

அர்ஜுனா ; மரணமடையாநின்ற பீஷ்மத்ரோணாதியரைக் குறித்து, நான் எப்படி விசாரப்பட்டாம லிருப்பேன் என்று நினையாதே, பீஷ்மாதி சப்தங்களுக்கு லக்ஷ்யார்த்தங்களான சீவர்கள் நித்யமாயிருப்பவர்களே யன்றி நசிப்பவர்களல்ல. நித்யர்களென்று தெரிந்தபிறகு விசாரப்படவேண்டிய அவசியமில்லை யல்லவா, ஆகையால், விசாரப்படவேண்டா மென்றும், நித்யத்வபுத்தி (எப்பொழுதும் நிலையாயிருப்பவனென்கிற எண்ணம்) விசாரப்படாதிருப்பதற்குக் காரணமென்றும், நாராயணன் இந்தவாக்யத்தால் தெரிவிக்கிறார். மேலும்; அர்ஜுனா; நித்யத்வம் (எப்பொழுதும் இருத்தல்) ப்ரமாண மில்லையாதலால் சம்பவிக்காதென்று நினையாதே, எப்படியென்றால், முக்காலங்களிலும் இல்லாத முயற்கொம்பு உண்டாகாததுபோல முக்காலங்களிலும் இருக்கிற ஆத்மா பிறக்கமாட்டான், ஆத்மாமுன்பில்லாமல் இப்பொழுது உண்டானால் பிறப்பானென்று சொல்லலாமேயன்றி முன்பும் இப்பொழுதும் இருக்கையாலே பிறப்பானென்று சொல்லக்கூடாது.

(இல்லையென்னும்நினைப்பு)எல்லாவற்றிலும் உண்டாவது ஆகையால் அநுவ்ருத்தத்தில் வ்யாவ்ருத்தமான வஸ்துக்கள் பழுதையிற்பாம்பு போலக் கற்பிதங்கள் என்றும், சகலபேதங்களேயும் கற்பிக்கிறதற்கு ஆதாரமானதும், காரியகாரணவிபாகம் இல்லாததும்,கற்பிதம் ஆகாததும், ஆகியவஸ்து ஒன்று இருக்கிறதென்று அறியவேண்டும். மேலும், எதின்விஷயமானபுத்தி மீண்டுபோகின்றதோ, அந்தவஸ்து அஸத்து (இல்லாதது) என்றும், எதின்விஷயமான புத்திமீளாதோ. அதுஸத்து இருப்பது) என்றும், அறியவேண்டும், ஆகையால் கடம் (குடம்) இருக்கின்றது, படம் (வஸ்திரம்) இருக்கின்றது, குட்யம் (சுவர்) இருக்கின்றது. என்றுசொல்லும்போது கடம்படம் குட்யம் என்கிறபுத்திகள் மீண்டுபோகின்றன"இருக்கின்றது"என்கிற புத்தி மாத்திரம் எல்லா வஸ்துக்களிலும் வருகின்றது. ஆகையால் கட புத்தி அஸத்புத்தியென்றும், இருக்கின்றது என்கிறபுத்தி ஸத்புத்தி யென்றும் அறியவேண்டும்.

ஆனுல், ப்ரஹ்மத்தைக்காட்டிலும் பிந்நமாய் எதுவும் இல்லே யென்றுசொல்லும்போது ஸதஸத்விபாகம் (இருக்கிறது இல்லையென் கிறவிபாகம்) எப்படியுண்டாகும், உண்டாகாது, என்றுசொல்லக் கூடாது. ஏனென்ருல், ஸதஸத்விபாகம் ஸதஸத்புத்திகளின் அதீந மாயிருக்கின்றது. அப்படியிருக்கும்போது அந்தஸதஸத் புத்திகள் வ்யவஹாரதசையில்காணப்படுகிற ஸதஸத்வஸ்துக்களின்பேதத்தால் ஸத்ஜ்ஞாநம் உண்டானபோது அஸத்ஜ்ஞாநம் நிவர்த்தித்துப் போவதனுலும், அஸத்ஜ்ஞாநம் உண்டானபோது ஸத்ஜ்ஞாநம் உண்டாகாமற்போவதனுலும், ஸதஸத்விபாகம் சம்பவிக்கின்றது. ஆனுல், உண்மையாய்ப் பிரபஞ்சமே இல்லையானபோது புத்திவிபாக மும் இல்லாமற்போகையில் ஸதஸத்விபாகம் ஸதஸத்புத்திகளின் அதீநமாவது எப்படி சம்பவிக்குமென்று சொல்லக்கூடாது. வ்யவ ஹாரதசையில், கற்பிதங்களான இரண்டுபுத்திகள் ஏகவஸ்து நிஷ்டங் களாய் எல்லாச்சநங்களுக்கும் உண்டாவதனுல் என்று அறியவேண் டும். மேலும், அகற்பித புத்திவிபாகத்தைக்குறித்தே ஸதஸத்வி பாகமும் செய்யப்பட்டதென்று அறியவேண்டும். ஆனுல், இப்படி இர ண்டுபுத்திகளேயும் அநுசரித்து ஸதஸத்விபாகத்தைச் செய்வதனுல் ஸத்து என்பது சாமாந்யரூபம் (உலகத்திலுள்ள பதார்த்தங்கள் எல்

லாவற்றிலும், இதுவும் பதார்த்தமே, இதுவும் பதார்த்தமே, என்கிற
நினைப்புக்கு ஹேதுவானதும், பதார்த்தங்களுக்கு ப்ராணப்ரதமான
தும், சகலபதார்த்தங்களும் நசிக்கிறவரைக்கும் இருக்கிறதும் ஆகிய
தர்மம்) ஆனது ஆகையால் விசேஷத்தினுடைய (இந்த சாமாந்யதர்ம
த்துக்கு ஆதாரமான பதார்த்த சமூஹத்தின்) அபேக்ஷைவேண்டிய
தாயிற்று. ஆகையால், கடம் விசேஷம் என்றும், சத்துசாமாந்யம்
என்றும் எண்ணி ஸதஸத்துக்கள் இரண்டும் சாமாந்யவிசேஷங்கள்
(ஜாதிவ்யக்திகள்) என்கிற இரண்டு பதார்த்தங்களென்று எண்ணக்
கூடாதா, என்று சொல்லக்கூடாது. ஏனென்றால்,

"సోయం దేవదత్తః"

"ஸோயம்தேவதத்த:"

(அந்தத்தேவதத்தன் இவனே) என்கிற இடத்தில் அப்போதிரு
ந்த தேவதத்தனும் இப்போதிருக்கிற தேவதத்தனும் ஒருவனே யா
னதுபோல, அப்போதிருந்த தேசகாலங்களும் இப்போதிருக்கிற
தேசகாலங்களும் ஒரு தேவதத்தனிடத்திலேயே இருக்கிறதுபோல,
ஸதஸத்துக்கள் இரண்டும் ஏகவஸ்து நிஷ்டங்கள் (ஒருவஸ்துவினிட
த்திலேயே யுள்ளவை) ஆகையாலென்று அறியவேண்டும். அதா
வது,

"సోయం దేవదత్తః"

"ஸோயம்தேவதத்த:"

என்கிற இடத்திலுள்ள சாமாநாதிகரண்யம் எவ்விதமாய் ஏக
வஸ்து நிஷ்டமோ, அப்படியே

"సఙ్ఘటః"

"ஸங்கட:"

(குடம் இருக்கின்றது.) என்கிற இடத்திலுள்ள சாமாநாதிகரண்
யமும் ஏகவஸ்து நிஷ்டமென்றும், சத்தினிடத்தில் (ப்ரஹ்மத்தில்)
அசத்து (கடம்முதலாயுள்ள ப்ரபஞ்சம்) கற்பிக்கப்பட்டதாகையால்,
ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேறல்லவென்றும், அறியவேண்டும். அப்
படியல்லாமல் ஸதஸத்துக்களுக்கு பேதமேயிருக்கிற பக்ஷத்தில் கட
படங்களுக்கு எவ்விதமாய் ஏகவஸ்து நிஷ்டமான சாமாநாதிகரண்

யம் சம்பவிக்காதோ, அப்படியே சம்பவிக்காதென்றும், ஸதஸத்துக்கள் இரண்டும் ஏகவஸ்து நிஷ்டங்களாகையால் பிந்நங்கள் அல்லவென்றும், ஸத்புத்தியும் அஸத்புத்தியும் ஏகவஸ்து நிஷ்டங்களாய் வருகின்றனவென்றும் அறியவேண்டும்.

ஆனால், ஸதஸத்துக்கள் இரண்டும் ஏகவஸ்து நிஷ்டங்களென்றும், சாமாந்ய விசேஷங்கள்போன்றன அல்லவென்றும் ஏன் சொல்லவேண்டும்? நீலோத்பலங்கள்போலே சாமாந்யவிசேஷங்களும், தர்மதர்மிகள் (விசேஷணவிசேஷ்யங்கள்) ஆகுமென்று சொன்ன பக்ஷத்தில், ஏகவஸ்து நிஷ்டங்கள் ஆகலாமல்லவா, என்று சொல்லக்கூடாது. ஏனென்றால், சாமாந்யவிசேஷங்கள் பிந்நங்களா? அபிந்நங்களா? அன்றி பிந்நாபிந்நங்களா? பிந்நங்களான பக்ஷத்தில் ஏகவஸ்து நிஷ்டம்பொருந்தாது. அபிந்நங்களான பக்ஷத்தில் பேதமேயில்லாமற்போகின்றது ஆகையால்; அப்போது இரண்டு வ்யவஹாரமே இல்லையாதலால் ஏகவஸ்து நிஷ்டங்கள் என்கிற சொல்லே பொருந்தாது. பிந்நாபிந்நங்கள் என்கிற சொல்லே லோகவிரோதமாகும் ஆகையால், நீலோத்பலங்கள்போலே கௌணமாய் ஏகவஸ்து நிஷ்டங்கள் அல்லவென்றும், இரண்டும் இரண்டுபதார்த்தங்கள் என்றும், வ்யாவ்ருத்தமானது அநுவ்ருத்தமானதில் கற்பிக்கப்பட்டது. என்கிற நியமாநுசாரமாக ஏகவஸ்து நிஷ்டங்களென்றும், அறியவேண்டும். இப்படியே குணகுணிமுதலானவைகளிடத்திலும் பார்த்துக்கொள்ளவேண்டும். மேலும் சாமாந்யவிசேஷங்களென்று சொன்ன பக்ஷத்தில் சாமாநாதிகரண்யம் பொருந்தாது ஆகையால் ஸதஸத்துக்கள் சாமாந்யவிசேஷங்கள் அல்லவென்று அறியவேண்டும்.

மேலும், அந்த இரண்டுபுத்திகளில் கடபுத்தி வ்யபிசரித்துப் போகின்றதென்றும், ஸத்புத்தி வ்யபிசரித்துப் போகவில்லையென்றும் பூர்வத்தில் சொன்னோமாதலால், ஸதஸத்துக்கள் விசேஷங்கள் என்றும் சொல்லக்கூடாது. மேலும், ஒருவஸ்துவுக்கு த்வைரூப்யம் (இரண்டுரூபங்கள் உண்டாயிருத்தல்,) சம்பவிக்காது ஆகையாலும், அந்த சாமாந்யபுத்தி வ்யபிசரித்துப் போகாமையாலும், சாமாந்யம் ஒரேவஸ்து ஆனதுபோல, ஸத்தும் ஒரேவஸ்துவென்று அறியவேண்டும். ஆகையால் (கடபடாதிகள் வ்யபிசரித்துப்போவதனாலும், ஸத்புத்தி வ்யபிசரித்துப் போகாமையாலும்) கடாதி புத்திவிஷயமானது

அஸத்து என்றும், ஸத்புத்திவிஷயமானது ஸத்து என்றும் அறிய வேண்டும்.

ஆனல், கடம் நஷ்டமாய்ப்போனபோது கடம் இருக்கின்றது என்கிறஇடத்தில் இருக்கிறஸத்புத்தியும் நசித்துப்போகின்றதென்று சொல்லக்கூடாது. ஏனென்ருல், கடம் நசித்துப்போனபோது இருக்கிறது என்கிற புத்தி படத்திலிருக்கின்றதாகையால், ஸத்புத்தி நசித்துப்போகவில்லையென்று அறியவேண்டும்.மேலும்,ஸத்புத்திவிசேஷணமேவிஷயமாயுள்ளதாகையாலும்நசித்துப்போகாதென்று அறியவேண்டும். ஆனல்,ஸத்புத்திபோலவேகடபுத்தியும் ஒருகடம்நஷ்டமானபோதுமற்றொருகடத்தில் இருக்கின்றது ஆகையால் வ்யபிசரித்துப் போகவில்லையென்று சொல்லக்கூடாது. ஏனென்ருல், கடபுத்தி மற்றொரு கடத்தில் இருந்தாலும், படத்தில் இல்லையாதலால் என்று அறியவேண்டும். ஆனல், ஸத்புத்தி மாத்திரம் நஷ்டமான கடத்தில் காணப்படுகின்றதா? இல்லை, ஆகையால் ஸத்புத்தியும் வியபிசரித்துப் போய்க்கொண்டே யிருக்கிறதென்று சொல்லக்கூடாது. ஏனென்ருல், விசேஷணமே விஷயமாயுள்ள ஸத்புத்தி விசேஷ்யம் இல்லாமற்போகையால் காணப்படவில்லையே யன்றிதான் இல்லாமற்போகையாலல்லவாதலாலென்று அறியவேண்டும். மேலும் விசேஷ்யம் இல்லையாதலால் விசேஷணமாகிய ஸத்புத்தி காணப்படவில்லையென்றும், ஸத்புத்தி கடாபாவத்திற்கு அதிஷ்டாநமா யிருக்கிறதென்றும் க்ரஹிக்கவேண்டும், ஆனல், கடாதி விசேஷ்யங்கள் இல்லாதபோது விசேஷணமாகிய ஸத்புத்தி மாத்திரம் இருக்கிறதென்று எப்படி சொல்லலாம்? சொல்லக்கூடாது, ஆகையால், ஸத்புத்திக்குவிஷயமில்லையாதலால், இதுவரைக்கும் சொல்லப்பட்ட சாமாநாதிகரண்யம் பொருந்தாதென்று சொல்லக்கூடாது. ஏனென்ருல், உலகத்தில் கானலைப்பார்த்து இதோ நீர் இருக்கிறதென்று சொன்னபோது, சாமாநாதிகரண்யம், இரண்டில் ஒன்று இல்லாமற்போனுலும் எப்படி அங்கீகரிக்கப்பட்டதோ, அப்படியே அங்கீகரிக்கலாம் ஆகையாலென்று அறியவேண்டும். ஆகையால், (கடாதிகள் ஸத்தினிடத்தில் கற்பிக்கப்பட்டனவாதலால்) தேஹாதித்வந்த்வங்களும், அவற்றுக்குக் காரணங்களான பதார்த்தங்களும் இல்லாதவைகளே யென்று அறியவேண்டும்.

ஆனால், சிலர் இப்பொழுது சொல்லப்பட்ட விஷயமெல்லாம் பாஷ்யகாரரால் சொல்லப்பட்டதல்லவென்றும், எவனோ, குயுக்தியால் இப்படி சொன்னானென்றும், சகல ப்ரபஞ்சமும் இல்லையென்று சொன்னபக்ஷத்தில் பர்ஷ்யத்துக்கும் சாஸ்திரத்துக்கும் விரோதமுண்டாகுமென்றும், சொல்லுகிறார்கள். இப்படி சொல்லுதல்தகாது, ஏனென்றால், ப்ரபஞ்சம் இல்லையென்றால், முயற்கொம்புபோலே இல்லையென்று இப்பொழுதுசொல்லவில்லை, மற்றென்னென்றால், ப்ரஹ்மத்தைக்காட்டிலும் விலக்ஷணமென்று சொல்லப்பட்டது. அதாவது, ப்ரபஞ்சம் உண்மையல்லவென்று சொல்லப்பட்டது. ஆகையால், மேலே சொல்லப்பட்ட விஷயம் பாஷ்யத்தை அநுசரித்தும், சாஸ்திரத்தை அநுசரித்தும் இருக்கிறதாகையால், பாஷ்யத்துக்கும் சாஸ்திரத்துக்கும் விரோதமுண்டாகுமென்று சொன்னசொல் தகுதியல்லவென்று அறியவேண்டும். இதுவரைக்கும், ஆத்மஸ்வரூபமல்லாத ப்ரபஞ்சமெல்லாம் கற்பிதமாகையால் உண்மையானதல்லவென்று இந்தப்பதினாறுவது சுலோகத்தின் முதற்பாதத்தில் சொன்னாரென்று அறியவேண்டும், இனி இரண்டாம்பாதத்தால் சர்வ கற்பநாதிஷ்டானமாகிய ப்ரஹ்மம் கற்பிக்கப்படாததாகையால் நித்யமென்று சொல்லப்போகிறாரென்று அறியவேண்டும்.

ஆனால், ஸத்ஸ்வரூபமாகிய ஆத்மாவிசேஷங்களான கடபடாதிகள் நசித்துப்போனபோது, கடபடாதிகளிலுள்ள ஸத்வம்நசித்துப்போகாதாவென்று சொல்லக்கூடாது. ஏனென்றால், விசேஷங்களாகிய கடபடாதிகள் நசித்துப்போனாலும், ஸத்து நசித்துப்போகாதென்று இதுவரைக்குமே சொல்லப்பட்டதாகையாலென்று அறியவேண்டும், மேலும், ஸத்து எல்லாவிடங்களிலும் வ்யபிசரித்துப்போகாமலிருக்குமென்று முன்னேசொல்லப்படுதலால், ஸத்ரூபமாகிய ஆத்மாவுக்கு அபாவம் (இல்லாதிருத்தல்) இல்லையென்று அறியவேண்டும். மேலும், முன்னேயில்லாமல் அப்பொழுதுண்டான கடத்தில் ஸத்வம் (இருத்தல்) சம்பவிப்பதினால் இல்லாதகடத்துக்கு ஸத்வம் உண்டாதலாலும், கடம் இருக்கிறகாலத்திலுள்ள கடநிஷ்டைஸத்வத்துக்கு, கடம் நசித்துப்போனபிறகு அபாவம் சம்பவிக்கிறதினாலும், ஸத்து அஸத்தாகிறதென்றும், அஸத்து ஸத்தாகிறதென்றும் நினையாமல் ஸத்துஸத்தேயன்றி அஸத்தல்லவென்றும், அஸ

த்துஅஸத்தேயன்றி ஸத்தாகாதென்றும் அறிந்துகொள்ளவேண்டும்.
மேலும்,அஸத்வம் உண்டாயிருக்கையில்ஸத்வம்உண்டாகும்என்பது
லோகவிரோதமாதலால், முன்னையில்லாதகடத்துக்கு ஸத்வம் (இரு
த்தல்) உண்டாகமாட்டாதென்று அறியவேண்டும். ஒருவேளை கடம்
உண்டானபிறகு முன்னேயில்லையென்று சொன்னசொல்லுக்குவி
ரோதமாக இருக்கிறதென்று சொல்லுதல் சம்பவிக்கிறதாகையால்
அஸத்தாகிய கடம் ஸத்தானபக்ஷத்தில் ஆகட்டும், இவ்வளவால்
கடம் உண்டாயிருக்கும்போது அஸத்வம் இல்லாமற்போதல் மாத்ர
த்தால்) கடம் ஸத்தென்றுசொல்லுதல் உசிதமல்லவென்று அறிய
வேண்டும், ஏனென்றால், கடம் உண்டானபோதன்றி அஸத்வம்
போகாது, அஸத்வம் போனபோதன்றி ஸத்வம் உண்டாகாது. இப்
படியாகிறதினால், அந்யோந்யாஶ்ரயம் (பைத்தியம் தணிந்தாலன்றி
விவாகம்படியாது, விவாகம்படிந்தாலன்றி பைத்தியம்தணியாது என்
றாற்போல ஒன்றையொன்று ஆசிரயித்திருத்தல்) என்கிறதோஷம்
உண்டாவதனாலென்று அறியவேண்டும். இந்தநியாயத்தாலேயே ஸத்
து அஸத்தாகாதென்றும் அறியவேண்டும்.

ஆனால், ஸத்ரூபமாகிய ப்ரஹ்மம் இல்லாததுபோலக் காணப்
படாமற்போவதற்கும், அஸத்ரூபமாகிய ப்ரபஞ்சம் இருக்கிறது
போலக்காணப்படுவதற்கும் காரணமென்னவென்றால், ப்ரஹ்மத்தினு
டையஉண்மையை அறிந்துகொள்வதற்குத் தகுந்தஞானம்இல்லாமற்
போவதே யென்று அறிந்துகொள்ளவேண்டும், மேலும், தத்வவேத்
தாக்கள் ஸத்துஸத்தேயென்றும், அஸத்துஅஸத்தேயென்றும் தெரி
ந்துகொள்ளுகிறார்களென்று அறியவேண்டும்.ஆகையால்,ஓ அர்ஜுநா?
நீயும தத்வவேத்தாக்களுடைய மார்க்கத்தை அவலம்பித்து, சோக
மோஹங்களை விட்டுவிட்டு, காரியமாகியப்ரபஞ்சம் முழுதும் கான
லில் உள்ளநீர்போன்றதென்று நினைத்து, நியதாநியத ரூபங்களான
சீதோஷ்ணாதித்வந்த்வங்களை சகிப்பாயாக. மேலும் வேறுமார்க்கங்
களை அவலம்பித்து, சோகமோஹங்களை யடைந்து கெட்டுப்போகா
மல் சீதோஷ்ணாதிகளை சகித்து, சுகரூபியாகக் கடவையென்று
தாத்பர்யம்.

శ్లో॥ అవినాశితుతద్విద్ధి । యేనసర్వమిదంతతమ్।
వినాశమవ్యయస్యాస్య । నకశ్చిత్కర్తుమర్హతి॥౧౭॥

அவிநாஸிதுதத்வித்தி| யேநஸர்வமிதம்ததம்
விநாஸமவ்யயஸ்யாஸ்ய| நகஸ்சித்கர்த்துமர்ஹதி॥

---

பதவுரை.

---

ஏந - எந்தபரப்ராஹ்மத்தால், இதம் - இந்தக்காணப்படுகிற, ஸர்வம் - ப்ரபஞ்சம்முழுதும், ததம் - வ்யாபிக்கப்பட்டதோ, தத் - அந்தப்ராஹ்மத்தை, அவிநாஸிது - நாசமில்லாததாக, வித்தி - தெரிந்துகொள்வாயாக, (மேலும்) அவ்யயஸ்ய - நாசமில்லாத, அஸ்ய - இந்த ப்ரஹ்மத்துக்கு, விநாஸம் - நாசத்தை, கர்த்தும் - செய்வதற்கு, கஸ்சித் - எவனும், நார்ஹதி - தகுந்தவனல்ல,

---

தாத்பரியம்.

---

ஓ அர்ஜுநா ; இந்தக்காணப்படுகிற ப்ரபஞ்சமெல்லாம்விஷ்ணு என்கிறபெயருள்ள எந்தபரப்ராஹ்மத்தால்,கானலினுல் நீர்ப்பெருக்குப்போலேயே வ்யாபிக்கப்பட்டதோ (என்றால், கானலில் நீர்ப்ராந்தியுண்டானதுபோல, எந்தபரப்ரஹ்மத்தில் இந்தஜகத்ப்ராந்தி உண்டாகிறதோ) அப்படிப்பட்ட ப்ராஹ்மம் நசித்துப்போகாதென்று தெரிந்துகொள்வாயாக, மேலும், ஓ அர்ஜுநா; நாசமில்லாததற்கு நாசத்தைச்செய்வதற்கு எவனும் சமர்த்தனுக மாட்டானென்று அறிவாயாகவென்று தாத்பர்யம்.

---

சங்கரபாஷ்யம்.

---

இந்த சுலோகத்தால், முன்சுலோகத்தில் சொல்லப்பட்ட ஸத்துஎன்பது எப்படிப்பட்டதென்று விசாரிக்கிருர். ஆனுல், இப்பொழுது சொல்லப்பட்ட ஸத்துசாமாந்யமா; விசேஷமா; என்று சொல்லக்கூடாது. ஏனென்றுல், சாமாந்யமென்றுசொன்னபக்ஷத்தில்,

ஶ்லோ॥ "నిర్విశేషంనసామాన్యమ్"

நிர்விஸேஷம்நஸாமாந்யம்,

(சாமாந்யம் விசேஷரஹிதமானதல்ல) என்கிற நியாயாநுஸாரமாக விசேஷத்தினுடைய அபேக்ஷைவேண்டிவரும். அப்படியாகுமானல் மஹாப்ரளயத்தில் விசேஷங்களெல்லாம்நசித்துப்போகுமாகையால்சாமாந்யமும்நசித்துப்போகும்,ப்ரளயமானபின்பும் உள்ளதானசத்தைசாமாந்யமென்று சொல்லக்கூடாது. ஆனல், விசேஷங்களானபதார்த்தங்கள்நித்யங்களென்று தார்க்கிகர்கள்சொன்னர்கள். ஆகையால்,ப்ரளயமானபின்பும் இருக்குமென்றுசொல்லக்கூடாது.ஏனென்றால், விசேஷங்கள் காரியங்களென்று அங்கீகரித்தலால் ப்ரளயமானபின்பும் இருக்குமென்று நினைக்கக்கூடாது. ஆகையால், ஸத்துசாமாந்யமென்றுசொன்னபக்ஷத்தில் விசேஷங்களுடைய தர்மமாகும், ஆகையால் அதுவும் நசிக்குமென்றே சொல்லவேண்டிவரும். ஆகையால், ப்ரளயமானபின்பும் இருக்கிறஸத்து சாமாந்யமல்ல வென்று அறியவேண்டும். மேலும், ஸத்துவிசேஷமும் அல்லவென்று அறியவேண்டும். ஏனென்றால், ஸத்து விசேஷமென்று சொன்னபக்ஷத்தில், முன்சுலோகத்தில் சொல்லப்பட்ட ப்ரகாரம் வ்யாவ்ருத்தம் (மீண்டுபோவது) ஆகும், மீண்டுபோவது கற்பிதமாகையால் ஸத்துக்கு நாசம் உண்டாகவேண்டிவரும். மீண்டுபோகாதென்று சொன்ன பக்ஷத்தில் சாமாந்யமென்று சொல்லவேண்டிவரும். சாமாந்யமென்று சொன்ன பக்ஷத்தில் மேலே சொல்லப்பட்ட தோஷம் உண்டாகும்.

ஆனல், ஸத்துஎன்பது சாமாந்யவிசேஷங்களில் எதுவும் அல்லவல்லவா; இனி ஸத்து என்பது யாதென்பாயாகில், சாமாந்யவிசேஷங்களில்எதுவும் அல்லவென்றும்,அகண்டமென்றும், ஏகமென்றும் (ஒன்றேயென்றும்)

"ஸதேவ"

(ஸதேவ)

(ஸத்தே) என்கிற சுருதிமுதலாயுள்ள சுருதிகளில் சொல்லப்பட்ட ப்ரகாரம் சகலவிகாரங்களும் இல்லாததென்றும், பரப்ரஹ்மமென்றும் அறியவேண்டும். மேலும், எது நித்யமாயிருக்குமோ, அது ஸத்தென்று அறியவேண்டும். ஸத்ரூபமாகிய ஆத்மா சர்வலோகங்களிலும் வ்யாபித்திருக்குமாதலால் நாசமில்லாததா

யிற்றென்று அறியவேண்டும். மேலும், ஸத்து என்பது நசிக்கும்படியான ஸ்வபாவம் உள்ளது அல்லவென்றும், ஆகாசத்தோடு கூடின ப்ரபஞ்சமுழுதிலும் ஆகாசம் கடாதிகளில் வ்யாபித்திருக்கிறதுபோல வ்யாபித்திருக்கிறதென்றும் அறியவேண்டும். மேலும், ஸத்துக்கு நசிக்கும்படியான ஸ்வபாவம இல்லையென்று சொல்லுதலால், ஸ்வரூபநாசம் (முழுதும் நசித்தல்) இல்லையென்றும் அறியவேண்டும்.

ஆனால், ஸ்வரூபம் நசிக்காமற்போனால் போகட்டும், வேறான குணம் முதலியவற்றால் நாசமடையக்கூடாதா, என்றால், குணநாசத்தால் நாசமுண்டாகுமென்று சொல்லக்கூடாதா ; என்று சொல்லக்கூடாது, ஏனென்றால், வ்ருத்திக்ஷயங்கள் இல்லாததும், குணங்கள் இல்லாததும் ஆனதை நசிக்கச்செய்வதற்கு எதுவும் வல்லதல்லாமையால் என்று அறியவேண்டும். இப்படி சொல்லுதலால் ஆத்மாவுக்கு ஸ்வரூபநாசமும், குணநாசத்தாலுண்டாகிற நாசமும் இல்லையென்று அறியவேண்டும். மேலும், ஸத்ரூபமாகிய ப்ரஹ்மத்துக்கு அவயவங்கள் இல்லாமற்போதலால், அவயவங்களுள்ள சரீரத்துக்கு அவயவங்களினுடைய க்ஷயத்தால் நாசமுண்டானாற்போல, நாசமுண்டாகாதென்று அறியவேண்டும். மேலும், தேவதத்தன், தன்னுடைய தனம் முதலானவை நசித்துப்போதலால் நசித்துப்போனதுபோல, ஸத்ரூபமாகிய ப்ரஹ்மமும் தன்சம்பந்தமுள்ளவை நசித்துப்போகும்போது நசித்துப் போகக்கூடாதா ; என்று சொல்லக்கூடாது. ஏனென்றால் ஸத்ரூபமாகிய ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேறானது ஒன்றுமில்லை, ஆகையால் ப்ரஹ்மசம்பந்தமுள்ளவை எவையும் இல்லாமையாலென்று அறியவேண்டும். ஆகையால், அப்படி ப்ரஹ்மம் சரீரம்போல நசிக்காததும், தன்சம்பந்தமுள்ளவைகளால் தேவதத்தன்போல நசிக்காததும் ஆதலால் நாசமில்லாததும், ஆத்மஸ்வரூபமானதும் ஆகிய ப்ரஹ்மத்துக்கு ஈசுவரனும் நாசத்தைக் கற்பிக்கமாட்டானென்று அறியவேண்டும். ஆனால், உலகத்தில் ஓரானொருவன் தூக்குமுதலியவற்றைப் போட்டுக்கொண்டு தனக்குத்தானே மரணமடைவதுபோல, ஆத்மஸ்வரூபமாகிய ப்ரஹ்மமும் தனக்குத்தானே மரணத்தைக் கற்பித்துக்கொள்ளக்கூடாதா ; என்று கேட்கலாகாது, ஏனென்றால், ஸர்வ

மும் தானேயாதலாலும், தான் க்ரியாரஹிதமானதாகையாலும், தன்னிடத்தில் எந்த க்ரியையும் இல்லாமற்போகையாலும், தனக்குத்தானே நாசத்தைக் கற்பித்துக்கொள்ள மாட்டாதென்றும் அறியவேண்டும். இப்படி சொல்லுதலால் ஆத்மஸ்வரூபமாகிய ப்ரஹ்மம் ஸஜாதீய விஜாதீய ஸ்வகதபேத சூந்யமானதென்று தெரிந்துகொள்ளவேண்டும்.

---

## ரஹஸ்யார்த்தம்.

---

ஸத்ரூபமாகிய ஆத்மா, ஆகாசம்போல பரிபூர்ணமாதலால் நித்யம் என்று அநுமாந ப்ரமாணத்தால் தெரிந்துகொள்ளவேண்டும். மேலும், ஒருசரீரம் நசித்துப்போனாலும் எல்லாவிடங்களிலும் பதார்த்தங்கள் சகலஜநங்களுக்கும் காணப்பட்டுக்கொண்டிருத்தலால் சூரியனைப்போல சர்வப்ரகாசகமான ஆத்மா இருக்கிறதென்றும், சர்வப்ரகாசகமான ஆத்மா சரீரத்தோடுகூடவே நசித்தபக்ஷத்தில் பதார்த்தங்கள் காணப்படவேண்டிவருமென்றும், அர்த்தாபத்தி பரமாணத்தாலும் ஆத்மா நித்யமென்று அறியவேண்டும். ஆனால், ஆத்மாவுக்கு நாசமுண்டாகுமென்று சிலர்சொல்லுகிறார்கள். ஆகையால், ஆத்மாவுக்கு நாசமுண்டாகாதா ; என்று கேட்கக்கூடாது. ஏனென்றால், ஆத்மாவுக்கு ஸ்வரூபநாசம் உண்டாகுமா ; அன்றிப் பிறனொருவனால் நாசம் உண்டாகுமா ; அன்றித் தன்னாலேயே நாசமுண்டாகுமா ; அன்றி ஆத்மாவுக்கு ஆதாரமானது நசிப்பதனால் நாசமுண்டாகுமா ; அன்றி ஆத்மாவுக்குக் காரணமானது நசிப்பதனால் நாசமுண்டாகுமா ; அன்றி ஆத்மாவினால் உண்டானவை நசிப்பதனால் நாசமுண்டாகுமா ; என்று விசாரிக்கையில் எதினாலும் நாசமுண்டாவதற்கு இடமில்லையாதலால ஆத்மா நசிக்குமென்று சொல்லக்கூடாது. மேலும், ஆத்மா நிரவயவம் (அவயவங்கள் இல்லாதது) ஆதலால், அவயவங்களுள்ள தேகத்தைப்போல நசிக்காதாகையால், ஸ்வரூபநாசம் உண்டாகமாட்டாதென்று அறியவேண்டும். மேலும், ஆத்மாவைக்காட்டிலும் வேறான பதார்த்தம் ஒன்றும் இல்லாமற்போகையாலும், எல்லாம் தானேயாகையாலும், தானேகர்த்தாவும், கர்மமும், ஆவதற்கு இடமில்லை

யாதலாலும், (அதாவது நசிப்பதும் நாசத்தைச்செய்துகொள்வதும், ஒன்றேயாவதற்கு இடமில்லையாதலாலும்) பிறனாலும் தன்னாலும் ஆத்மாவுக்கு நாசமுண்டாகாதென்று அறியவேண்டும்.

శ్రు॥ "కస్మిన్ భగవః ప్రతిష్ఠితః, స్వేమహిమ్ని"

"கஸ்மிந்பகவ:ப்ரதிஷ்டித:| ஸ்வேமஹிம்நி||"

(ஓ பகவானே; ப்ரஹ்மம் எதனிடத்திலிருக்கின்றது தன் மஹிமையினிடத்திலேயேயிருக்கின்றது) என்கிற சுருதி ப்ரமாணாநுஸாரமாக, ஆத்மாவுக்குத் தன்னிலும்வேறான ஆசிரயம் (ஆதாரம்) இல்லையாதலால் ஆதாரத்தால் நாசமுண்டாகாதென்று அறியவேண்டும். மேலும், ஆத்மா அவயவங்களில்லாததாகையால் த்ரவ்யகுண க்ரியாதிகளோடு சம்பந்தமுண்டாவதற்கு இடமில்லையென்றும், ஆகையாலே சம்பந்தமுள்ளவை நசிப்பதனால் நாசமுண்டாகாதென்றும் அறியவேண்டும். மேலும்,

శ్రు॥ "నచాస్యకశ్చిజ్జనితా"

"நசாஸ்யகஸ்சிஜ்ஜநிதா"

(இந்த ப்ரஹ்மத்துக்குக் காரணன் ஒருவனுமில்லை) என்கிற சுருதிப்ரமாணாநுசாரமாக ப்ரஹ்மத்துக்குக் காரணம் ஒன்றுமில்லையாதலால், காரணம் நசித்தலால் ப்ரஹ்மம் நசிக்குமென்று சொல்லுதல் யுக்தமல்லவென்று அறியவேண்டும்.

శ్రు॥ "నతస్యకార్యంకరణంచవిద్యతే"

"நதஸ்யகார்யம்கரணஞ்சவித்யதே"

(அந்த ப்ரஹ்மத்துக்குக் கார்யமும் இந்திரியங்களும் இல்லை,) என்கிற சுருதி ப்ரமாணாநுஸாரமாக, ப்ரஹ்மத்தால் உண்டாவது எதுவுமில்லையாதலால், காரியம் நசிப்பதனால் நாசமுண்டாகுமென்று சொல்லுதலும் உசிதமல்லவென்று அறியவேண்டும். ஆகையால், ஸத்ரூபமான ஆத்மாவுக்கு எவ்விதமாய் விசாரித்தாலும் நாசமுண்டாவதற்கு இடமில்லையென்று அறியவேண்டும். மேலும், நாசமில்லாதவனும், எல்லாக்காலங்களிலும் இருப்பவனும் ஆகிய ப்ரஹ்மத்துக்கு நாசத்தைக் கற்பிப்பதற்கு எவனும் சமர்த்தனல்லன் என்று அறியவேண்டும். மேலும், உலகத்தில் எவன் ப்ரஹ்மத்து

க்கு நாசமுண்டாகுமென்று சொல்லுவாரேு அப்படிப்பட்டவன் நான் இல்லையென்று தனக்கே அபாவத்தைச் சொல்லிக்கொள்ள வேண்டிவரும். மேலும், சுருதிகளுக்கும், ப்ரத்யக்ஷ ப்ரமாணத்துக்கும் விரோதமுண்டாகும். ஆகையால் ஸ்த்ரூபமான ஆத்மா முழுதும் நசிக்குமென்ருகிலும், குணநிநாசத்தால் கொஞ்சமிருந்து கொஞ்சம் நசிக்குமென்ருகிலும் சொல்வதற்கு எவனுக்கும் சாமர்த்தியம் இல்லையென்று அறியவேண்டும்.

శ్లో॥ అన్తవన్త ఇమే దేహాః । నిత్యస్యోక్తాశ్శరీరిణః ।
అనాశినోఽప్రమేయస్య । తస్మాద్యుధ్యస్వ భారత॥ ౧౮॥

"அந்தவந்தஇமேதேஹா| நித்யஸ்யோக்தாஶ்ஶரீரிணஃ
அநாஶிநோப்ரமேயஸ்ய| தஸ்மாத்யுத்யஸ்வபாரத||"

---

பதவுரை.

---

நித்யஸ்ய - எப்பொழுதும் ஒரேரூபமானதும், அநாஶிந:-நாசமில்லாததும், அப்ரமேயஸ்ய - ப்ரத்யக்ஷ ப்ரமாணமுதலான ப்ரமாணங்களுக்குள்ளே எந்த ப்ரமாணத்தாலும் அறியக்கூடாததும், (ஆகிய) ஶரீரிண:-ஆத்மாவுக்கு, இமே - இந்த, தேஹா:-தேஹங்கள், அந்த வந்த:-நாசமுள்ளவை - (இதி - இப்படியென்று), (விவேகிபி:-தத்வவேத்தாக்களால்) உக்தா:-சொல்லப்பட்டன, தஸ்மாத் - அதனல், ஹேபாரத - ஓ அர்ஜுநா; யுத்யஸ்வ - யுத்தஞ்செய்வாயாக.

---

தாத்பர்யம்.

---

எப்பொழுதும் உள்ளதும், நாசமில்லாததும், ப்ரத்யக்ஷ ப்ரமாணமுதலான ப்ரமாணங்களுள் எந்த ப்ரமாணத்தாலும் தெரிந்துகொள்ளக்கூடாததும் ஆகிய தேஹிக்கு (ஆத்மாவுக்கு) இந்த சரீரங்கள் நாசமுள்ளவையென்று ஆத்மவேத்தாக்கள் சொல்லுகிறார்கள். ஆகையால் ஓ அர்ஜுநா! நீ விசாரப்படாமல் யுத்தம் செய்யக் கடவையென்று தாத்பர்யம்.

## சங்கரபாஷ்யம்.

இதுவரைக்கும் ஸதஸத்துக்கள் என்கிற இரண்டில், ஸத்து என்பது வ்யபிசரித்துப் போகாதென்றும், உண்மையாயிருப்பதென்றும், சொன்னபல்லவா, இப்பொழுது அஸத்து என்பதை நிர்ணயித்துச் சொல்லவேண்டுமென்று அர்ஜுனன் கேட்பானே என்னவோவென்று நினைத்து விசாரிக்கையில், எது இல்லாமற்போகின்றதோ, அது அஸத்து என்று ஸ்ரீக்ருஷ்ணபகவான் இந்த சுலோகத்தால் நிர்ணயித்துச் சொல்லுகிறாரென்று அறியவேண்டும். ஆனால் தேஹாதிப்ரபஞ்சமுழுதும் அஸத்தே (இல்லாததே) என்று சொல்லப்பட்டிருக்கும்போது, இல்லாததைச் சொல்லும் என்கிற வினா எப்படியுண்டாகுமென்று கேட்கலாகாது. ஏனென்றால், தேஹாதிப்ரபஞ்சமுழுதும் முயற்கொம்புபோலே இல்லாததல்லவென்று இதுவரைக்குமே சொல்லப்படிருக்கின்றது. ஆகையால், வினவுதற்கு இடமிருக்கிறதென்று அறியவேண்டும். மேலும், இப்பொழுது தேஹம்முதலாயுள்ள அநாத்மவஸ்துக்களெல்லாம் அஸத் என்கிற சப்தத்தால் சொல்லப்படுமெனறு அறியவேண்டும். மேலும், ஆத்மா எப்பொழுதும் இருக்கிறதென்று சொல்லுதலால், ஆத்மா வொன்றுக்கே ஸ்வாதந்த்ரியம் உண்டென்றும், வேறான தேஹாதிகளுக்கு ஸ்வாதந்த்ரியம் இல்லையென்றும் தெரிந்துகொள்ளவேண்டும். மேலும், ஆத்மா தேஹியென்று சொல்லப்படுதலால் ஆகாசம் முதலானவைகளைக்காட்டிலும் வேறென்று அறியவேண்டும். நாசமில்லாதது என்று சொல்லுதலால், லோகரூபமாய்ப் பரிணமிக்கிற மாயைபோலே காலத்தோடுகூட நசிக்கிறதல்லவென்று அறியவேண்டும். ப்ரத்யக்ஷம் முதலாயுள்ள ப்ரமாணங்களால் அறியவொண்ணாதது என்று சொல்லுதலால், ப்ருதிவி முதலானவற்றைப்போல (பூமிமுதலானவைகளைப்போல) காணப்படுவது அல்லவென்று அறியவேண்டும். ஆகையால் யுத்தம்செய்வாயாக என்று சொல்லுதலால் தேஹாதிகள் அவஸ்துக்கள் என்றும், ஆத்மா வொன்றே ஏகரூபமாயிருக்கிற வஸ்துவென்றும், ஸ்வதர்மத்தை ஆசரிக்கிறபோது ஹிம்ஸாதி தோஷவிசாரம் பண்ணவேண்டியதில்லையென்றும் தெரிந்துகொள்ளவேண்டும்.

ஆனுல், தேஹாதிகளில் ஸத்புத்தி (தேஹம் இருக்கிறது என்கிறபுத்தி) அநுவர்த்தித்துக் கொண்டுவருகின்றது, அப்படி அநுவர்த்தித்துக் கொண்டுவருகிற ஸத்புத்திக்கு விச்சேதம் இல்லையல்லவா, அப்படியிருக்கையில், தேஹாதிகளுக்கு நாசமுண்டாகுமென்று எப்படி சொல்லலாமென்று வினவக்கூடாது. ஏனென்றால், தேஹாதிகளில் ஸத்புத்தி அநுவர்த்தித்துக்கொண்டு வருவதானுலும், ப்ரமாணங்களால் நன்றாய் விசாரிக்கும்போது, கானலில் அநுவர்த்தித்துக்கொண்டு வருகிற ஸத்புத்திபோல, விச்சேதமுள்ளது (நாசமுள்ளது) ஆகிறதினுல் என்று அறியவேண்டும். மேலும், ஸ்வப்நத்தில்வருகிற தேஹாதிகளும் காரடிவித்தைக்காரன் செய்கிற மாயையாலே கற்பிக்கப்பட்ட தேஹாதிகளும் நன்றாய் விசாரித்தபிறகு எப்படி இல்லாமற்போகின்றனவோ, அப்படியே இந்த தேஹாதி ப்ரபஞ்சமுழுதும் நன்றாய் விசாரிக்கும்போது இல்லாததாகிவிடுகிறதென்று அறியவேண்டும். ஆனுல் சரீரங்கள் முதலானவைகள் நசித்துப்போவன ஆனுலும், ஆத்மாவுக்கு சரீரி என்கிற பெயர் உண்டாயிருத்தலால், சரீரசம்பந்தம் ப்ரவாஹரூபமாய் (அவிச்சிந்நமாய்) உணடாகுமாகையால் சரீரசம்பந்தத்துக்கு நாசமில்லையென்று சொல்லக்கூடாது. ஏனென்றால், ப்ரவாஹம் (சரீரசம்பந்தம்) ப்ரவாஹியாகிய தேஹத்தைக்காட்டிலும், பிந்நமாகச் சொல்லப்படாமையால், ப்ரவாஹரூபமாய் தேஹாதிகள் இல்லாமற்போகும்போது தேஹசம்பந்தம் சித்தியாது ஆகையாலென்று அறியவேண்டும். மேலும், சம்பந்தம் சித்தியாமற்போகும்போது சம்பந்தத்துக்கு நாசம் இல்லையென்பது முழுதும் சம்பவிக்காதென்றும் அறியவேணடும. ஆகையாலேயே ஆத்மவேத்தாக்கள் சொல்லுகிறுர்கள் என்று தெரிவிக்கப்பட்டதென்று அறியவேண்டும். அதாவது, ஆத்மாவுக்கு உண்மையாய் சரீரசம்பந்த மில்லையென்றும், ஆத்யாஸிக சம்பந்தத்தால் (ப்ராந்தியால்) சரீரங்கள் இருப்பதுபோலக் காணப்படுகின்றனவென்றும், தத்வஜ்ஞாநத்தால் ப்ராந்திபோனவுடனே சரீரங்களும் போகாநின்றனவென்றும் அறியவேண்டும்.

ஆனுல், நித்யன் (எப்பொழுதும் இருப்பவன்) என்று சொன்னுலும், நாசமில்லாதவனென்று சொன்னுலும், விசாரிக்கும்போது அர்த்தம் ஒன்றேயல்லவா ; இவ்விதமாய் ஒரு அர்த்தத்தையே கொ

டுக்கிற இரண்டுபதங்களைச் சொல்லுதலால் புநருக்ததோஷம் (சொன்னதையே சொல்லுதல் என்கிற தோஷம்) உண்டாகாதா ; என்று கேட்கலாகாது. ஏனென்றால், நித்பத்வம் (எப்பொழுதும் இருத்தல்) இரண்டுவிதங்களும், நாசம் இரண்டுவிதங்களும் ஆகியிருத்தலால் இரண்டுவிதங்களான நாசமும் இல்லாதவனென்றும், இரண்டுவிதங்களான நித்யத்வங்களில் ஒருவிதமான நித்யத்வமே உள்ளவனென்றும், தெரிவிப்பதற்குச் சொல்லப்படுதலாலென்று அறியவேண்டும். ஆனால், நித்யத்வம் எப்படி யிரண்டுவிதங்களென்றும், நாசம் எப்படி யிரண்டுவிதங்களென்றும், கேட்பாயாகில், சொல்லுகிறேன்கேள், காலமிருக்கிற வரைக்கும் (ப்ரளயகாலம் வரைக்கும்) இருப்பதும், காலம் நசித்துப்போன பிறகும் இருப்பதும் நித்யம் என்று சொல்லப்படும், பஸ்மமாய்ப் போவதனால் காணப்படாததாகி, முழுதும் நசிப்பதும், வேறுவிதமாய்ப் பரிணமிப்பதும் நாசம் என்று சொல்லப்படும். ஆகையாலேயே, பஸ்மமாகையால் காணப்படாததாகி, முழுதும் நசித்துப்போனதேஹம், வியாதி முதலியவற்றோடு,(பிணிமுதலானவற்றோடு) கூடிப்பிறந்து, கிழத்தனம் முதலாயுள்ள காரணங்களால் வேறாகமாறியிருக்கிற தேஹத்தை நசித்ததென்றே வ்யவஹரிக்கிறார்கள். ஆகையால், ஆத்மாவுக்கு இந்த இரண்டுவிதங்களான நாசமும் இல்லையென்றும், மாயை முதலானவைபோல ஆத்மாவும் காலமுள்ளவரைக்கும் இருந்து காலம் நசித்தபிறகு நசிப்பதல்லவென்றும் அறியவேண்டும். மேலும், இப்படி சொல்லுதலால், ஆத்மாவுக்குப் பரிணாமி நித்யத்வம் (ப்ருதிவ்யாதிகளைப்போலே காலத்தோடுகூடவே நசித்தல்) இல்லையென்றும், நிர்விகாரமானதாகையால் கூடஸ்த்த நித்யத்வம் (ப்ரளயமானபின்பும் இருத்தல்) உள்ளதென்றும் அறியவேண்டும், மேலும், நித்யமானதென்றும், நாசமில்லாததென்றும் இரண்டு பதங்களைச் சொல்லாமல், ஒருபதத்தைமாத்ரமே சொன்னபக்ஷத்தில், ஆத்மாவுக்குப் பரிணாமிநித்யத்வம் சொல்லவேண்டி வருமென்றும், அதாவது ப்ருதிவ்யாதிகள்போலே நித்யமென்று சொல்லவேண்டிவருமென்றும் அறியவேண்டும், ஆனால் ஆத்மா, வேதாந்த வேத்யன் என்று சுருதியில் சொல்லப்படாநிற்கும்போது, ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களுள்ளே எந்த ப்ரமாணத்தாலும் அறியப்படாதென்று எப்படி சொல்லலாம், சொல்லக்கூடாது. ஆகையால், ஆத்மா,

சப்தப்ரமாணத்தால் அறியப்பட்டுக் கொண்டிருக்கின்றதென்றும், மேலும், உபநிஷத் விசாரணை பண்ணுததற்கு முன்னே ஆத்மஜ்ஞாநம் இல்லாமற் போதலாலும்; உபநிஷத் விசாரணை பண்ணின பிறகு ஆத்மஜ்ஞாநம் உண்டாவதனாலும், ஆத்மா, ப்ரத்யக்ஷப்ரமாணம் முதலாயுள்ள வேறு ப்ரமாணங்களாலும் அறியப்பட்டுக் கொண்டிருக்கின்றதென்றும், சொல்லக்கூடாது. ஏனென்றால், ஸ்வதஸ்ஸித்தமான ஆத்மா, தெரியாததைத் தெரிவிப்பதான ப்ரமாணத்தால், தெரிந்துகொள்ளவொண்ணாததாகையாலென்று தெரிந்துகொள்ளவேண்டும்.

ஆனால், ப்ரமாணாபேக்ஷயில்லாமலே, ஆத்மா இப்படிப்பட்டவனென்று எப்படித் தெரிந்துகொள்ளலாம் ; தெரிந்துகொள்ள இடமில்லை, ஆகையால், ப்ரமாணத்தை அங்கீகரித்தே தீரவேண்டுமென்று சொல்லக்கூடாது. ஏனென்றால், தெரிந்துகொள்ளுகிற ஆத்மா (தான்) சித்தமானபின்பல்லவா விஷயங்களைத் தெரிந்துகொள்வதற்குத் தகுந்த ப்ரமாணத்தைக்குறித்து யோசித்தல் நேரிடும். முன்னே நான் இருந்தேன் என்கிற ஜ்ஞாநமில்லாமற்போகுமானால், தெரிந்துகொள்ளத்தகுந்த விஷயங்களைக்குறித்து எப்படி ப்ரவர்த்திப்பான், ப்ரவர்த்திக்கமாட்டான், ஆகையால், ப்ரமாதா (தெரிந்துகொள்ளுகிற) ஆத்மா (தான்) சித்தமாயிருத்தல் சர்வலோகப்ரசித்தமாயிருப்பதனாலும், ஆத்மா என்று சொல்லப்படுவது உலகத்தில் எவனுக்கும் அப்ரசித்தமான வஸ்துவல்லாமற் போகையாலும், ஆத்மஜ்ஞாநம் ப்ரமாணாபேக்ஷயில்லாமலே உண்டாதலாலென்று அறியவேண்டும். மேலும், ப்ரத்யக்ஷம் முதலானவை அநாத்மபதார்த்தங்களைத் தெரிவிக்கத் தக்கவையென்றும், அநாத்மபதார்த்தங்களுள் தெரியாதவைகளைத் தெரிவிப்பதனால், தெரியாதவைகளைத் தெரிவிக்கும் என்கிற ப்ரமாணலக்ஷணம் (ப்ரமாணவ்யவஹாரம்) உள்ளவையென்றும், தெரிந்துகொள்ளவேண்டும். மேலும், இப்படிவ்யாவஹாரிக ப்ராமாண்யமுள்ள ப்ரத்யக்ஷாதிகள், அநாத்மபதார்த்தங்களோடு கூடிக்கொண்ட ஆத்மாவைத் தெரிவிப்பதில் சாமர்த்தியமுள்ளவையாயினும், கேவலாத்மாவைத் தெரிவிக்கமாட்டாவென்று அறியவேண்டும். ஆனால், ஆத்மா வேதாந்தங்களால் அறியப்படும், என்கிற சுருதிக்கு விரோதம் உண்டாகவில்லையா.

என்று கேட்கலாகாது. ஏனென்றால், அந்த்யம் (முடிவிலுள்ளது) ஆகிய வேதப்ரமாணம் ஆத்மாவிலுள்ள அநாத்ம தர்மங்களுடைய ஆரோபணத்தை மாத்திரம் நீக்கிக்கொண்டிருத்தல் மாத்திரத்தால் ஆத்மாவைக்குறித்து ப்ரமாணமானது ஆகையால் என்று அறிய வேண்டும்,

ஆனால், வேதம், முடிவிலுள்ள ப்ரமாணம் எப்படியாகும், என்பாயானால் விவரிக்கிறேன். கேட்பாயாக, ப்ரத்யகாத்மாவாகிய ப்ரஹ்மம் ப்ரதிபாதிக்கப்பட்டுக் கொண்டிருக்கும்போது, தெரிந்துகொள்ளுகிறவன், தெரியப்படுவது, தெரிவிப்பது என்கிற பேதம் நீங்குகின்றதாகையால், வேதம் முடிவிலுள்ள ப்ரமாணமாயிற்றென்று அறியவேண்டும். மேலும், வேதம் அபௌருஷேயம் (ஸ்வயமாயுண்டானது) ஆகையால், தோஷரஹிதமானதென்றும், ஆகையாலேயே உத்தமப்ரமாணமென்றும், அறியவேண்டும். ஆனால் ப்ரமாணமென்பது, தெரியாததைத் தெரிவிப்பது ஆகையால் வேதப்ரமாணம், ஸ்வதஸ்ஸித்தமான ஆத்மாவைத் தெரிவிப்பதில் உபயோகமாகாது. ஆகையால், ப்ரத்யகாத்மாவில் எப்படி ப்ராமாண்யம் உள்ளதாகுமென்று கேட்பாயாகில் சொல்லுகிறேன் கேள், ஆத்மா, ஸ்வதஸ்ஸித்தமும், ஸ்வயமாகவே ப்ரகாசிப்பதும் ஆனாலும், ஆத்மதர்மங்களேயன்றி, கர்த்ருத்வம், போக்த்ருத்வம் முதலானவைகள் ஆத்மாவில் இருக்கிறதுபோலக் காணப்படுகின்றன. அவைகள் ஆத்மதர்மங்கள் அல்லவென்று வேதங்களால் அறியப்படுகின்றன. ஆகையால் வேதம் கேவலாத்மாவைத் தெரிவிக்கமாட்டாமலே ஆத்மாவில் ஆரோபிக்கப்பட்ட கர்த்ருத்வாதிகத்தை நீக்குகின்றமையால் ப்ரமாணமாயிற்றென்று அறியவேண்டும். ஆனால், உலகத்தில் சப்தாதிகளால் கடஜ்ஞாநம் உண்டானதுபோல, வேதத்தால் ஆத்மஜ்ஞாநம் உண்டாயிற்றென்று ஏன் சொல்லக்கூடாதென்று கேட்பாயாகில், சொல்லுகிறேன், கேட்பாயாக, ஆத்மா, ஜடத்வாஜடத்வங்களைக் காட்டிலும் வேறானதாகையாலும், ஸ்வதஸ்ஸித்தமானதாகையாலும், அறிவனைக்கும் அறியப்படாத கடாதிகள், சப்தாதிகளால் அறியப்பட்டாற்போலே, வேதங்களால் அறியப்படவில்லையென்று அறியவேண்டும். மேலும்,

𑌶𑍍𑌰𑍁॥ “𑌯𑌤𑍋 𑌵𑌾𑌚𑍋 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌅𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌮𑌨𑌸𑌾 𑌸𑌹”

."யத்ஸாக்ஷாதபரோக்ஷாத்ப்ரஹ்மய ஆத்மாஸர்வாந்தர:"

(எந்த ப்ரஹ்மம் அந்யாபேக்ஷையில்லாமலே ஜ்ஞாநாத்மகமா யிருக்கிறதோ, எந்த ப்ரஹ்மம் சகலவஸ்து சாரமாகையால், எல்லாவற்றுள்ளும் இருக்குமோ) என்கிற சுருதிப்ரமாணத்தால், ஆத்மா ப்ரமாணாபேக்ஷையில்லாமலே ப்ரகாசியாநின்றதென்று அறிய வேண்டும். இப்படி விசாரிக்கும்போது, ஆத்மா நித்யனும், நிர்விகாரனும் ஆகையால், நீ விசாரத்தையடைந்து, ஸ்வதர்மமான யுத்தத்தை விட்டுவிடாதேயென்று ஸ்ரீக்ருஷ்ணபகவான் அருளிச்செய்தாரென்று அறியவேண்டும்.

ஆனால், இவ்விதமாய், ஆத்மா, நித்யத்வம் முதலானவையுள்ளதென்றுசொல்லி, பிறகு யுத்தம்செய்வாயாகவென்று சொல்லுதலால், ஜ்ஞாநகர்மங்கள் இரண்டும் மோக்ஷஸாதநமென்று சொல்லக்கூடாது. ஏனென்றால், யுத்தம் செய்வாயாகவென்று சொல்லுதலால், கர்மம் மோக்ஷஸாதநமென்கிற அபிப்பிராயம் ஸ்ரீக்ருஷ்ணபகவானுக்கு இல்லாமற்போதலாலென்று அறியவேண்டும். ஆனால், யுத்தம் செய்வாயாக என்று சொன்னதற்கு தாத்பர்யம் என்னவென்று கேட்பாயாகில், விவரிக்கிறேன், கேட்பாயாக, முன்னே யுத்தத்தைச்செய்வதற்குத் தானாகவே ப்ரவர்த்தித்த அர்ஜுநன் சோகமோஹாதிகள் உள்ளவனாய்ச் சும்மா இருந்தானாதலால், அப்படிப்பட்ட சோகமோஹாதிகளை யடையாமல் யுத்தத்தைச்செய்வாயாகவென்று அநுவாதம் (செய்துகொண்டிருக்கிற காரியத்தைச் செய்) என்று சொன்னாரன்றி, யுத்தத்தைச்செய்தேதீரவேண்டுமென்று சொல்லவில்லையென்று அறியவேண்டும். மேலும், இப்படி சொல்லுதலால், ஆத்மா நித்யன் ஆதலால் நசிப்பானென்று வ்யஸநத்தை யடையக்கூடாதென்று அறியவேண்டும்.

---

ரஹஸ்யார்த்தம்.

---

"అశోచ్యానన్వశోచస్త్వం"
"அஶோச்யாநந்வஶோசஸ்த்வம்"
என்கிற இடத்தில்,

"త్వం"

"த்வம்"

பதத்தால் சொல்லப்படுகிற தேஹம் முதலானவை, ஜந்மம் முதலாவவை உண்டாவன ஆதலால் அநித்யங்கள் என்றும், ஆகை யாலேயே அவற்றைக்குறித்து வ்யஸனத்தை யடையக்கூடா தென்றும், த்வம் பதத்துக்கு லக்ஷ்யார்த்தமான ஆத்மா, பிறப்புமு தலானவை இல்லாததாகையால் நித்யம் என்றும், ஆகையாலே அதைக்குறித்து வ்யஸநததை படையவேண்டியதில்லையென்றும், சொன்னார். பிறகு, ஆத்மா நித்யமென்று தெரியாமற்போவதற் கும், தேஹாதிகள் அநித்யங்கள் என்று தெரிந்திருந்தும் வ்யஸநத் தையடைவதற்கும் தகுந்த காரணங்களைச் சொன்னார். அப்படி சொல்லுதலால், சோகமோஹங்களைவிட்டு விட்டிருக்கிற அர்ஜு நனைப்பார்தது, ஸ்ரீக்ருஷ்ணபகவான் முதலில், எந்தக்காரியத்தைச் செய்வதற்கு ப்ரவர்த்தித்தாரோ, அந்தக்காரியத்தையே செய்யக் கடவைபென்று இந்த சுலோகத்தால் சொல்லுகிறார் என்று அறியவேண்டும். மேலும்,

"శ్రు॥ అశబ్దమస్పర్శమ్"

"அஶப்தமஸ்பர்ஶம்"

(சப்தராஹிதனும், ஸ்பர்ஶராஹிதனும்) என்கிற சுருதிப்ரமா ணத்தால் ஆத்மா, ப்ரத்யக்ஷ ப்ரமாணத்தால் அறியக்கூடாதவ வனென்றும்,

"శ్రు॥ నైవచతస్యలింగమ్"

"நைவசதஸ்யலிங்கம்"

(அந்த ஆத்மாவுக்கு லிங்கம், (சின்னமில்லை) என்கிற சுருதிப் பிரமாணத்தால், அனுமாந ப்ரமாணத்தாலும் ஊகிக்கவொண்ணாத வனென்றும்,

"హేతుదృష్టాంతవర్జితమ్"

"ஹேதுத்ருஷ்டாந்தவர்ஜிதம்"

(ஹேது, ஸாத்ருஶ்யங்கள் இல்லாதவன்) என்கிறசுருதியால், உபமாந ப்ரமாணத்தால் தெரிந்துகொள்ளக் கூடாதவன் என்றும்,

"శ్రు॥ యత్తదద్రేశ్యమగ్రాహ్యమగోత్రమ్"

"யத்ததத்ரேஶ்யமக்ராஹ்யமகோத்ரம்"

(பார்க்கவொண்ணாதவன், க்ரஹிக்கவொண்ணாதவன், குலமில்லாதவன்) என்கிற சுருதி ப்ரமாணத்தால், நாமம், ரூபம், ஜாதி முதலானவைகள் இல்லாதவனென்றும், ஆகையாலேயே சப்தப்ரமாணத்தாலும் தெரிந்துகொள்ளக்கூடாதவனென்றும், ஒன்றுபடியாமற் போவதனால் வேறொன்று இருக்கிறது என்று சொல்வது போல், ஆத்மாவின் விஷயமாய் அப்படிப்பட்டதுயாதும் இல்லாமற்போதலால், அர்த்தா பத்தி ப்ரமாணத்தால் தெரிந்துகொள்ளக்கூடாதவனென்றும், ஸத்பதார்த்தமாகையால், அனுபலப்திப்ரமாணத்தால் தெரிந்துகொள்ளக் கூடாதவனென்றும், வாக்கினால் தெரிந்துகொள்ள வொண்ணாதவனாதலால், ஐதிஹ்ய ப்ரமாணத்தால் தெரியவொண்ணாதவனென்றும், அறியவேண்டும். மேலும்,

"విజ్ఞాతారమరే కేనవిజానీయాత్"

"விஜ்ஞாதாரமரேகேநவிஜாநீயாத்"

(தெரிந்துகொள்பவற்றை எதனால் அறிந்துகொள்வான்) என்கிற சுருதிப்ரமாணத்தால், சகல ப்ரமாணங்களையும் ப்ரமேயங்களையும் (விஷயங்களையும்) தெரிந்துகொள்ளுகிற ஆத்மாவைத் தெரிந்துகொள்ளுதல் எந்த ப்ரமாணத்தாலும் சாத்யமாகாதென்று அறியவேண்டும். மேலும்,

"శ్రు॥ యో వై భూమా తదమృతమ్"

"யோவைபூமாததம்ருதம்"

(எதுபெரிதோ அது நித்யம்)

"శ్రు॥ యదల్పంతన్మర్త్యం"

"யதல்பம்தந்மர்த்யம்"

(எது ஸ்வல்பமானதோ அதுநசிப்பது) என்கிற சுருதிகளால், பரிபூர்ணனான ஆத்மா ஒருவனே நித்யனென்றும், தார்க்கிகர்களால் சொல்லப்பட்ட பரமாணுக்கள் நித்யங்கள் என்னுஞ்சொல் தகுதியானதல்லவென்றும் அறியவேண்டும். மேலும், அதனால் நீ யுத்தத்தைச் செய்வாயாகவென்று சொல்லுதலாலும், சுருதி யுக்தி

அநுபவங்களாலும், ஆத்மா நித்யன் என்றும், தேஹாதிகள் அநித்யங்கள் என்றும், அறியப்பட்டுக்கொண்டிருத்தலால், ஐயோ; நம்மவர்களாகிய பீஷ்மாதிகள் மரணத்தையடைகிறார்களே யென்று வ்யஸநத்தையும் மோஹத்தையும் அடையாமல் யுத்தம்பண்ணுவாயாக வென்று ஸ்ரீக்ருஷ்ணபகவான் சொன்னாரென்று அறியவேண்டும். மேலும்,

‘‘ నహికర్మణికర్మాన్తరారంభః ’’
‘‘நஹிகர்மணிகர்மாந்தராரம்ப:’’

(ஒருகர்மத்தைச்செய்துகொண்டிருக்கையில் வேறொருகர்மத்தைச் செய்யக்கூடாது.) என்று கர்மகாண்டத்திலேயே சொல்லப்பட்டிருத்தலால், கர்மகாண்டத்துக்கு விரோதியான ஜ்ஞாநகாண்டத்தில் கர்மத்தைச்செய்யென்பது மிகவும் விரோதமாகையால், யுத்தம்பண்ணுவாயாக வென்று சொன்ன இடத்தில் ஸ்ரீக்ருஷ்ணபகவான், கர்மத்தைபோதிக்கவில்லையென்றும், அவிவேகத்தால் சோகமோஹங்களைப்போக்கி, போகாநின்றவைகளைப் போவென்று சொன்னதாக, யுத்தத்தைச் செய்துகொண்டிருக்கிற அர்ஜுநனை யுத்தம்செய்யென்று சொன்னாரென்றும், அறியவேண்டும்: இப்படியல்லவானால்,

‘‘ శ్రు॥ ఏతం వైతమాత్మానంవిదిత్వాబ్రాహ్మణావ్యుత్థా
యాథభిక్షాచర్యంచరన్తి ’’
‘‘எதம்வைதமாத்மாநம்விதித்வாப்ராஹ்மணாவ்யுத்தாயாதபி
க்ஷாசர்யஞ்சரந்தி’’

(இவனை, அந்த ஆத்மாவாக அறிந்துகொண்டு, ப்ராஹ்மணர்கள் சம்சாரத்திலிருந்து விலகி, பிக்ஷாசர்யத்தைச் செய்துகொண்டிருக்கிறார்கள்.) என்கிற சுருதி ப்ரமாணத்தால், ப்ராஹ்மவேத்தாக்களான ப்ராஹ்மணர்களுக்கு சரீரத்தைப் பாதுகாத்தற்பொருட்டு பிக்ஷையேற்பது சொல்லப்பட்டிருக்கின்றது ஆகையால், ப்ராஹ்மவேத்தாவான அர்ஜுநனுக்கு ப்ராணத்தை ரக்ஷித்துக்கொள்ளுதல் முக்கியமானது என்கிற சங்கல்பத்தோடு, ப்ராஹ்மவேத்தாவான அர்ஜுநன் க்ஷத்ரியனாகையால் சந்யாசத்துக்குத் தகுந்தவனல்லவென்று யோசித்து, யுத்தத்தைச்செய்து, சத்ருக்களால் ஆக்ரமிக்

கப்பட்ட ராஜ்யத்தைச் சம்பாதித்து, அதனால் சரீரப்ராணங்களைக் காப்பாற்றிக்கொள்வாயாக வென்று ஸ்ரீக்ருஷ்ணபகவான் சொன்னாரென்று அறியவேண்டும். மேலும், பகவான் இப்படிப்பட்ட எண்ணமுடையவனாகையாலேயே, அ-ஙு-சுலோ-அ.

"శరీరయాత్రాపిచతేనప్రసిద్ధ్యేదకర్మణః"

"ஶரீரயாத்ராபிசதேநப்ரஸித்யேதகர்மணঃ"

(கர்மம்செய்யாதவனுக்கு ஜீவநமும் சித்திக்காமற்போகும்) என்று சொன்னாரென்று அறியவேண்டும். மேலும்,

"అవినాశితు"

"அவிநாஶிது"

என்கிற எ-வது சுலோகத்தின் முற்பாதியால், தத் என்கிற பதத்தின் அர்த்தம் சொல்லப்பட்டதென்றும், பிற்பாதியால், நிரீஶ்வரவாத பரிணாமவாதங்கள் (ஈசுவரன் இல்லை, ஈசுவரனே லோகரூபமாகப் பரிணமித்தான் என்கிற மதங்கள்) கண்டிக்கப்பட்டனவென்றும, ஆத்மாவுக்கு உண்மையாய்ப்பிறப்பு இறப்புக்கள் இல்லையென்றும், அந்தப்பிறப்பு இறப்புக்கள் ஆத்மாவுக்குக் கற்பிதங்கள் என்றும் இந்தசுலோகத்தால் சொல்லப்பட்டதென்று சிலர்சொல்லுவார்களென்று அறியவேண்டும்.

శ్లో॥ యఏనంవేత్తిహన్తారం।యశ్చైనంమన్యతేహతమ్।
ఉభౌతౌనవిజానీతో।నాయంహంతినహన్యతే॥ ౧౯॥

"யஏநம்வேத்திஹந்தாரம்| யஶ்சைநம்மந்யதேஹதம்|
உபௌதௌநவிஜாநீதோ| நாயம்ஹந்திநஹந்யதே||"

—

பதவுரை.

—

ய-எவன், ஏநம் - இந்த ஆத்மாவை, ஹந்தாரம் - கொல்லுகின்றவனாக, வேத்தி - தெரிந்துகொள்ளுகிறானோ, யஶ்ச - எவன், ஏநம் - இந்த ஆத்மாவை, ஹதம்-கொல்லப்பட்டவனாக, மந்யதே - நினைக்கிறானோ, தௌ - அப்படிப்பட்ட, உபௌ - இருவரும், நவி

ஜாநீத:-தெரிந்துகொண்டவர்கள் அல்லர், அயம் - இந்த ஆத்மா, நஹந்தி - கொல்லமாட்டான், நஹந்யதே - கொல்லப்படமாட்டான்.

---

தாத்பர்யம்.

---

ஓ அர்ஜுநா ; இந்த ஆத்மா சொல்லுவானென்று நினைப்பவனும், இந்த ஆத்மா கொல்லப்படுவானென்று நினைப்பவனும் தெரிந்தவர்கள் அல்ல, (அதாவது அவிவேகிகள் என்பது) இந்த ஆத்மா, கொல்லுவதுமல்ல, கொல்லப்படுவதுமல்ல, என்று தாத்பர்யம்.

---

சங்கரபாஷ்யம்.

---

ஐயா ; க்ருஷ்ணு ; இப்பொழுது உன்னுல் சொல்லப்பட்ட விஷயமெல்லாம், நீ ஊகித்துச் சொன்னதாகத் தோன்றுகின்றது, ஆகையால் இந்தக்கீதாசாஸ்திரம் சம்சார காரணங்களான சோகத்தையும், மோஹத்தையும் போக்கமாட்டாதென்று அர்ஜுநன சொல்லுவானே என்னவோவென்று நினைத்து, ஸ்ரீக்ருஷ்ணபகவான் ஊகித்துச் சொல்லவில்லையென்றும், கடோபநிஷத்தில் சொல்லப்பட்ட அர்த்தத்தையே சொன்னேனென்றும், தெரிவிப்பதற்குக் கடோபநிஷத்திலுள்ள இரண்டுமந்திரங்களின் அர்த்தத்தை இரண்டு சுலோகங்களால் சொல்லுகிறுரென்று அறியவேண்டும். மேலும், அர்ஜுநா, பீஷ்மாதிகள் என்னுல் கொல்லப்படுகிறுர்கள் என்றும், நான் அவர்களைக் கொல்லுகிறவன் என்றும், நீ நினைக்கிருய், இந்தநினைப்புப்பித்தனதுநினைப்பாகும், (அதாவது ப்ராந்தியால்நினைக்கிறநினைப்பு) என்று, ஸ்ரீக்ருஷ்ணபகவான் இந்தசுலோகத்தால் சொல்லுகிருரென்று அறியவேண்டும். ஆனுல், நான் நினைப்பது எப்படி ப்ராந்தியாகும், ப்ரத்யக்ஷமாய் நான் கொல்லுகிறேன். இவர்கள் இறந்துபோகிருர்கள். ஆகையால், என் எண்ணம் ப்ராந்தனெண்ணம் அல்ல, என்று நினைக்காதே, ஏனென்றுல், கொல்லுவதும் கொல்லப்படுவதும் ப்ரத்யக்ஷமாய்க் காணப்பட்டுக் கொண்டிருந்தாலும் உண்மையாய் விசாரிக்குமிடத்தில், இந்த ப்ரத்யக்ஷம்

ப்ரத்யக்ஷம் அல்லாமற்போதலாலென்று அறிவாயாக. மேலும், ஆத்மா, தேஹத்தைக்காட்டிலும் வேறானவனும், செயலற்றவனும் ஆகையால், தேஹம் அடித்தலாலும் அடிக்கப்படுதலாலும் நான் என்கிற நினைப்பில் விஷயமான ஆத்மா, அடிக்குமென்றும், அடிக்கப்படுமென்றும், நினைப்பது மிகவும் அயுக்தமென்று அறியவேண்டும். மேலும், இப்படி சொல்லுதலால், ஆத்மாகர்த்தாவும் (செய்பவனும்) கர்மமும் (க்ரியாபலத்தை யடைபவனும்) ஆகமாட்டானென்று அறியவேண்டும்.

---

ரஹஸ்யார்த்தம்.

---

அர்ஜுநா ; அ-க, சுலோ-நுசு.

"పాపమేవాశ్రయేదస్మాత్"

"பாபமேவாஶ்ரயேதஸ்மாத்"

அ-கூ-சு-சஉ.

"సంకరోనరకాయైవకులఘ్నానామ్"

"ஸங்கரோநரகாயைவகுலக்நாநாம்"

"కథంభీష్మమహంసంఖ్యే"

"கதம்பீஷ்மமஹம்ஸங்க்யே"

என்கிற வாக்யங்களை, நீ, பாவத்தையடைவேனென்றும், பாவப்பயனை அநுபவிப்பேனென்றும், பாவத்தைச்செய்தவன் ஆவேனென்றும், நினைத்துச்சொன்னாய், அப்படி சொல்லுதல் ஆத்மஸ்வரூபம் இப்படிப்பட்டதென்று தெரியாதவனாகையாலேயே யன்றி, தெரிந்து சொன்னவனல்ல, ஆத்மஸ்வரூபம் இப்படிப்பட்டதென்று தெரிந்த பிறகு எந்தவிகற்பமும் (எந்தயூகையும்) உண்டாகாது. ஆகையால், உனக்கு ஆத்மஸ்வரூபம் இப்படிப்பட்டதென்று தெரிவிக்கிறேனென்று ஸ்ரீக்ருஷ்ணபகவான் இந்த சுலோகத்தைச் சொன்னாரென்று அறியவேண்டும். மேலும்,

"న తతః కాదిగించన"

"நததப்காதிகிஞ்சந"

"నద్రదశ్యా త్రికేశ్యస"

"ந.தகப்நாதிகப்சக"

"నిష్కలంనిష్క్రియంశాంతమ్"

"நிஷ்கலம்நிஷ்க்ரியம்சாந்தம்"

"సాక్షీచేతాకేవలోనిర్గుణశ్చ"

"ஸாக்ஷீசேதா கேவலோநிர்குணஸ்ச"

(க - அந்த ஆத்மா எதையும் அடையமாட்டாது, உ - அந்த ஆத்மாவை எவனும் அபஹரிக்கமாட்டான், ௩ - ஆத்மா அவயவங்கள் இல்லாதது, க்ரியாஹீநயானது, (ராகாதிபரிணாமமில்லாதது) ௪ - ஆத்மா சகலப்ராணி கர்மங்களேயும் பார்க்கும், சித்ஸ்வரூபமென்று சொல்லப்படும், த்ருஸ்யமில்லாதது, குணங்கள் இல்லாதது,) என்கிற ச்ருதிகளால், மரம் அசைந்தாலும், அதற்குள்ளேயிருக்கிற ஆகாசம் அவயவங்கள் இல்லாததாகையால் அசையாதது போல, தேஹேந்த்ரியாதிகள் சலித்தாலும் அவைகளுக்குள்ளேயிருக்கிற ஆத்மா அசையாது, என்கிற யுக்தியாலும் விசாரித்து, கர்த்தருத்வம், போக்த்ருத்வம்; முதலானவை ஆத்மாவுக்கில்லையென்று தெரிந்துகொள்ளாதவனும், ஆத்மா கொல்லுமென்றும் கொல்லப்படுமென்றும் நினைப்பவனும் மூடனென்றும், அப்படிப்பட்டவன் வேதாந்தங்களை மிகவும் சிரத்தையோடும் பக்தியோடும் கஷ்டப்பட்டுக் கேட்டாலும்-அவனுடைய கஷ்டம் இறந்தபிள்ளையைப் பெற்றவளுடைய ப்ரஸவவேதனைபோல நிஷ்பலமாகுமென்று இந்த சுலோகத்தால் தெரிவித்தாரென்று அறியவேண்டும். மேலும், ஐபா, க்ருஷ்ண; அ-உ, சுலோ-௧௦.

"అశోచ్యానన్వశోచస్త్వం"

"அசோச்யாநந்வசோசஸ்த்வம்"

என்கிற சுலோகம் முதலாயுள்ள சுலோகங்களால் நீ சொன்ன விதமாக, பந்துக்களான பீஷ்மாதிகள் மரணமடைவார்கள் என்கிற துக்கம் இல்லாமற்போனாலும், பீஷ்மாதிகளைக் கொல்வதனாலுண்டாகிற பாவம் மாத்திரம் போகமாட்டாது, மேலும், சத்ருவான ப்ராஹ்மணனைக் கொல்லுதனால் துக்கம் உண்டாகாமற்போனாலும்

பாவம் உண்டாகின்றது. ஆகையால் துக்கமில்லாமற்போன மாத்திரத்தால் பாவமுண்டாகாதென்று சொல்லுதல் சரியல்ல, ஆகையால் பந்துவதைசெய்த எனக்கும், செய்யச்சொன்ன வுனக்கும், பாவமுண்டாகுமென்று தோன்றுகின்றது. ஆகையால், நீ இப்படி சொல்லுதல் தகுதியல்லவென்று அர்ஜுநன் சொல்வானோ என்னவோவென்று நினைத்து, ஸ்ரீக்ருஷ்ணபகவான் இந்த சுலோகத்தைச் சொல்லுகிறாரென்று அறியவேண்டும். மேலும்,

“ య ఏనం వేత్తి హన్తారం”

“யஏநம்வேத்திஹந்தாரம்”

(எவன் இந்த ஆத்மாவைக்கொல்பவனாக நினைக்கிறானோ) என்பதனால் ஆத்மாவுக்குக் கர்த்ருத்வம் உண்டென்று சொன்ன தார்க்கிகர்களும்,

“ యశ్చైనం మన్యతే హతం”

“யச்சைநம்மந்யதேஹதம்”

(இந்த ஆத்மா கொல்லப்படுவானென்று எவன் நினைக்கிறானோ) என்பதனால், ஆத்மா நசிக்குமென்று சொன்ன சார்வாகரும், அறிவில்லாதவர்களென்று அறிவித்தாரென்று அறியவேண்டும். மேலும், கொல்லுவேனென்று எண்ணுகிற சூரனும், கொல்லப்படுவேனென்று எண்ணுகிற பயமுள்ளவனும் அறிவில்லாதவர்களென்று இந்த சுலோகத்திலுள்ள முதல் மூன்றடிகளாலும் அறிவித்தாரென்று அறியவேண்டும்.

శ్లో॥ నజాయతేన మ్రియతేవాకదాచి।
న్నాయంభూత్వాభవితావానభూయః॥
అజోనిత్యశ్శాశ్వతోయంపురాణో।
నహన్యతేహన్యమానేశరీరే॥

“நஜாயதேநம்ரியதேவாகதாசி|
நாயம்பூத்வாபவிதாவாநபூய:||
அஜோநித்யஶ்ஶாஶ்வதோயம்புராணோ
நஹந்யதேஹந்யமாநேஶரீரே.”

இ-ள். அயம் - இந்த ஆத்மா, கதாசித் - ஒருகாலத்திலும், நஜாயதே - பிறப்பவனல்லன்; கதாசித்-ஒரு காலத்திலும், நம்ரிய தேவா - மரணமடைபவனுமல்லன், நபூத்வா - (முன்னமே) இல்லாமல், பூய:- மறுபடியும் (புதிதாய்) பவிதாந - உண்டாகிறவனல்லன், பூத்வா - (முன்னமே) இருந்து, பூய: மறுபடியும், நபவிதாந-இல்லாமற்போகிறவனுமல்லன். (தஸ்மாத்-ஆகையால்) அயம்-இந்த ஆத்மா, அஜ:- பிறப்பில்லாதவன், நித்ய:- நாசமில்லாதவன், ஶாஶ்வத:- எல்லாக் காலங்களிலும் ஒருவிதமாகவேயிருப்பவன், புராண:-அநாதியானவன், ஶரீரே - (அழிவதான) சரீரம், ஹந்யமாநே ஸத்யபி - அநேகவிதமாக மாறுபடுவதாயிருந்தாலும், அயம் - இந்த ஆத்மா, நஹந்யதே - மாறுபடுத்தப்படான்,

---

தாத்பர்யம்.

---

ஓ அர்ஜுநா! இந்த ஆத்மா எப்பொழுதும் பிறப்பவனும் இறப்பவனுமல்லன், மேலும் சில காலமிருந்து பின்பு இல்லாமற் போகிறவனும் சிலலகாலமில்லாமலிருந்து பின்பு இருப்பவனும் அல்லன், ஆதலால் பிறப்பில்லாதவனென்றும் நாசமில்லாதவனென்றும் எந்தக் காலத்திலும் ஒருவிதமாகவே இருப்பவனென்றும் அநாதியானவனென்றும் தெரிந்துகொளவாயாக. ஆகையாலேயே இந்த ஆத்மா, சரீரம் மாறிப்போனாலும் மாறிப்போகிறவனல்லனென்று தாத்பரியம்.

---

சங்கராபாஷ்யம்.

---

ஐயா! கிருஷ்ணா! ஆத்மாகொல்லுகிறவனல்லனென்றும், கொல்லப்படுகிறவன் அல்லனென்றும் சொன்னாயல்லவா, என்ன காரணத்தால் அப்படி சொன்னாயென்று அர்ஜுநன் கேட்பானோ என்னவோவென்று நினைத்து, கடோபநிஷத்திலுள்ள மந்திரத்தின் அர்த்தத்தை போதிப்பதாகிய இந்த மந்திரத்தால் ஆத்மா விகாரமில்லாதவனாதலால் கொல்லுகிறவனல்லனென்றும் கொல்லப்படுகிறவனல்லனென்றும் தெரிவிக்கிறானென்று அறியவேண்டும். அபபடியல்லவானால் ஆத்மா, விகாரமில்லாதவனாதல்லால் கொல்லுகிறவனை

ல்லவென்றும் கொல்லல்லப்படுகிறவனல்லவென்றும் சொன்னப
ல்லவா ஆத்மா எப்படி விகாரமில்லாதவன் ஆவானென்று அர்ஜுந
ன்கேட்பானே என்னவோவென்று நினைத்து. ஸ்ரீ கிருஷ்ணபகவான்
இந்தஶ்லோகத்தால்ஆத்மாவுக்குவிகாரமில்லாதிருப்பதற்குக் காரண
த்தைச்சொல்லுகிறாரென்று அறியவேண்டும். மேலும், இந்தஶ்லோ
கத்தின் முதற் பாதத்தால் ஆத்மாவுக்கு எந்த விகாரங்களும் இல்
லாதிருப்பதற்குத் தகுந்த காரணமான ஜநநமரணாபாவம் சொல்லப்
பட்டதென்று அறியவேண்டும். இரண்டாம்பாதத்தால் ஜநநமரண
ங்கள் இல்லையென்று சொன்னசொல்லை ஸித்தாந்தப்படுத்துகிறாரெ
ன்று அறியவேண்டும். மூன்றும் பாதத்தாலும் நான்காம் பாதத்
தாலும், ஜநநமரணங்கள், இரண்டேயன்றி வேறாகிய விகாரங்களும்
ஆத்மாவுக்கு இல்லையென்பதைத் தெரிவிக்கிறாரென்று அறியவே
ண்டும். ஆனால் விகாரங்கள் எத்தனை? அவையாவை? இந்த விஷய
த்தைச் சொல்லுவாயாகவென்று கேட்பாயானால் சொல்லுகிறேன்
கேள்.

“జాయతే, అస్తి, వర్ధతే, విపరిణమతే, అపక్షీయతే, నశ్యతి”

“ஜாயதே, அஸ்தி, வர்த்ததே, விபரிணமதே, அபக்ஷீயதே,
நஶ்யதி”

(பிறத்தல், இருத்தல், விர்த்தியடைதல், வேறு ரூபத்தை
யடைதல், குறைதல், நசித்தல்) என்கிற ஆறும் விகாரங்களென்று
அறியவேண்டும். இவைகளையே ஷட்பாவ விகாரங்களென்று சாங்
க்யர் முதலானவர்கள் சொன்னார்களென்றும் அறியவேண்டும்.
மேலும், ஆத்மா, ஒருகாலத்திலும் பிறவாதவனும் இறவாதவனும்
ஆகையால் மேலே சொல்லப்பட்ட ஆறுவிகாரங்களுள் முதல்விகா
ரத்தையும் இறுதிவிகாரத்தையும் உடையவனல்லவென்று சொல்
லப்பட்டதென்று அறியவேண்டும். மேலும், எவன் பிறந்தபின்பு,
பிறவாததற்கு முன்புபோல இல்லாமற்போகிறானோ அவன் மரண
மடைகிறானென்று உலகத்தில் சொல்லப்படுவன். அவ்விதமாக
ஆத்மா, சிலகாலமிருந்து பின்பு இல்லாதவன் ஆகமாட்டானாதலால்
மரணமடையமாட்டானென்று தெரிந்துகொள்ளவேண்டும். ஆனால்
ஒருவேளை ஆத்மாவுக்கு மரணமில்லாமற் போனாலும்போகட்டும்.
ஜந்மமிருக்கிறதென்று சொல்லக்கூடாதா என்று கேட்கலாகாது.

களும் இல்லையென்றும் சொல்லப்பட்டதாக அறியவேண்டும். மேலும், இவ்விதமாய் ஆத்மாவுக்கு ஷட்பாவ விகாரங்களுள் ஒன்றுயினும் இல்லையென்று சொல்லுதலால் ஆத்மா கொல்லுகிறவனென்றும் கொல்லப்படுகிறவனென்றும் நினைத்தவர்கள் மூடர்களென்று தெரிந்துகொள்ளவேண்டும்.

---

ரஹஸ்யார்த்தம்.

---

ஆத்ம தத்துவம் எப்படிப்பட்டதென்று அர்ஜுநன் கேட்பானே என்னவோவென்று நினைத்து, ஷட்பாவ விகாரரஹிதமானதென்று ஸ்ரீ கிருஷ்ணபகவான் இந்த ஶ்லோகத்தால் தெரிவிக்கிறுரென்று அறியவேண்டும். மேலும் இந்த ஶ்லோகத்தின் மூன்று பாதங்களாலும் ஆத்மாவுக்கு ஷட்பாவ விகாரங்கள் இல்லையென்று சொல்லப்பட்டதென்று அறியவேண்டும். ஆனுல் மூன்று பாதங்களாலேயே ஆத்மஸ்வரூபம் தெரிவிக்கப்பட்டதல்லவா, நான்காம் பாதத்தை ஆரம்பிப்பதற்குக் காரணம் என்னவென்றுல், இதுவரைக்கும் அர்ஜுநன் சரீரம் நசிப்பதனுல் ஆத்மாவும் நசிக்குமென்றெண்ணி துக்கிக்கிறுனுகையால் அந்த துக்கத்தை நீக்கும்பொருட்டு நான்காம் பாதத்தையும் ஆரம்பித்தாரென்று அறியவேண்டும். ஆனுல் நான்காம் பாதத்துக்கு தாற்பர்யமென்னவென்று கேட்பாயானுல் சொல்லுகிறேன் கேள். இந்த சரீரம் வாள் முதலியவற்றுல் வெட்டப்பட்டாலும் குடத்தை உடைக்கும்போது குடத்திலுள்ள ஆகாசம் வெட்டப்படாததுபோல சரீரத்திலுள்ள ஆத்மா வெட்டப்படமாட்டானென்று தாற்பர்யம். ஆனுல், பிறக்கமாட்டான் என்று சொல்லுதலால் முதல் விகாரமும், மரணமடையமாட்டான் என்று சொல்லுதலால்இறுதிவிகாரமும், சாஶ்வதனென்று சொல்லுதலால் ஐந்தாம் விகாரமும், புராணன் என்று சொல்லுதலால் மூன்றும் விகாரமும்,

"అయంభూత్వాభవితావానభూయః"

"அயம்பூத்வாபவிதாவாநபூய:"

(இந்த ஆத்மாபிறந்து மறுபடியும் இல்லாதவனல்லன்.) என்று சொல்லுதலால் இரண்டாம் விகாரமும் இல்லையென்று சொல்லப்

பட்டதல்லவா? நான்காம் விகாரம் எதனால் நிஷேதிக்கப்பட்டதெ ன்று சந்தேகிக்கக்கூடாது. ஏனென்றால் மரணமடையமாட்டா னென்று சொல்லுதலாலேயே நான்காம் விகாரமும் சொல்லப் பட்டதாயிற்று. ஆகையால் என்றறியவேண்டும்.

శ్లో॥ వేదావినాశినంనిత్యంయఏనమజమవ్యయం।

కథంసపురుషఃపార్థకంఘాతయతిహన్తికం॥

"வேதாவிநாஶிநம்நித்யம்யஏநமஜமவ்யயம்

கதம்ஸபுருஷ:பார்த்தகம்காதயதிஹந்திகம்"

இ-ள். ஹேபார்த்த - ஓ அர்ஜுனா, ய:-எவன், ஏநம்-இந்த ஆத்மாவை, அதாவது,

"నజాయతే"

"நஜாயதே"

என்கிற மந்திரத்தால் சொல்லப்பட்ட லக்ஷணங்களுள்ள ஆத் மாவை, அவிநாஶிநம் - இறுதியிலுள்ள பாவவிகாரம் இல்லாதவ னாகவும் - அதாவது நாசமில்லாதவனாகவும், நித்யம் - பரிணாமமில் லாதவனாகவும்-அதாவது மாறுதல்இல்லாதவனாகவும், அஜம-பிறவி யில்லாதவனாகவும், அவ்யயம் - குறைதலில்லாதவனாகவும், வேத- தெரிந்துகொள்ளுகிறானோ, ஸ:புருஷ:-அந்தப்புருஷன், கதம் - எந் தப்பிரகாரமாய், கம் - எவனை, காதயதி - கொல்லுவிக்கிறான், (கதம் - எந்தப்பிரகாரமாய்) கம் - எவனை, ஹந்தி-கொல்லுகிறான்.

---

தாத்பர்யம்.

---

ஓ அர்ஜுனா! எல்லாவற்றிலும் ஸத்தாரூபமாயிருக்கிற இந்த ஆத்மா, (நசித்தல், வேறு ரூபமாதல், பிறத்தல், குறைதல், முன்பு பருத்திருந்து பின்பு மெலிதல்) என்கிற விகாரங்கள் இல்லாதவனாய் எப்பொழுதும் ஒரேதன்மையாய் இருக்கிறவனென்று ஆத்மஸ்வ ரூபத்தை எவன் அறிவானோ அவனுக்கு ஆத்மாவைக்காட்டிலும் வேறுபதார்த்தம் ஒன்றுமில்லை. ஒருவன் ஒருவனைக்கொண்டு மற் றொருவனைக் கொல்லுவிக்கிறானென்றும், ஒருவன் மற்றொருவனைக் கொல்லுகிறானென்றும் சொல்லுதற்கு இடமில்லை. ஆகையால்

ஏனென்றால் சரீரம்போல முன்பு இல்லாமல் பின்பு உண்டானது பிறந்ததென்று சொல்லப்படும். ஆத்மா, அவ்விதமாய், முன்பு இல்லாததல்ல ஆகையால் பிறப்பு இல்லாதது ஆகையால் என்று அறியவேண்டும். இவ்விதமாய்ச் சொல்லுதலால் ஆத்மா அஜன் (பிறப்பில்லாதவனும்) நித்தியனும் (நாசமில்லாதவனும்) ஆனனென்று அறியவேண்டும். மேலும் இப்படி ஆத்மாவுக்கு ஜந்மமில்லையென்று சொல்லுதலால் பிறந்தபிறகு சம்பவிக்கிற இருத்தல் என்கிற ஷட்பாவவிகாரங்களுள் ஒன்றாகிய விகாரம் இல்லையென்று அறியவேண்டும். மேலும், ஆத்மாவுக்கு பிறப்பில்லையென்று சொல்லுதலால் ப்ராணங்கள் போகையால் உண்டாகிற மரணம் இல்லாதிருத்தலால் ஆத்மா சிறிது நசிக்குமென்றும் சிறிது இருக்குமென்றும் சொல்லக்கூடாதென்று அறியவேண்டும். மேலும் ஆத்மா நித்தியனென்று சொல்லுதலால் ஆத்மா முழுதும் நசித்தல் இல்லையென்றும் அறியவேண்டும். ஆனல் விசாரிக்குமிடத்தில் ஷட்பாவ விகாரங்களுள் முதலிலுள்ளதும் இறுதியிலுள்ளதும் ஆகிய ஜநநமரணங்கள் இல்லையென்று சொல்லுதலாலேயே மற்றவிகாரங்கள் இல்லையென்று தோன்றுதலால் மற்றவிகாரங்களும் இல்லையென்று நிஷேதித்தலால் என்ன லாபமுண்டென்று கேட்பாயானல் சொல்லுகிறேன் கேள். மற்றவிகாரங்கள் இல்லையென்று தோன்றுகிறதென்பதற்கு சந்தேகமில்லை. ஆனாலும் இப்படி சொல்லுதலால், ஷட்பாவ விகாரங்களைக்காட்டிலும் வேறாகிய யௌவநம்முதலான சகலவிகாரங்களும் இல்லையென்று அறிவித்தற்கு ஷட்பாவவிகாரங்களை நிஷேதிக்கிற சப்தங்கள் சொல்லப்பட்டன. ஆகையால், ஆத்மாவுக்கு ஷட்பாவவிகாரங்களேயன்றி இதரமான யௌவநம்முதலான விகாரங்களும் இல்லையென்று அறியவேண்டும். மேலும், நித்தியனென்றாலும், சாஸ்வதன் என்றாலும் அர்த்தம் ஒன்றேயல்லவா, ஒரு அர்த்தத்தையே தெரிவிக்கிற சொல்லை இரண்டுதரம் சொல்லுதலால் பௌநருக்த்யம் (சொன்னதையே சொல்லுதல்) என்கிற தோஷமுண்டாகாதா என்று கேட்கலாகாது. ஏனென்றால் சாஸ்வதன் என்பதனல் ஆத்மா அவயவங்களில்லாதவனும் குணங்களில்லாதவனும் ஆகிறானதலால் ஆத்மா தானாகவே குறைந்து முழுதும் நசிக்கிறவன் அல்லனென்றும், குணங்கள் நசிப்பது

னுல் குறைந்து நசிக்கிறவனும் அல்லனென்றும் தெரிவிக்கிறதினு லென்று அறியவேண்டும்.

மேலும் இப்படி சொல்லுதலால் ஆத்மாவுக்கு ஷட்பாவவிகா ரங்களுள் குறைதல் என்கிற விகாரம் இல்லையென்று சொல்லப்ப ட்டதென்றும், ஆதலாலேயேபௌநருக்த்யம் இல்லையென்றும் அறி ந்துகொள்ளவேண்டும், மேலும் உலகத்தில் எவன் அவயவங்களு ண்டாதலால் அதிகன் ஆகிருனோ அவன் விர்த்தியையடைகிரு னென்றும், புதியவன் ஆகிருனென்றும் சொல்லப்படுவன். அவ்வி தமாகச் சொல்லுதற்கு ஆத்மாவுக்கு அவயவங்களில்லையாதலால் முன்பும் புதியவனேயென்றும், ஆகையாலேயே முன்புஇருந்ததைக் காட்டிலும் விர்த்தியடைகிறவ னல்லனென்றும் தெரிவிப்பதற்கு, புராணன் (அநாதியானவன்) என்று சொல்லப்பட்டானென்று அறியவேண்டும். மேலும் இப்படி சொல்லுதலால் ஆத்மாவுக்கு ஷட்பாவ விகாரங்களுள் ஒன்ருகிய விர்த்தியடைதல் என்கிற விகா ரம் இல்லையென்று அறியவேண்டும். மேலும்,

"న హన్యతే హన్యమానే శరీరే"

"நஹந்யதேஹந்யமாநேஶரீரே"

என்கிற இடத்தில் சரீரம் கொல்லப்பட்டாலும் ஆத்மா கொ ல்லப்படாதென்று அர்த்தம் சொன்னபக்ஷத்தில், முதற்பாதத்தில் ஆத்மாமரணமடைகிறவனல்லனென்று சொன்ன சொல்லுக்கும் இதற்கும் பேதமில்லாமற்போகையால் பௌநருக்த்யதோஷம்உண் டாகுமாதலால், அந்த தோஷம் உண்டாகாமைக்காக சரீரம் மாறு பட்டாலும் ஆத்மா மாறுபடானென்று சொல்லப்பட்டதாக அறிய வேண்டும், இப்படி சொல்லுதலால் ஆத்மாவுக்கு ஷட்பாவ விகார ங்களுள் ஒன்ருகிய விபரிணாமம் (முன்பிருந்த அவஸ்தையைவிட்டு வேருெரு அவஸ்தையையடைதல், அதாவது மாறுதல்) என்கிற விகாரமில்லையென்று அறியவேண்டும். அதாவது ஆத்மா மாறுபா ட்டை யடையமாட்டானென்று தெரிந்துகொள்ளவேண்டும். மே லும் இந்த ஶ்லோகத்தால் உலகத்திலுள்ள வஸ்துக்களுக்கு இயற் கையாயுண்டாகிற ஷட்பாவ விகாரங்கள் ஆத்மாவுக்கு இல்லையென் றும், மேலும் அந்யங்களான யௌவநம் முதலாகிய சகல விகாரங்

ஓ அர்ஜுநா! நீ யுத்தத்தில் யாரைக்கொன்றாலும் கொல்லுவித்தாலும் நீ கொல்லுகிறவனும் கொல்லுவிக்கிறவனும் ஆகமாட்டாயாதலால் மனங்கூசாமல் யுத்தத்தைச்செய்யென்று அர்ஜுநனுக்கு ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொன்னாரென்று தாத்பர்யம்.

---

சங்கரபாஷ்யம்.

---

இதற்குமுன்பு. 2-வது அத்தியாயம் ௧௯-வது ஸ்லோகம்

"య ఏనం వేత్తి హంతారమ్"

"யஏநம்வேத்திஹந்தாரம்"

என்கிற மந்த்ர ரூபமான ஸ்லோகத்தால் ஆத்மா கொல்லுகிறவனும் கொல்லப்படுகிறவனுமல்லனென்று பிரதிக்ஞைபண்ணி 2-வது அத்தியாயம் 20-வது ஸ்லோகம்

"న జాయతే మ్రియతే వా కదాచిత్"

"நஜாயதேம்ரியதேவாகதாசித்"

என்கிற மந்திரரூபமான ஸ்லோகத்தால் ஆத்மாவிகாரமில்லாதவனாகிறதற்கு ஜநநமரணாதிகள் இல்லாதிருத்தல்என்கிற ஹேதுவைச் சொல்லி ஆத்மாகொல்லுகிறவனும் கொல்லப்படுகிறவனும் அல்லனென்றுதான் (பகவான்) பிரதிக்ஞைசெய்துசொன்ன அர்த்தத்தை இந்த ஸ்லோகத்தால் முடிக்கிறாரென்று அறியவேண்டும். மேலும் இந்த ஸ்லோகத்தால் ஆத்மதத்வத்தையறிந்தபுருஷன்எவனையும் கொல்லுவிக்கிறவனும் எவனையும் கொல்லுகிறவனும் அல்லனென்று ஆக்ஷேபித்தானென்று (நிஷேதித்தானென்று) அறியவேண்டும். மேலும்,

"కం ఘాతయతి హంతి కమ్"

"கம்காதயதிகம்ஹந்தி"

என்கிற இரண்டிடத்திலும் உள்ள கிம்சப்தத்துக்கு ஆக்ஷேபம் அர்த்தமென்றும் அந்த ஆக்ஷேபம் ஹநநக்ரியையோடு சம்பந்திக்கிறபோது ஹநநக்ரியாநிஷேதம் ஆயிற்றென்று தெரிந்துகொள்ளவேண்டும். மேலும் அந்தநிஷேதம் கொல்லுவியாதிருத்தல் (ப்ரேரணகர்த்ருகஹநநக்ரியாநிஷேதம்) கொல்லாதிருத்தல். (ப்ரே

ஜ்பகர்த்ருகஹநகக்ரியாநிஷேதம்) என்று சொல்லப்படுவதென்று அறியவேண்டும். மேலும் "கம்" என்பதற்கு எவனை என்கிற அர்த்தம் சொல்லப்பட்டாலும் சப்தசக்தி ஆசிந்த்யமாதலால் ஆக்ஷேபார்த்தமும் அநுபவஸித்தமாயிருக்கிறதென்று அறியவேண டும். ஸக: (அவன் எவன்) ஸதேவதத்த: (அவன்தேவதத்தன்) என்கிற இடத்திலும் கிம் சப்தத்தால். ஒரு புருஷவ்யக்தியும் ப்ரஸ்நார்த்தமும் சொல்லப்பட்டதல்லவா? அப்படியே ப்ராக்ருதத்திலும் ஆக்ஷேபார்த்தமும் புருஷவ்யக்தியும் கிம சப்தத்தால்சொல்லப்பட்டதென்றும், இப்படி சொல்லுதலால் அந்த வ்யக்தியும் இல்லவேயில்லையென்றும் அறியவேண்டும்.

மேலும், ப்ரஸ்நார்த்தமென்றே ஏன்சொல்லக்கூடாது, என்று கேட்பாயானல், சொல்லுகிறேன். ப்ரஸ்நம்பண்ணினபக்ஷத்தில், அதற்குத்தகுந்த உத்தரம் இருக்கவேண்டுமல்லவா, எப்படி யென்றால், அவன் எங்கே யிருக்கிறான் என்று ப்ரஸ்நம்பண்ணினபோது வீட்டில் இருக்கிறான் என்று ப்ரத்யுத்தரம் உண்டானதுபோல, ஆத்மதத்வத்தை யறிந்தவன், எவனைக்கொல்லுவிக்கிறான், எவனைக் கொல்லுகிறான் என்பவை ப்ரஸ்நங்களேயானபோது இன்னானைக் கொல்லுவிக்கிறான், இன்னானைக் கொல்லுகிறான் என்று ப்ரதிவசநங்கள் இருக்கவேண்டுமல்லவா, அப்படி எவ்விடத்திலும் ப்ரத்யுத்தரங்கள் காணப்படாமையால் இவ்விடத்தில் கிம்சப்தம்ப்ரஸ்நார்த்தகம் அல்லவென்றும், ஆக்ஷேபார்த்தகமேயென்றும் அறியவேண்டும். மேலும், உ-அ, 20 - ஶ்லோகம்

"నజాయతేమ్రియతే"

நஜாயதேம்ரியதே||

என்கிற பூர்வசுலோகத்திலுள்ள அர்த்தமே அதற்கு உத்தரசுலோகமாகிய இந்த,

"వేదావినాశినమ్"

வேதாவிநாஶிநம்||

என்கிற சுலோகத்திலும் இருக்கின்றது. எப்படி யென்றால் அவ்விடத்தில் நஜாயதே யென்றும், இவ்விடத்தில் அஜம் என்றும், அப்படியே ம்ரியதே என்பதற்கு அவிநாஶிநம் என்றிருக்கின்றது. அப்படி யிருக்கையால், புநருக்திதோஷம உண்டாகுமென்றுநினை

யாதே, ஏனென்றால், 'நஜாயதே' என்கிற சுலோகத்தின் அர்த்தத்தையே "வேதாவிநாஶிநம்" என்கிறசுலோகத்தால் அநுவதித்து தான், (பகவான்) ப்ரதிஜ்ஞை பண்ணிச்சொன்ன சர்வகர்ம நிஷேதத்வத முடியும்படி சொன்னாராகையால் என்று அறியவேண்டும். மேலும், இந்தசுலோகத்தின் பூர்வார்த்தத்தில் சொன்ன ப்ரகாரம் எவன் ஆத்மதத்வத்தை அறிந்தவனோ, அவன் பரிபக்வமான ஜ்ஞாநமுள்ளவன் ஆகிறானதலால், கூடஸ்தப்ரஹ்மம்தானேயென்றும், தன்னைக்காட்டிலும் அந்யமானது ஒன்றுமில்லையென்றும், என்கிற நிச்சயம் உள்ளவனாதலால், அப்படிபட்டவன், நான் கர்த்தா (செய்பவன்) நான் போக்தா (புஜிக்கிறவன்) என்பது முதலான அபிமானமுள்ளவனென்று சொன்னபக்ஷத்தில், சுருதிக்கும் அநுபவத்துக்கும் விரோதம் உண்டாகுமாதலாலும், சர்வகர்மசந்யாஸம்வித்வாம்ஸனுக்கு சம்பவிக்கின்றதென்று பகவான் சொன்னாரென்று அறியவேண்டும்.

கூடம் என்றால் காய்ச்சினபொன்னை அடிப்பதற்கு இடமாயிருப்பதும், மேலேநாற்சதுரமாய் ஏற்படுத்தப்பட்டதும் ஆகிய இருப்புத்திரள். காய்ச்சினபொன் அந்தக்கூடத்தில் வைத்தடித்து நீட்டப்பட்டுப் பலவகையான ஆபரணங்களாகிப் பலவிகாரங்களையடையும். எந்தக்கூடத்தில் அந்தப்பொன் அத்தனைவிகாரங்களை அடைகின்றதோ, அந்தக்கூடம்மாத்ரம்எந்தவிகாரத்தையும் அடையாமல் எப்பொழுதும் ஒரு தன்மையாகவே யிருக்கின்றது. அப்படியே, ஆத்மா, அதிஷ்டாநமான தன்னிடத்தில் ப்ரபஞ்சம் அநேகவிகாரங்களை அடைந்தாலும், தான்மாத்ரம எந்த விகாரத்தையும் அடையாதவனாயிருக்கிறான். இந்த உபமானத்தாலேயே கூடம் போலிருப்பவனாதலால் கூடஸ்தனென்று சொல்லப்பட்டானென்று அறியவேண்டும். மேலும்,

" అవినాశినమ్ "

அவிநாஶிநம்|

" అవ్యయం "

அவ்யயம் |

என்கிற இரண்டுபதங்களுக்கும், நசிக்காதவனாகவும், குறையாதவனாகவும், அர்த்தம் சொல்லுதலால் சமாநார்த்தகங்கள் ஆகம

ட்டா, ஆகையால், புநருக்திதோஷம் இல்லையென்று அறிய வேண்டும்.

மேலும், எவன் நித்யனோ, அவன் நாசமில்லாதவனென்று நினைத்து, அவிநாசிநம், நித்யம், என்கிற இரண்டு பதங்களாலும் மறுபடியும் புநருக்தி தோஷம் உண்டாகும் என்று நினைக்கக்கூடாது. ஏனென்றால், நாசமில்லாதவனாகவும், மாறுபடாதவனாக வும், என்று அந்த இரண்டுபதங்களுக்கும், வெவ்வேறாக அர்த்தம் சொல்லப்பட்டதாகையாலென்று அறியவேண்டும. மேலும், ஆத்மாவுக்கு, அவிக்ரியத்வத்தில் (விகாரமில்லாமற்போவதில்) ஜநநமரணாதி விகாரங்கள் இல்லாதிருத்தல் ஹேதுவாகவும், சர்வகர்மநிஷேதத்தில், அவிக்ரியத்வம்ஹேதுவாகவும் சொல்லப்பட்டதென்று அறியவேண்டும். அந்த அவிக்ரியத்வம் என்கிற ஹேதுஹநநக்ரியையின் ப்ரயோஜககர்த்ருத்வாபாவத்திலும் (கொல்லுவியாதிருத்தலிலும்) ப்ரயோஜ்யகர்த்ருத்வாபாவத்திலும் (கொல்லாதிருத்தலிலும்) இப்படியே சர்வகர்மநிஷேதத்திலும் (ஆத்மாவுக்கு எந்தத் தொழிலும் இல்லை யென்பதிலும்) சமாநமாயிருத்தலாலும், முன் சொன்னப்ரகாரம் கிம் சப்தத்துக்கு ப்ரஶ்நார்த்தம் சம்பவிக்காது ஆகையாலும் வித்வாம்ஸனுக்கு சர்வகர்மங்களும் இல்லையென்பதே சாங்க்யயோகப்ரகரணத்தைப்பற்றி விசாரிக்கையில்; பகவானுக்கு இஷ்டமானதென்று அறியவேண்டும்.

ஆனல், வித்வாம்ஸனுக்கு சர்வகர்மங்களும் இல்லையென்பது பகவானுக்கு இஷ்டம் என்கிற பக்ஷத்தில், அந்தப்புருஷன் எந்தக் கர்மத்தையும் செய்விக்கமாட்டான், எந்தக்கர்மத்தையும் செய்யமாட்டான் என்றேசொல்ல வேண்டுமெல்லவா, எவனையும் கொல்லுவிக்கமாட்டான் எவனையும்கொல்லமாட்டான் என்றுஏன்சொன்னரென்று கேட்பாயாகில்,சொல்லுகிறேன்கேள். எந்தக்கர்மத்தையும் செய்விக்கமாட்டான்,எந்தக்கர்மத்தையும்செய்யமாட்டான்என்றே சொல்லவேண்டி யிருந்தாலும். ப்ரக்ருதோப யோகியாவதனல், அதாவது,அர்ஜுநன், யுத்தத்தில்,இந்தபீஷ்மாதிகளை எப்படிக்கொல்லுவேனென்று சங்கோசித்தானதலால், நீ கொல்லுவிப்பவனும் கொல்லுபவனும் அல்லவென்கிறஅபிப்ராயத்தை அவனுக்குத்தெரிவிப்பதற்காக பகவான் தகுந்த உதாஹரணமாகவும், ஹநநக்ரியா

நிஷேதத்தைச் செய்தாரென்று அறியவேண்டும். உ - அ-சகூ - சுலோகம்

"యఏనం వేత్తిహంతారమ్"
(யஏநம்வேத்திஹந்தாரம்)

என்கிற சுலோகத்தில் ஆத்மாவுக்கு சர்வகர்மங்களும் இல்லையென்பதற்கு அவிக்ரியத்வம் என்கிற ஹேதுசொல்லப்பட்டதல்லவா, இப்பொழுது இந்த சுலோகத்திலும் சர்வகர்ம நிஷேதத்துக்கு அவிக்ரியத்வம் மறுபடியும் ஹேதுவாக ஏன் சொல்லவேண்டும் என்றுகேட்பாயானல், சொல்லுகிறேன், கேள், பகவான்ஹேது விசேஷத்தை (வேருெருகாரணத்தை) நோக்கி, அந்தப்புருஷன் எப்படியும் எவனையும் செய்யமாட்டானென்று சர்வகர்மங்களையும் நிஷேதித்தாரென்று அறியவேண்டும்,

ஆனல், ஆத்மாவுக்கு சர்வகர்மங்களும் சம்பவிக்காமலிருப்பதற்கு ஹேதுவிசேஷமான அவிக்ரியத்வம் இதுவரைக்கும் சொல்லப்பட்டே யிருந்ததல்லவா, ஹேதுவிசேஷமென்ருல், அவிக்ரியத்வமா, அல்லது வேறுஹேதுவா ; அந்தவிஷயத்தை நன்ருய்த் தெரியும்படி சொல்லவேண்டும் என்று கேட்பாயானல், சொல்லுகிறேன்கேள், ஹேதுவிசேஷமென்ருல் ஹேத்வந்தரமே. (அவிக்ரியத்வத்தைக்காட்டிலும் வேருகிய காரணமே) அதுயாது வித்வத்த (ஆத்மஸ்வரூபத்தையறிதல்) அந்தக்காரணம். எங்கேசொல்லப்பட்டது என்ருல்

"యఏనం వేద"

யஏநம்வேத

(எவன் இந்த ஆத்மாவைத் தெரிந்துகொள்ளுகிருனே) (என்கிற இடத்தில் சொல்லப்பட்டது. எப்படிசொல்லப்பட்டது என்ருல், எவன் இந்த ஆத்மாவைத் தெரிந்துகொள்ளுகிருனே அவன் எந்தக்கர்மத்தையும் செய்கிறவனல்லன் என்று சொல்லுவதனுல் வித்வத்த சொல்லப்பட்டது. ஆனல், பூர்வம் ஆத்மாவுக்கு ஸர்வகர்மங்களும் இல்லையென்பதற்கு அவிக்ரியத்வம் ஹேதுவாகச் சொல்லப்பட்டது. இப்பொழுது ஆத்மாவையறிந்தவனுக்கு ஸர்வகர்மங்களும் இல்லையென்பதற்கு வித்வத்தஹேதுவாகச்சொல்லப்

பட்டதல்லவா. வேத்தா (ஆத்மாவையறிந்தவன்) என்றும், வேத்யம் (அறிதற்குரியபொருள்) என்றும், வித்வத்த (ஆத்மாவை யறிந்துகொள்ளுதல்) என்றும் சொல்லவேண்டிவந்தது. அப்படி யிருக்கும்போது வேத்தா ஸவிகாரனென்றும், வேத்யம் நிர்விகாரமென்றும் சொல்லவேண்டி யிருக்கிறது. அப்படி சொன்னபக்ஷத்தில் ஸவிகாரத்வ நிர்விகாரத்வங்கள் சீதோஷ்ணங்களைப்போல பரஸ்பர விருத்ததர்மங்களாகையால் ஸவிகாரனான வேத்தாநிர்விகாரனான ஆத்மாவைக்காட்டிலும் அந்யனென்று சொல்லவேண்டியிருக்கின்றது. அப்படி சொன்னபக்ஷத்தில் கொல்லுவோனும் கொல்லுவிப்போனும் இருக்கிறானென்று சொல்லவேண்டும். இதுவுமன்றி வித்வாம்ஸனுக்கு அவிக்ரியத்வம் இருந்த பக்ஷத்திலேயே ஸர்வகர்மநிஷேதம ஸம்பவிப்பதன்றி வித்வத்த இருந்தபக்ஷத்தில் அது விகாரமாதலால் விக்ரியாரூபமான வித்வத்த உடையவன் விக்ரியையுடையவனே ஆனபடியால் வித்வாம்ஸனுக்கு அவிக்ரியத்வம் இல்லையாகையால் ஸர்வகர்மநிஷேதமும் இல்லையென்றேசொல்லவேண்டியிருக்கிறதே யென்றுகேட்பாயானால் சொல்லுகிறேன். அந்தவித்வத்தாரூபமான ஹேதுவிசேஷம வித்வாம்ஸன் அவிக்ரியனான ஆத்மாவைக்காட்டிலும் வேறானவனென்கின்ற அபிப்பிராயத்தால், சொல்லப்படவில்லை வேறென்னவென்றால், ஆத்மாவும், வித்வாம்ஸனும் ஒருவனென்கிற எண்ணத்தாலேயே சொல்லப்பட்டது.

ஆனால், கூடஸ்தனும் அவிக்ரியனான ஆத்மாவைத் தெரிந்துகொண்ட வித்வாம்ஸனும் அவிக்ரியர்கள் எப்படியாவார்கள்? அவிக்ரியமான கல்லைத்தெரிந்துகொண்டவன் அவிக்ரியனாகிறானா? அப்படியாகிறது சம்பவிக்காதல்லவா? என்று சொல்லக்கூடாது. ஏனென்றால்,

"𑌅𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌾"

"அயமாத்மா"

(இந்த வித்வாம்ஸன் ஆத்மாவேயன்றி ஆத்மாவைக் காட்டிலும் வேறானவனல்ல.) ஆகையாலென்று அறிய வேண்டும். மேலும், த்ருஷ்டாந்தத்தில், கல் வேறு, கல்லைத்தெரிந்துகொண்டவன் வேறேயல்லாமல், கல்லைத்தெரிந்துகொண்டவனே கல் அல்ல.

ப்ராக்ருதத்திலானால் தேஹாதிசங்காதம் (ஸ்தூலஸூக்ஷ்ம சரீரங்கள் முதலானவைகளின் ஸமூஹம்) ஜடமாகையால் வித்வத்தஸம்பவிக்காது. ஆகையால் அந்த தேஹாதி ஸங்காதத்தைக்காட்டிலும் மிச்சமாயிருப்பது ஆத்மாவே ஆகையாலும், அந்த ஆத்மஸ்வரூபன் வித்வாம்ஸனே யாதலாலும், ஆத்மா அவிக்ரியன் ஆகலால் வித்வாம்ஸனும் அவிக்ரியனாயிருக்கிறானென்றும், ஆகையால் வித்வாம்ஸனுக்கு ஸர்வகர்மங்களும் ஸம்பவிக்கமாட்டாவென்று சொல்லுதல் யுக்தமேயென்றும் அறியக்கடவது. மேலும் வித்வாம்ஸன் என்கிறபோது விசேஷணமான தேஹாதிஸங்காதம் விசேஷ்யமான சேதநப்பொருள் என்பவை இரண்டு இருக்கின்றன அல்லவா? வித்வத்த (ஆத்மாவையறிதல்) விசிஷ்டத்துக்கா? (அந்த இரண்டின் மொத்தத்துக்கா) அன்றி கேவலனான ஆத்மாவுக்கா என்று விசாரிப்போம். விசிஷ்டத்துக்கு வித்வத்த என்று சொன்னபக்ஷத்தில் ஆத்மஸம்பந்தம் ஜடமான தேஹாதி ஸங்காதத்துக்கும் உண்டாகுமாதலால் வித்வத்த ஜடத்துக்கும் சொல்லவேண்டிவரும். அப்படிசொல்லுதல் விரோதம் ஆகையால் வித்வத்த விசிஷ்டத்துக்குச் சொல்லக்கூடாது. போகட்டும், கேவலத்துக்கு வித்வத்த இருக்கிறதென்றுசொல்லலாமென்றாலோ, அந்தக்கேவலமான ப்ரஹ்மம் ஒன்றாகையால் தன்னைக்காட்டிலும் வேறுபொருள் இல்லையாகையால் தெரிந்துகொள்ளுவோனென்றும்தெரிந்துகொள்ளத்தகுந்ததென்றும் சொல்லப்படுகிற வ்யவஹாரமே இல்லையாய்ப்போகையால் ஜீவப்ரஹ்மவிபாகமே சம்பவிக்காதாகையாலும் வித்வத்த கேவலமான சேதநத்துக்கும் சம்பவிக்காது. மேலும், ஜீவன் கிஞ்சிஜ்ஞன், ஈஸ்வரன் ஸர்வஜ்ஞன். என்கிற வ்யவஹாரம் ப்ராமாணிகமாயிருக்கிறதல்லவா? அப்படிப்பட்ட பாஸ்பரவிருத்ததர்மங்கள் உண்டாதல் சம்பவிக்காது. ஏனென்றால், பிம்பப்பிரதிபிம்பங்களான ப்ரஹ்மஜீவர்களுடைய அந்தபாஸ்பர விருத்ததர்மம் எப்பொழுதும் இல்லாததாகையால் ப்ரஹ்மஜீவர்களுக்கு பேதமிருக்கிறதென்று ஊஹிக்கக்கூடாதாகையாலென்று அறியவேண்டும். இப்படிவிசாரிக்கும்போது, தெரிந்துகொள்ளுவோனுக்கும் தெரிந்துகொள்ளுவதற்குரிய பொருளுக்கும் அபேதம்சித்தித்ததாகையால் வித்வாம்ஸனுக்கு ஸர்வகர்மங்களும் இல்லையென்றுசொல்லுதல் யுக்தமென்றே அறியவேண்டும்.

ஆனால் வித்வாம்ஸன் ப்ரஹ்மஸ்வரூபனே அல்லவா? ப்ரஹ்மம் அவிக்ரியமாதலால் வித்வாம்ஸனும் அவிக்ரியன் என்றுசொல்லவேண்டுமல்லவா? வித்வத்த (அறிந்துகொள்ளுதல்) என்கிற விக்ரியை (விகாரம்) ப்ரஹ்மத்துக்கில்லையாதலால் வித்வாம்ஸனுக்கும் அந்தவித்வத்தாரூபவிக்ரியை இல்லையென்று சொல்லவேண்டுமேயன்றி இருக்கிறதென்று சொல்லக்கூடாதே யென்றாலோ, சொல்லுகிறேன், உலகத்தில் சைதந்யம். (ஜ்ஞாநரூபமானப்ரஹ்மம்) எல்லாவற்றிலும் நிறைந்திருக்கிறது. அந்தசைதந்யம் மநுஷ்யாதிகளில் மாத்திரம் இந்திரியாதிகளென்கிற தகுந்தசாதநங்களிருப்பதனால் வஸ்துஜ்ஜ்ஞாநத்தை உண்டாக்குகின்றது. கடாதிஜடவஸ்துக்களில் (சக்ஷுராதீந்திரியஸஹாயமில்லாத வஸ்துக்களில்) அந்த சைதந்யமிருந்தபோதிலும் இந்திரியாதிகளென்கிற தகுந்த வஸ்துக்கள் இல்லாதிருப்பதினால் வஸ்துஜ்ஜ்ஞாநத்தை உண்டாக்காமலிருக்கின்றது. எப்படியென்றால், மநுஷ்யன் எதிரிலிருக்கின்ற குடத்தைமனத்தோடுகூடின சக்ஷுரிந்திரியத்தால் (கண்ணினால்) பார்த்து, இதுகடமென்று தெரிந்துகொள்ளுகிறான். குடமென்னும் ஜடபதார்த்தம் தன்னிடத்தில் சைதந்யமிருந்தாலும் இந்திரியாதிகளென்கின்ற ஸாதநஸாமக்கிரி இல்லையாதலால் வஸ்திரம்முதலான வேறொருவஸ்துவைத் தெரிந்துகொள்ளாமலிருக்கிறது. ஒரு மநுஷ்யன் குடத்தைப்பார்த்து, இதுகுடம் என்று தெரிந்துகொள்ளுகிறான் அல்லவா, அப்படிப்பட்ட விஷயஜ்ஞாநம் எப்படி உண்டாயிற்றென்றால் சொல்லுகிறேன், அந்தக்கரணம் (மநஸ்ஸு) தீபத்தின் பிரகாசத்தைப்போல விஷயங்களை (வஸ்துக்களை) அடைந்து புத்திவ்ருத்தியென்று சொல்லப்படும். அப்படி விஷயங்களையடைந்த அந்தக்கரணம் புத்திவ்ருத்தியென்று எப்படி சொல்லக்கூடுமென்றால், அபிவ்யஞ்ஜகமாவ (தெரியப்படுத்துவதான) புத்திவ்ருத்தியில் அஜ்ஞானத்தாலே அந்த சைதந்யம் விஷயஜ்ஞாநமென்று வ்யவஹரிக்கப்படுகிறதென்று அறிந்துகொள்ளவேண்டும். அப்படிப்பட்ட வ்யவஹாரத்தால் உபலப்தமான (அடையப்பட்ட) ஆத்மா, கற்பிக்கப்படுகிறான். அப்படிகற்பிப்பதற்கு அவித்யாப்ரயுக்தமித்யாஸம்பந்தம் (அஜ்ஞாநத்தால் உண்டான இல்லாதசம்பந்தம்) காரணம். இப்படியே ஆத்யாசிகஸம்பந்தத்தால் (பழுதையிற் பாம்புபோல அதுவல்லாதபொருளில் அதுவென்கிற ஆரோபசம்பந்தத்தால்.)

"तत्त्वमसि"

"தத்வமஸி"

என்கிற வாக்கியத்தால் ஜீவேஸ்வரர்கள், ஒருவஸ்துவே என்கிற புத்திவ்ருத்தி உண்டாகின்றது. அப்படிப்பட்ட புத்திவ்ருத்தி மூலமாக வித்வாம்ஸன் (ஆத்மாவை யறிந்தவன்) ஆத்மாவாக வ்யஹரிக்கப்படுகிறுன். அஜ்ஞாந ப்ரயுக்தமான இப்படிப்பட்ட கற்பித சம்பந்தத்தால் வித்வத்த (அறிந்து கொள்ளுதல்) என்றும், வித்வாம்ஸன் (அறிந்து கொள்ளுகிறவன்) என்றும், வேத்யம் (அறிந்து கொள்ளத்தகுந்தவஸ்து) என்றும் வ்யவஹரிக்கப்படுகின்றது. இதுவெல்லாம் அஜ்ஞாநப்ரயுக்த கற்பித ஸம்பந்தத்தால் உண்டானதே யாகையால், பரமார்த்தமாக (உண்மையாக) விசாரித்த பக்ஷத்தில் வித்வாம்ஸன் அவிக்ரியனுன ஆத்மாவேயன்றி ஆத்மாவைக்காட்டிலும் அந்யனல்லனென்றே சொல்ல வேண்டியிருக்கிறது. ஆகையால் வித்வத்த விகாரமென்று சொல்லக்கூடாது. என்றால் நான் ப்ரஹ்மம் என்கிற மோக்ஷாவஸ்தையிலும் புத்திவ்ருத்தி யிருக்குமாகையால், ஆத்மாவுக்கு விக்ரியையிருக்கிறதென்று எண்ணுமல் அந்தபுத்திவ்ருத்தி அவித்யோபாதி இருக்கிறவனைக்கே இருக்குமன்றி அவித்யோபாதி நசித்தபிறகு இருக்காதென்றும், அஸத்யமான அவித்யோபாதியால் உண்டானது அஸத்யமேயென்றும், ஆகையாலேயே உண்மையாய் ஆத்மஸ்வரூபனுன வித்வாம்ஸன் அவிக்ரியனே யென்றும் அறிய வேண்டும்.

மேலும், கூடஸ்தமான ஆத்மாவுக்கு அஸத்யமான அவித்யை இருந்தபோதிலும் அவனுக்கு கர்மாதிகாரம் இல்லையாதலால் அந்தக் கர்மங்கள் எவனுக்காக விதிக்கப்பட்டிருக்கின்றன என்று சொல்ல வேண்டும், கர்மாதிகாரமுள்ளவனுக்கே விதிக்கப்படுகின்றனவென்று சொல்லவேண்டும். அன்றி கர்மாதிகாரமில்லாத வித்வாம்ஸனுக்கென்று சொல்லக்கூடாது. மேலும் வித்வாம்ஸனுக்கு எந்தக்கர்மங்களும் இல்லையென்று நிஷேதரூபமாக இந்தஸ்லோகத்திலேயே சொல்லப்படுதலால் சாஸ்திரத்தால் விதிக்கப்பட்ட கர்மங்கள் அவித்வாம்ஸனுக்கே யென்றும், வித்யை வித்வாம்ஸனுக்கு விதிக்கப்பட்டதென்றும் பகவானுடைய நிச்சயமென்று தெரிந்து

கொள்ளவேண்டும். ஆனல் கர்மம் அவித்வாம்ஸனுக்கென்றும், வித்யைவித்வாம்ஸனுக்கென்றும் பிரித்துச்சொன்ன பக்ஷத்தில், கஷ்டமிருக்கிறது, எப்படியென்ருல், வித்வாம்ஸனுக்கு வித்யைஸ்வபாவஸித்தமாகவே இருக்கும்போது அவனுக்கு வித்யையை விதிப்பது பிஷ்டபேஷணம்போல (மாவை அரைப்பதுபோல) வீணேயன்றி விசேஷமொன்றுமில்லை. அவித்வாம்ஸனுக்கு வித்யை விதிக்கப்பட்டபோது பயன்படாகின்றது. ஆகையால் கர்மம்போல வித்யையும் அவித்வாம்ஸனுக்கே விதிக்கவேண்டுமென்ருலோ சொல்லுகிறேன். அவித்வாம்ஸன் செய்கிற கர்மம் பாவரூபமாய் அவன் மனதுக்கு (ஸத்யரூபமாய்) இருக்கின்றது, வித்வாம்ஸன் செய்கிற கர்மம் அபாவ ரூபமாய் (அஸத்யரூபமாய்) இருக்கின்றது. எப்படியென்ருல், அவித்வாம்ஸன் தேஹாதிகளோடு கூடியிருப்பதே ஆத்மாவென்கிற ஜ்ஞானமுள்ளவனுகையால் நாள்தோறும் அக்நிஹோத்ரகர்மத்தைச் செய்யவேண்டும் என்கிற விதிவாக்யஜ்ஞானம் உண்டானபிறகு அந்தக் கர்மத்தை அதற்குத்தகுந்த சாதநங்களோடு முடிக்கவேண்டும். செய்யாதிருந்தால் பாவம்சம்பவிக்கும். நான் செய்பவன், எனக்கு இந்தக்கர்மம் அவசியமாய்ச்செய்யத்தகுந்தது என்று நினைக்கிருன். ஆதலால் அவித்வாம்ஸனுடைய கர்மம் பாவரூபமானது.

“ నజాయతే”

“ ந்ஜாயதே ”

என்கிற ஆத்மஸ்வரூபத்தைத் தெரிவிக்கிறவிதிவாக்கியத்தின் அர்த்தத்தைத்தெரிந்துகொண்டபிறகு எனக்கு இந்தக்கர்மம்செய்யத்தகுந்தது, நான்செய்கிறவன், நான் அனுபவிக்கிறவன் என்கிற எண்ணம்வித்வாம்ஸனுக்கு இல்லை.மற்றென்னவென்ருல், ஆத்மைக்யஜ்ஞாநம் ஒன்றே உண்டாயிருக்கின்றது. ஆகையால் வித்வாம்ஸனுடைய கர்மம் அபாவரூபமாயிருக்கிறது. என்ருல், யத்ருச்சையாய் எந்தத்தொழிலையாகிலும் செய்தபோதிலும்அதுசெய்யப்படாததேயென்று சொல்லுதல் வித்வாம்ஸனுக்கு இப்படி ப்ரஹ்மஸ்வரூபத்தைத் தெரிவிக்கிற வாக்கியத்தின் அர்த்தத்தைத் தெரிந்துகொண்டபிறகு நான்செய்பவனல்லன்நான் அனுபவிக்கிறவனல்லன், என்ருல் அவஶ்யமாக கருமம் செய்தற்குரியதல்ல என்கிற எண்ணம் உண்டாகையாலும், அப்படிப்பட்ட எண்ணம் அதாவது ஆத்மா அவி

க்ரியன் என்கிற ஜ்ஞாநம் செய்யத்தகுந்த கர்மங்களுக்கு விரோதியா தலாலும் அவித்வாம்ஸனுக்குண்டானதேஹாதிகளோடுகூடின ஆத்மஜ்ஞாநம்போலநானே ப்ரஹ்மம் என்கிற ஜ்ஞாநமும், ஜ்ஞாநத்வா விசேஷத்தினல் (இதுவும் ஜ்ஞாநமேயாகையால்) கர்மங்களைச்செய்வதற்கு ஹேதுவாகட்டுமென்று சொல்லக்கூடாதென்று அறிய வேண்டும். மேலும் இப்படி அவித்வாம்ஸனுக்கும் வித்வாம்ஸனுக்கும்பேதம் சம்பவிக்கின்றது, ஆகையால்கர்மமும் வித்யையும் அவித்வாம்ஸனுக்கே விதிக்கப்பட வேண்டுமென்று சொல்லக் கூடாதென்று அறியவேண்டும்.

மேலும், ஆனல் ஆத்மவேத்தாவுக்குச் செய்யத்தகுந்த கர்மம் இல்லையென்று சொன்னயல்லவா

"విద్వాన్యజేత"

"வித்வான்யஜேத"

(வித்வாம்ஸன் யஜ்ஞத்தைச்செய்யவேண்டும்) என்கிற சாஸ்திரத்தால் வித்வாம்ஸனும் கர்மங்களைச் செய்யவேண்டு மென்றே சொல்லவேண்டி யிருக்கிறதேயென்றுலோ, சொல்லுகிறேன். எவன் தன்னை; நான் செய்கிறவன் என்று தெரிந்துகொள்ளுகிருனே அவனுக்கு என்னல் கர்மம் செய்யத்தகுந்தது என்கிற புத்தி அவசியமாக உண்டாகின்றது, அதைப்பற்றி அவன்கர்மாதிகாரி ஆகிருன். கர்மாதிகாரி ஆகிறதினல் அவனுக்குக் கர்மங்கள் சம்பவிக்கின்றன. அப்படி கர்மங்கள் சம்பவிப்பதினல் அவன் அவித்வாம்ஸனுகிருன். என்றுல் ஆத்மாவை அறியாதவன் ஆகிருன்.

"విద్వాన్యజేత"

"வித்வான்யஜேத"

என்னுமிடத்தில் வித்வான் என்னும் பதத்துக்கு என்னபொருள், என்றுலோ அவசியம் கர்மங்கள் செய்யத்தகுந்தனவென்று அறிந்தவனென்று அர்த்தமென்று அறியக்கடவது, இதற்குத் தகுந்தபடி,

"ఉభౌతౌనవిజానీతః"

"உபௌதௌநவிஜாநீத:"

என்று இரண்டாமத்தியாயம். ககூ-ம் ஸ்லோகத்தில் இந்த ஆத்மாவை எவன் கொல்லுகிறவனாகத் தெரிந்துகொள்ளுகிறானோ. இந்த ஆத்மாவை எவன் கொல்லப்பட்டவனாகத் தெரிந்துகொள்ளுகிறானோ, அவர்களிருவரும் ஆத்மஸ்வரூபத்தை அறியாதவர்களென்று பகவான் அருளிச்செய்திருக்கிறார். இந்த ஸ்லோகத்தில் என்றால்,

"వేదావినాశినం"

"வேதாவிநாஶிநம்"

என்னும் ஸ்லோகத்தில்

"కథంసపురుషః"

"கதம்ஸபுருஷ:"

என்று ஆத்மஸ்வரூபத்தை யறிந்தவனுக்குக் கர்மங்கள் இல்லையென்று சொல்லியிருக்கிறார். மேலும், வித்வாம்ஸனுக்குக் கர்மங்களில்லை யென்பதற்கு,

"ఉభౌతౌనవిజానీతః"

"உபௌதௌநவிஜாநீத:"

என்று சொல்லுதல் ஒருஹேது.

"వేదావినాశినం"

"வேதாவிநாஶிநம்"

என்று ஆத்மவேத்தாவாகச் சொல்லுதல் மற்றொரு ஹேது என்று அறியவேண்டும். மேலும் சொல்லப்பட்ட இந்த இரண்டு ஹேதுக்களாலும் ஆத்மாவை யறிந்தவனுக்கும் ஆத்மாவை அறிய நினைத்தவனுக்கும் ஸர்வகர்மஸந்யாஸத்திலேயே அதிகாரமென்று அறியவேண்டும். மேலும், இந்த ஹேதுவினாலேயே இதற்கு ப்ரமாணமாக மூன்றாவது அத்தியாயம், ௩-வது ஸ்லோகம்,

"జ్ఞానయోగేనసాంఖ్యానాం। కర్మయోగేనయోగినాం॥"

"ஜ்ஞாநயோகேநஸாங்க்யாநாம்|கர்மயோகேநயோகிநாம்"

என்ற ஸ்லோகத்தால் ஸாங்க்யர்களையும் (வித்வாம்ஸர்களையும்) யோகிகளையும் (அவித்வாம்ஸர்களையும்) பிரித்து, வித்வாம்ஸர்

களுக்கு ஜ்ஞாநநிஷ்டையும், அவித்வாம்ஸர்களுக்குக் கர்மநிஷ்டையும் சம்பவிக்குமென்று பகவானான நாராயணன் அருளிச்செய்தாரென்று அறியவேண்டும். மேலும்,

"ద్వావిమావథపన్థానౌ"

"த்வாவிமாவதபந்தாநௌ"

என்கிற ஸ்லோகத்தால் - கர்மநிஷ்டை ஜ்ஞாநநிஷ்டை என்கிற இவ்விரண்டும் அதிகாரி பேதத்தால் வரிசையாய் யோகிக்கும் ஜ்ஞாநிக்கும் விஹிதமார்க்கங்களென்று வேதவியாஸர் தம்புதல்வனுக்கு சொன்னசொல்லும் இதற்கு உதவியா யிருக்கின்றது. மேலும்,

"స్వాధ్యాయోధ్యేతవ్యః"

"ஸ்வாத்யாயோத்யேதவ்ய:"

(வேதத்தைப் படிக்கவேண்டும்)என்கிற விதிவாக்யத்தால் வேதத்தைப் படித்தவர்களுக்கு,

"క్రియాపథశ్చైవపురస్తాత్ పశ్చాత్సన్న్యాసశ్చ"

"க்ரியாபதஸ்சைவபுரஸ்தாத்பஸ்சாத்ஸந்யாஸஸ்ச"

(முன்னே கர்மமார்க்கம், பிறகு ஞாநமார்க்கம்) என்கிற ப்ரமாணத்தால் அதிகாரத்தைப்பற்றி, க்ரியாமார்க்கமென்றும், ஜ்ஞாநமார்க்கமென்றும் இரண்டு மார்க்கங்கள் அறிவிக்கப்பட்டன. மேலும், ௩-அ, உஎ-சு,

"అహఙ్కారవిమూఢాత్మా। కర్తాహమితిమన్యతే"

"அஹங்காரவிமூடாத்மாகர்த்தாஹமிதிமந்யதே"

(தத்வத்தை அறியாதமூடன் நான்செய்கிறவன் என்று நினைக்கிறான்.)

"తత్త్వవిత్తునాహంకరోమీతిమన్యతే"

"தத்வவித்துநாஹம்கரோமீதிமந்யதே"

(தத்வத்தையறிந்தவன் நான் செய்கிறவனல்லன் என்று நினைக்கிறான்.) ரு-அ, சஉ-சு,

"సర్వకర్మాణిమనసాసన్న్యస్యాస్తే"
"ஸர்வகர்மாணிமநஸாஸந்யஸ்யாஸ்தே"

(ஜ்ஞாநியானவன் சர்வகர்மங்களையும் மனத்தினாலேயே விட்டிருக்கிறான்)என்றும், அங்கங்கே இந்தக்ரந்தத்திலேயே பலதரம் பகவான் சொல்லப்போகிறார், ஆகையால் இதுவெல்லாம் முன்னே சொன்னதற்கு உறுதியாயிருக்கிறதென்று அறியவேண்டும்.

மேலும், வேதவியாசர் தன்புத்திரனுக்கு கர்மமார்க்கத்தையும் ஜ்ஞாநமார்க்கத்தையும் சாமாந்யமாய் உபதேசித்தார், ஆகையால், இரண்டும் சமாநமேயென்று சொல்லவேண்டுமல்லது ஒன்று குறைவென்றும், மற்றொன்று உயர்வென்றும் சொல்லக்கூடாது. மற்றென்னவென்றால், ஜ்ஞாநமார்க்கம் எப்படிப்பட்டதோ, கர்மமார்க்கமும் அப்படிப்பட்டதேயென்று சொல்லவேண்டும். இரண்டும் சமாநமானவைகளே யாகையால், மறுபடியும் எங்களுக்கு கர்மசமுச்சயவாதத்துக்கு அநுகூலமாகவேயிருக்கிறதென்று சொல்லுகிறாயோ, கேள், கர்மமார்க்கமும் ஜ்ஞாநமார்க்கமும் சமாநமேயான பக்ஷத்தில்,

"క్రియాపథశ్చైవ। పురస్తాత్ పశ్చాత్సన్న్యాసశ్చ॥"
"க்ரியாபதஶ்சைவபுரஸ்தாத், பஶ்சாத்ஸந்யாஸஶ்ச"

என்கிற மற்றொரு உதாஹரணத்தில், புரஸ்தாத்க்ரியாபதஃ (முன்னே கர்மமார்க்கம்) பஶ்சாத்ஸந்யாஸஃ (பின்னே ஜ்ஞாநமார்க்கம்) என்று ஏன் சொல்லவேண்டும், முன்னே பின்னே என்றே சொல்லக்கூடாது. அப்படி முன்னே பின்னே யென்று சொல்லுதலால் ஜ்ஞாநமார்க்கமே உயர்ந்ததென்று சொல்லவேண்டுமென்று அறியவேண்டும். மேலும், ஜ்ஞாநமார்க்கமே உயர்ந்ததான பக்ஷத்தில்; அந்த உதாஹரணத்தில், உயர்ந்த ஜ்ஞாநமார்க்கத்தையே முன்னே சொல்லி, பின்பு க்ரியாமார்க்கத்தை ஏன் சொல்லக்கூடாது. அதாவது,

"సన్న్యాసఃపురస్తాత్ । పశ్చాత్ క్రియాపథః॥"
"ஸந்யாஸஃபுரஸ்தாத்। பஶ்சாத்க்ரியாபதஃ"

என்றே ஏன் சொல்லக்கூடாது. என்று கேட்பாயானால், சொல்லுகிறேன், கேள், ஜ்ஞாநம் எப்போது உண்டாகின்றது

ஜ்யோதிஷ்டோமாதி கர்மங்களிலும், அந்தக் கர்மங்களைச் செய்யும் போது அந்தக் கர்மங்களுக்குப் பலமான புண்யலோக சுகத்திலும், வைராக்யத்தால், (நிராசையால்) உண்டாகின்றது. அந்த வைராக்யம் எதினுல் உண்டாகின்றது. சித்தசுத்தியால் உண்டாகின்றது, அந்தச் சித்தசுத்தி எதினுல் உண்டாகின்றது. சாஸ்த்ரோக்த கர்மங்களைப் பலத்தைவிரும்பாமல் செய்வதனுல் உண்டாகின்றது, ஆகையால் இப்படி கர்மாநுஷ்டாநமே ஜ்ஞாநமார்க்கத்துக்கு ஹேதுவாகி யிருக்கின்றது. ஆகையாலேயே முன்னே கர்மமார்க்கமென்று சொல்லப்பட்டதென்றும், கர்மமார்க்கத்தைப் பார்க்கிலும் ஜ்ஞாந மார்க்கமே மோக்ஷத்துக்கு முக்கியகாரண மாகையால் சிறந்ததென்றும் அறியவேண்டும்.

ஆனுல், பிறத்தல்முதலான ஆறுவிகாரங்களும், மஹத்து, அஹங்காரம், சப்தஸ்பர்ஸரூபரஸகந்தங்கள் என்கிற விகாரங்களும் இல்லாதவனும், நான் செய்கிறவனல்லன், என்கிற நினைப்பு இல்லாதவனும், ஒருவனும் ஆகிய ஆத்மா, நானே யென்கிற எந்த ஜ்ஞாந முண்டாகிறபோது சர்வகர்ம சந்நியாச முண்டாகிறதென்று சொல்லப்பட்டதோ, அப்படிப்பட்ட ஜ்ஞாநம், ஆத்மா, க்ரியா ஜ்ஞாந சக்திகளுக்கு ஆதாரமானவனுதலால் விக்ரியையுள்ள ஆத்மாவுக்காயினும், ஆத்மாவை யறிந்தவனுக்காயினும், உண்டாகவே மாட்டாதென்று சிலர் (மீமாம்ஸகர்கள்) சொல்லுகிருர்களே. அதற்கென்ன உத்தரமென்று கேட்பாயானுல் சொல்லுகிறேன், கேள், அவர்கள் (மீமாம்ஸகர்கள்) விஷயாபாவத்தால் அவிக்ரியாத்மஜ்ஞாநம் இல்லையென்று சொல்லுகிருர்களா, அல்லது ப்ரமாணம் இல்லாதிருக்கையாலேயா என்று கேட்கத் தகுந்தவர்கள். அதாவது, உலகத்தில் கடமிருந்தால் தான் கடவிஷயக ஜ்ஞாநம் உண்டாகின்றது. அது இல்லாவிடில் அப்படிப்பட்ட ஜ்ஞாநம் உண்டாகாதல்லவா, அவ்வாருகவே, ஆத்மஜ்ஞாந க்ரியாசக்திகள் உள்ளவனுகையால், விக்ரியையுள்ள ஆத்மா இருக்கிருனேயன்றி, அவிக்ரியனுன ஆத்மா இல்லவேயில்லை யாதலால், அவிக்ரியாத்ம ஜ்ஞாநமும் இல்லவேயில்லையென்று, அவர்கள் (மீமாம்ஸகர்கள்) சொல்லுகிருர்களா, அல்லது ப்ரமாண மில்லாதிருக்கையாலேயா, என்று அவர்களைக் கேட்கவேண்டும். விஷயாபாவத்தால், அதாவது, அவிக்ரியனுன

ஆத்மா இல்லையாதலால் அவிக்ரியாத்ம ஜ்ஞாநம் இல்லையென்று சொன்ன பக்ஷத்தில்,

" నజాయతే"

"நஜாயதே"

என்கிற சுலோகத்தால், ஆத்மாவுக்கு ஜநநமரணுதிவிகாரங்கள் இல்லையென்று பகவான் சொன்னவார்த்தை வீணுகின்றது, அப்படி வீணுனவார்த்தையை பகவான் ஏன் சொல்லுவார்,பகவான் ஆப்தர் (உண்மையைச் சொல்லுகிறவர்) ஆதலாலும், அவரது வார்த்தை ஆப்தவசநமாதலாலும் வீணென்று சொல்லக்கூடாது, அப்படி வீணென்று சொல்லக்கூடாதாகையால், ஆத்மாஜநநமரணுதிகள் இல்லாதவனென்று சொன்னசொல் பயனுள்ளதே யென்று நம்பவேண்டும். ஆத்மாவினிடத்தில் ஜ்ஞாநக்ரியாசக்திகள் கற்பிதங்களாகையால் ஆத்மாவிக்ரியை யுள்ளவனென்றும் சொல்லக்கூடாது. ஆகையால் அவிக்ரியனுன ஆத்மா இல்லையாதலால் அவிக்ரியாத்ம ஜ்ஞாநம் சம்பவிக்காதென்று சொல்லக்கூடாது, போகட்டும், ப்ரமாணமில்லையாதலால் அவிக்ரியாத்மஜ்ஞாநம் இல்லையென்று சொல்லுகிறேம் என்றுலோ, அப்படியும் சொல்லக்கூடாது, உலகத்தில் மீமாம்ஸகர்களுக்கு ஜ்யோதிஷ்டோமாதி கர்மங்களைச் செய்தபக்ஷத்தில், ஸ்வர்க்காதி புண்யலோகசுகம் உண்டாகுமென்றும், அப்படிப்பட்ட சுகத்தை அநுபவிப்பதற்குத்தகுந்த திவ்ய சரீரம்சம்பவிக்குமென்றும் ஜ்ஞாநம் உண்டாகின்றதல்லவா; அப்படிப்பட்ட ஜ்ஞாநம் அவர்களுக்கு (மீமாஸகர்களுக்கு) எதனுல் உண்டாகின்றது.

" జ్యోతిష్టోమేనస్వర్గకామోయజేత"

"ஜ்யோதிஷ்டோமேநஸ்வர்க்ககாமோயஜேத"

(ஸ்வர்க்கலோகசுகத்தை விரும்புகிறவன் ஜ்யோதிஷ்டோமம் என்கிற யஜ்ஞகர்மத்தால் தேவபூஜையைச்செய்யவேண்டும்.) என்கிற சப்தப்ரமாணத்தால் உண்டாகிறதென்று சொல்லவேண்டுமல்லவா, அப்படியே,

" నజాయతే"

"நஜாயதே"

இத்யாதி சப்தப்ரமாணத்தால், அவிக்ரியனுன ஆத்மா இருக்கிருனென்றும், அபபடிப்பட்ட அவிக்ரியாத்மஜ்ஞாநமும் வித்வாம்ஸனுக்கு சம்பவிக்குமென்றும் சொல்லலாம். ஆகையால், என்று அறியவேண்டும். இந்த ஹேதுவினுல், அதாவது கர்மகாண்டத்தால், அதுவரைக்கும் அறியப்படாத தர்மாதிகம் எப்படி அறியப்பட்டதோ, அப்படியே ஜ்ஞாநகாண்டத்தால் அதுவரைக்கும் அறியப்படாத ப்ரஹ்மஸ்வரூபமும் அறியப்படுமோதலாலும், அப்படிப்பட்ட ஜ்ஞாநம் ப்ரமாண விரோதமல்ல ஆதலாலும, விஷயபாவத்தாலாயினும், ப்ரமாணமில்லாதிருத்தலாலாயினும், அவிக்ரியாத்மஜ்ஞாநம் சம்பவிக்காதென்று மீமாபஸகர்கள் சொன்னசொல் சரியல்லவென்று தெரிந்துகொள்ளவேண்டும்.

ஆனுல், ஆத்மா,

“యతో వాచో నివర్తన్తే। అప్రాప్యమనసాసహ”

“யதோவாசோநிவர்த்தந்தே| அப்ராப்யமநஸாஸஹ||”

என்கிற சுருதியால் இந்த்ரியகோசரன் அல்லனுதலால் ஆத்மவிஷயஜ்ஞாநம் சமபவிக்காதென்று சொல்லுவோ மென்ருலோ கண்முதலாகிய இந்த்ரியங்களின் வழியாக, மனதுவஸ்துவோடு கூடினபோதே உண்டாகின்றதாகையாலும், மேலே சொன்னசுருதியால், ஆத்மாவோடு மனதுக்கு சம்பந்தமில்லையாதலாலும், ஆத்மா இந்திரியங்களால் தெரிந்துகொள்ளத் தகுந்தவன் அல்லனுதலாலும், ஆத்மாவை இந்திரியங்களால் தெரிந்துகொள்ளுதல் சபபவிக்கவேமாட்டாது. ஆகையால் ஆத்மஜ்ஞாநத்துக்கு சாதநமேயில்லை என்ருலோ; சொல்லுகிறேன்.

“మనసైవానుద్రష్టవ్యమ్”

“மநஸைவாநுத்ரஷ்டவ்யம்”

(மனத்தினுலேயே ஆத்மவஸ்துவை அறிந்துகொள்ளவேண்டும்) என்கிற சுருதியைப்பற்றி

“తత్త్వమసి”

“தத்வமஸி”

(அந்த பரப்ரஹ்மவஸ்து நீயாகின்றாய்) என்கிற சாஸ்திரத்தை ஆசாரியன் உபதேசிக்கையால் உண்டான சமதமாதிகளோடுகூடின மனோவ்ருத்தியாலேயே ஆத்மதத்வத்தை அறியவேண்டும். அதாவது, ப்ரஹ்மவஸ்து தான் ப்ரகாசிப்பதற்கு, தீபம் மற்றொரு தீபத்தினுடைய ப்ரகாசத்தை விரும்பாததுபோல, வேறு சாதநத்தை விரும்பாமல், தனக்குத்தானே ப்ரகாசிப்பதாயிருந்தாலும், அந்தப்ரஹ்மவஸ்து நீயாகின்றாய் என்கிற வாக்யத்தால் உண்டான புத்திவ்ருத்தியால் வெளிப்படுத்தப்பட்டதாகி, சவிகல்ப (ப்ரகாசத்தோடு கூடின) வ்யவஹாரத்துக்கு ஆதாரமானதாகையால், ப்ரஹ்மம் மனோகோசரமாதல் கௌணம் (அமுக்யபக்ஷம்) அன்றி முக்யபக்ஷமல்ல. இந்தஹேதுவினால் ப்ரஹ்மம் கரணங்களால் அறியப்படாததென்பது (சாதநங்களால் தெரிந்துகொள்ளத்தகாததென்பது) சித்தமாகவில்லை. ஆனால்,

"யதோவாசோநிவர்த்தந்தே"

"యతో వాచో నివ ర్తన్తే"

என்கிற சுருதி, ஆத்மவஸ்து மனத்தினாலும் தெரிந்துகொள்ளக்கூடாததென்று சொல்லாகின்றது.

"మనసై వానుద్రష్టవ్యమ్"

மநஸைவாநுத்ரஷ்டவ்யம்"

என்கிற சுருதி, மநத்தினாலேயே ஆத்மவஸ்துவை தெரிந்துகொள்ளவேண்டும் என்று சொல்லாநின்றது. இப்படி இரண்டு சுருதிகளின் அர்த்தங்களுக்கும் பரஸ்பரவிரோதம் சம்பவிக்கின்றதே, இதற்கென்ன உத்தரமென்றாலோ; சொல்லுகிறேன். சாஸ்த்ரோபதேசத்தால் சமதமாதிகளோடு கூடின மனத்தினாலேயே (மனோவ்ருத்தியினாலேயே) ப்ரஹ்மவஸ்து அறிந்துகொள்ளத்தகுந்ததென்றும், சமதமாதிஸம்ஸ்காரமில்லாத கேவலமனத்தினால் ஆத்மவஸ்து அறிந்துகொள்ளத்தகாததென்றும் அறிந்து, சுருதிகளின் அர்த்தங்களுக்குப் பரஸ்பரவிரோதமில்லையென்று அறியவேண்டும். மேலும் இப்படி சமதமாதிஸம்ஸ்க்ருதமான மனத்தினால் ஆத்மவஸ்து தெரிந்துகொள்ளத்தகுந்ததென்று சுருதிப்ரமாணமிருக்கின்றது. இப்போது விவாதத்துக்கு விஷயமான விகாரம் உபயாபிமத விகாரம்

போல் (நீயும் நானும் ஒப்புக்கொண்ட விகாரம்போல) விகாரமாவ தனுல், ஆத்மதர்மமல்ல, என்கிற அநுமாநப்ரமாணமும் அந்தசுருதி ஸ்மிருதி ரூபப்ராமாணத்துக்கு அநுகூலமாயிருக்கின்றது. இப் படி சுருதிஸ்மிருதி ரூபசப்தப்ரமாணமும் அநுமாநப்ரமாணமும் இருக்கும்போது, ப்ரமாணமிருந்தாலும் ப்ரமேயம் (ப்ரமாணத்தால் தெரிந்து கொள்ளத்தகுந்த வஸ்து) தோற்றப்படாதென்றதுபோல, அவிக்ரியாத்மஜ்ஞாநம் வித்வாம்ஸனுக்கு சம்பவிக்காதென்று சொ ன்னசொல் மிகவும் ஸாஹஸமாயிருக்கிறதென்று அறியவேண்டும். அதாவது அவிக்ரியாத்மஜ்ஞாநம் அவசியம் உண்டாகின்றதென்று அறியத்தக்கது. ஓய், அப்படிப்பட்ட அவிக்ரியாத்மஜ்ஞாநம் உண் டாகிறவனைக்கும், அஜ்ஞாநம் நிவர்த்தித்தல், ஆத்மஸ்வரூபத்தை யெடுத்துக்கொள்ளுதல் (ஆத்மஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ளுதல்) என்கிற இரண்டும்ஜ்ஞாநத்துக்குப்பலன்களல்லவா; அப்படிப்பட்ட ஜ்ஞாநமுண்டானுலும் அந்த இரண்டு பலன்களும் இல்லாத பக்ஷத் தில் ப்ரயோஜநம் ஒன்றுமில்லையென்று நினைக்காமல், அதாவது ப்ர காசம் (வெளிச்சம்) ப்ரவர்த்திக்கையில், இருள்நீங்கினதுபோல, ஆத் மஜ்ஞாநம்பிறந்தவுடனே, அநாத்மஜ்ஞாநம் நிவர்த்திக்க வேண்டும். அப்படி நிவர்த்திக்காத பக்ஷத்தில், ஆத்மஜ்ஞாநத்துக்கு என்ன பயனுண்டென்று நினைக்காமல், பிறந்த தத்வஜ்ஞாநம், அதற்குவி ரோதமான அஜ்ஞாநத்தை அவசியம் நிவர்த்திக்கச் செய்துகொ ண்டேயிருக்கின்றதாகையால் பயனுள்ளதென்று அறியவேண்டும். ஆனுல் அஜ்ஞாநத்தை நிவர்த்திக்கச் செய்கிறதென்றீரே, அந்த அஜ்ஞாநம் எப்படிப்பட்டதென்றுல், இதுவரைக்கும்,

"యఏనం వేత్తి హన్తారం"

"யஏநம்வேத்திஹந்தாரம்"

என்கிற சுலோகத்தில், ஆத்மா ஒருவனைக்கொல்லுகிறவனெ ன்று தெரிந்துகொண்டவனும், ஆத்மா கொல்லப்பட்டவனென்று தெரிந்து கொண்டவனும் ஆகிய இவ்விருவரும் அஜ்ஞாநிகள். (ஆத்மதத்வத்தை அறியாதவர்கள்) சொன்னவிதமாக, ஆத்மஸ்வ ரூபத்தை அறியாதிருத்தலே அஜ்ஞாநமென்று அறியவேண்டும்.

ஆனுல், பூர்வபக்ஷிகள், அஜ்ஞாநத்தை அபாவரூபமாகவும் சொல்லுகிறுர்கள், ஹநநக்ரியையினுடைய கர்த்ருத்வத்துக்கும்,

(கொல்வதற்கும்) ஹேது கர்த்ருத்வத்துக்கும் (கொல்விப்பதற்கும்) கர்த்ருத்வத்துக்கும் (கொல்லப்படுவதற்கும்) காரணமென்று பகவான் சொன்ன அஜ்ஞாநம் அப்படிப்பட்டதல்ல, மற்றென்னவென்றால், குடத்துக்குமண்போல உபாதாநகாரணமாகி, (காரமிருக்கிறவனைக்கும் கார்யகாரண விபாகம் இல்லாமல்காரியத்தோடு கூடியிருக்கிற வஸ்துவாகி) இருக்கின்றது. உபாதாநகாரணம் எப்பொழுதும் அதுவிகாரப்படுவதனால் அபாவரூபமாயிருக்காது, ஆகையால், அஜ்ஞாநம், ப்ராகபாவரூபமாக (முன்பு இல்லாததாக) இருக்குமென்று பூர்வபக்ஷிகள் சொன்ன சொல் சரியல்லவென்று அறியவேண்டும். ஆனால் உலகத்தில் செய்யத்தகாத காரியத்தைச்செய்தபக்ஷத்தில் அப்படி செய்ததற்கு அஜ்ஞாநம் காரணமென்று சொல்லலாமாதலால்,

"న హింస్యాత్సర్వాభూతాని"

"நஹிம்ஸ்யாத்ஸர்வாபூதாநி"

(எல்லாப்ராணிகளையும் ஹிம்ஸை செய்யக்கூடாது. என்கிற சாஸ்திரார்த்த விசாரத்தால், ஹிம்ஸை செய்யத்தகாததாயிருக்கையில், அப்படிப்பட்ட ஹிம்ஸையைச்செய்வதும் செய்விப்பதும் அஜ்ஞாநத்தால் உண்டானதேயென்று சொல்லலாமாயினும் சுருதிஸ்ம்ருதிகளால் சொல்லப்பட்டகர்மங்களைச்செய்வதற்கும் அஜ்ஞாநமே காரணமென்றுசொல்லக்கூடாது என்றாலோ, சொல்லுகிறேன், ஒரு ஹநநக்ரியைக்கு மாத்திரமே (ஹிம்ஸை செய்வதற்கும் ஹிம்ஸை செய்விப்பதற்கும் மாத்திரமே) அஜ்ஞாநம் காரணமென்று சொல்லக்கூடாது. எல்லாக்கர்மங்களையும் செய்தற்கும் அஜ்ஞாநமே காரணமென்று சொல்லவேண்டும். ஏனென்றால், கர்த்ருத்வாதிகம் (எந்தவேலையையாகிலும் செய்தல் முதலாயுள்ளது) அவித்யாகல்பிதமாதலால் அநித்யமாகையாலும், நித்யம் என்று சொன்னபக்ஷத்தில், மோக்ஷமேயில்லையென்று சொல்லவேண்டிவரும் ஆதலாலும் எல்லாக்கர்மங்களையும் செய்வதற்கும் செய்விப்பதற்கும் அஜ்ஞாநமே காரணமென்று சொல்லவேண்டுமென்று அறியவேண்டும்.

மேலும், ப்ராகபாவம், ப்ரத்வம்ஸாபாவம், அத்யந்தாபாவம், அந்யோந்யாபாவம், என்கிற பாவரூபகாரணங்களால் உண்டான காரியங்களுக்கு, உபாதாநகாரணம் இருக்கவேண்டுமென்று நியம

மில்லையாயினும், பாவரூபகாரணத்தால் உண்டான காரியங்களுக்கு உபாதாநகாரணம் அவசியம் இருக்கவேண்டுமென்கிற நியமமிருக்கின்றது. ஆகையால், ப்ரக்ருதத்தில், அஜ்ஞாநம் பாவரூபமாயினமையால், அந்த அஜ்ஞாநத்தாலுண்டான கர்த்ருத்வாதி காரியம் அநித்யமானாலும், உபாதாநகாரணம் உள்ளதேயென்றும், உபாதாநகாரணம் உள்ளதாகையால் அஜ்ஞாநம் ஜ்ஞாநப்ராகபாவரூபம் அல்லவென்றும் அறியககூடாது.

மேலும், கர்த்ருத்வாதிகத்துக்கு (கர்மங்களைச் செய்வதற்கு) அஜ்ஞாநமே உபாதாந காரணமென்று ஏன் சொல்லவேண்டும், அநாத்மா (தேஹாதிகம்) உபாதாநகாரணமென்று சொல்லக்கூடாதா, என்றாலோ, அகர்த்ருத்வாதிகம் ஜடமான அநாத்மத்தில், காணப்படாமல், ஆத்மாவிலேயே காணப்படுதலால், அநாத்மாவும் ஆத்மாவில் தோற்றுகிற கர்த்ருத்வாதிகத்துக்கு உபாதாநகாரணமென்று சொல்லக்கூடாது. ஆனால் போகட்டும், ஆத்மாவிலேயே காணப்படுகின்றது ஆகலால், ஆத்மாவே உபாதாநகாரணமென்று சொல்லுவோமென்றாலோ, அந்தக் கர்த்ருத்வாதிகம் கூடஸ்தனான (நிர்விகாரனான) ஆத்மாவில் அவித்யை (அஜ்ஞாநம்) யினது சம்பந்த மிருக்கிறபோதே இருக்கிறதென்று தோன்றுகின்றதன்றி, அவித்யை யில்லாதபோது தோன்றாமலிருக்கின்றது. ஆகையால் கர்த்ருத்வாதிகத்துக்கு அஜ்ஞாநமே உபாதாநகாரணமென்று சொல்லியே தீரவேண்டுமென்றும், அஜ்ஞாநம் உபாதாநகாரண மாகையாலும், குடத்துக்குமண்போல உபாதாநகாரணம் எப்பொழுதும் அபாவரூபமா யிருக்காதென்பது லோகாநுபவஸித்தமாகையாலும், பாவரூபமேயென்றும் அறியவேண்டும். மேலும், ஆத்மாவில் கர்த்ருத்வம் இல்லாமற்போனாலும், காரயித்ருத்வம் இருக்கலாகாதா, அதாவது, ஆத்மா நிர்விகாரனாதலால், தான் எந்தவேலையையும் செய்பவன் அல்லாமற்போனாலும், தான் சும்மாயிருந்து ஒருவனால் செய்விக்கிறானென்று சொல்லக்கூடாதா, என்றாலோ, சொல்லுகிறேன், எவன் ஒருவனைச் செய்யச்சொல்வானோ, அவன் அப்படி செய்யென்று சொல்லிச் செய்வித்தலும் விகாரமேயாதலால் விக்ரியையுள்ளவனே யென்று சொல்லவேண்டிவரும். ஆகையால், அவிக்ரியனான ஆத்மாவினிடத்தில் காரயித்ருத்வம் (செய்வித்தல்)

என்கிற விகாரமும் இல்லையென்றே சொல்லவேண்டும். மேலும், நிர்விகாரனான ஆத்மாவுக்கு அஜ்ஞாநசம்பந்தம் எப்படி உண்டாயிற்றோ, அந்த அஜ்ஞாநத்துக்கு முதல் எதுவோ, அதுமுழுதும் சொல்லுதற்குக் கூடாதென்றும், கர்த்ருத்வாதிகம் ஆத்மாவில் தோன்றுதற்கு, அநாதியும் அநிர்வாச்யமும் ஆகிய அஜ்ஞாநமே உபாதாநகாரணமென்றும், தத்வஜ்ஞாநத்தால் அந்த அஜ்ஞாநம் நிவர்த்தியாகுமென்றும் இதுவரைக்குமே சொல்லப்பட்டதாகையால், இப்பொழுது அந்தவிஷயத்தை மறுபடியும் சொல்லுதல், அவசியகமல்லவென்று அறியவேண்டும். மேலும், இவ்விதமாய் சர்வகர்மங்களையும் செய்வதும் செய்விப்பதும் அவித்யாகற்பிதங்களாகையால் ஆத்மவேத்தாவுக்கு இல்லை, ஆகையாலேயே ஆத்மவேத்தாவுக்கு கர்மங்களில் அதிகாரமில்லையென்று தெரிவிப்பதற்கு, பகவான்,

"వేదావినాశినమ్ కథంసపురుషః"

"வேதாவிநாசிநம், கதம்ஸபுருஷஃ"

என்பது முதலானவைகளைச் சொன்னாரென்று அறியவேண்டும். ஆனால், பகவான், வித்வாம்ஸனுக்குக் கர்மாதிகாரமில்லையென்று சொன்னாரல்லவா, ஜீவித்திருக்கிறவரைக்கும் அவனுக்கு எதினிடத்திலும் அதிகாரமிருக்கிறது என்பாயானால்,

"జ్ఞానయోగేనసాంఖ్యానామ్"

"ஜ்ஞாநயோகேநஸாங்க்யாநாம்"

என்று இதற்கு முன்பே ஜ்ஞாநநிஷ்டையிலும், அதற்கு அங்கமான சர்வகர்மஸந்யாஸத்திலும் அதிகாரமென்று சொல்லப்பட்டதென்று அறியவேண்டும். இதற்கு அநுகூலமாக, சர்வகர்மஸந்யாஸத்தைக்குறித்து, ரு-அ, கஉ-சுலோ,

"సర్వకర్మాణిమనసాసన్న్యస్యాస్తే సుఖంవశీ"

"ஸர்வகர்மாணிமநஸாஸந்யஸ்யாஸ்தேஸுகம்வஶீ"

(ஆத்மவேத்தாவானவன் ஜிதேந்திரியனாய் சர்வகர்மங்களையும் மனத்தினால்விட்டு சுகமாயிருக்கிறான்) என்று பகவான் சொல்லப்போகிறார்.

மேலும், ரு-அ, கஉ - சுலோ,

"సర్వకర్మాణిమనసాసన్న్యస్యాస్తే సుఖంవశీ"

" ஸர்வகர்மாணிமநஸாஸந்யஸ்யாஸ்தேஸுகம்வஸீ"

(என்கிற இடத்தில், மநஸா என்கிறபதம் இருக்கிறதினால் மாந ஸிககர்மங்களுக்கே நிஷேதமல்லது வாசிகங்களுக்கும (பேசுதல் முதலான தொழில்களுக்கும்) காயிகங்களுக்கும் (நடத்தல் முத லான தொழில்களுக்கும்) நிஷேதமில்லையென்று நினைக்காமல், அவ் விடத்தில் ஸர்வகர்மாணி என்று ஸர்வ என்கிற பதம் இருக்கை யாலே மூன்று விதங்களான கர்மங்களுக்கும் நிஷேதமென்று அறிய வேண்டும். மேலும், அவ்விடத்தில் சர்வபதம் இருப்பதினால் மந ஸா (க்ருதாநி) (மனத்தினால் செய்யப்பட்ட) என்று ஸர்வகர்மாணி என்பதற்கு விசேஷணமாக்கி, மாநசிகங்களான எல்லாக்கர்மங்களு க்குமே (நினைத்தல், துக்கித்தல், முதலான சர்வகர்மங்களுக்குமே) நிஷேதமென்று சொல்லுவோமல்லது மூன்று விதமான கர்மங்களு க்கு நிஷேதமென்று சொல்லமாட்டோம், என்றாலோ சொல்லுகி றேன், எல்லாவிதங்களாலும் ஆலோசிக்கும்போது, மநோவ்யாபார த்தைவிட்ட பக்ஷத்தில், வேறானவாசிக காயிகவ்யாபாரங்கள் உண் டாகமாட்டா, ஆகையாலும், மநோவ்யாபாரங்களே வாசிககாயிக ங்களான கர்மங்களுக்குக் காரணங்களாகையாலும், மூன்றுவிதங்க ளான கர்மங்களுக்கே நிஷேதமென்று சொல்லவேண்டுமென்று அறி யக்கடவது. ஆனால், சாஸ்திரத்திற் சொல்லப்பட்ட வாக்காய கர் மங்களுக்கு (யாகாதிகளுக்கு) காரணங்களான மாநஸிககர்மங்கள் (சங்கல்பம் முதலானவை) சில, சாஸ்திரங்களால் விதிக்கப்படாத வாக்காயகர்மங்களுக்கு(பேசுதல்,நடத்தல்,முதலான தொழில்களு க்கு) காரணங்களான மாநஸிகவ்யாபாரங்கள் சில, இந்த இரண்டு விதங்களான கர்மங்களில்,சாஸ்த்ரீய வாக்காயகர்மங்களுக்கு (யோ காதிகளுக்கு) காரணங்களான மாநஸிககர்மங்களையொழிய மற்றைய வாசிககாயிக கர்மங்களுக்குக் காரணங்களான எல்லாக்கர்மங்களை யும் விட்டுச் சுகமாயிருக்கிறானென்று

"సర్వకర్మాణిమనసాసన్న్యస్యాస్తే సుఖంవశీ"

" ஸர்வகர்மாணிமநஸாஸந்யஸ்யாஸ்தேஸுகம்வஸீ"

என்பதற்கு, அர்த்தமென்று சொல்லுகிறோம், என்பாயானால், அப்படி அசாஸ்த்ரீயங்களான வாக்காயகர்மங்களுக்கு(பாஷணகமனாதிகளுக்கு) காரணங்களான மாநஸிககாமங்களுக்கே நிஷேதமென்று சொன்னபக்ஷத்தில்,

"సర్వకర్మాణిమనసా"

"ஸர்வகர்மாணிமநஸா"

என்கிற சுலோகத்திலேயே

"నైవకుర్వన్నకారయన్"

"நைவகுர்வந்நகாரயந்"

என்கிற இடத்தில், வஸீ என்பதற்கு இரண்டுவிசேஷணங்கள் இருத்தலால், ஜிதேந்த்ரியனான ஆத்மவேத்தாவானவன், எந்தத் தொழிலையும் செய்யாதவனாயும், செய்விக்காதவனாயும், மனத்தினால் சர்வகர்மங்களையும் விட்டுச் சுகமாயிருக்கிறானென்று அர்த்தம் சொல்லவேண்டி யிருப்பதனாலும், செய்தல், செய்வித்தல் என்பவை மாநஸிககர்மங்களல்ல ஆகையாலும், பரஸ்பரவிரோதம் சம்பவிக்கின்றது ஆதலால் நீசொன்ன அசாஸ்த்ரீய மாநஸிககர்மநிஷேதம் என்ற சொல்லைச் சொல்லக்கூடாதென்று அறியக்கடவது. மேலும், வாக்காயகர்மங்களான யாகாதிகள் சாஸ்திரத்தால் விதிக்கப்பட்டவையாதலால் செய்யத்தகுந்தன என்றும், வேறானசம்பாஷண கமனாதிகள் சாஸ்திரத்தால் விதிக்கப்படாதன ஆதலால் செய்யத்தகாதன என்றும் என்கிற விவேகபுத்தியால் அசாஸ்த்ரீயங்களான சகல மாநஸிககர்மங்களையும்விட்டுச் சுகமாயிருக்கிறானென்றும், சொல்லக்கூடாது. ஏனென்றால், "நைவகுர்வந்" இத்யாதி விசேஷணங்களால் விவேகபுத்தி,அப்படி அசாஸ்த்ரீயமாநஸிககர்மங்களை விடுவதற்கே காரணமல்ல, சர்வகர்மங்களையும் விடுவதற்குமஹேதுவாயிருக்கிறதினால் என்று அறியத்தக்கது.

ஆனால், ஆலோசிக்கும்போது, நீ சொன்ன சர்வகர்மநிஷேதம், (எல்லாக் கர்மங்களையும் விடுதல்) மரணத்துக்குப் பிறகு சம்பவிக்கிறதன்றி உயிரோடிருக்கும்போது சம்பவிக்காதாகையால் மரணத்துக்குப் பிறகு சர்வ கர்மங்களையும்விட்டுச் சுகமாயிருக்கிறா

னென்றே பகவானுடைய கருத்தென்று சொல்லுவேனென்றுயா
ளுல், அதற்கு உத்தரம் சொல்லுகிறேன், அப்படியானபோது

"నవద్వారేపురేదేహే"

"நவத்வாரேபுரேதேஹே"

(ஒன்பது தொளைகளுள்ள சரீரத்திலிருக்கிறுன்) என்ற மூன்
ரும் அடியின் அர்த்தம் இறந்தவனுக்கு சம்பவிக்காதாகையாலும்

"వశీ"

"வஶீ"

(ஜிதேந்த்ரியன் என்று சொன்ன ஜிதேந்த்ரியத்வதர்மம் வீணு
குமாதலாலும், அதாவது இந்த்ரியஜயம் உள்ளவனுக்கும் அது இல்
லாதவனுக்கும் எல்லாருக்கும் மரணத்தின்பின் சர்வகர்மங்களை
யும் விடுதல் சம்பவிக்கின்றதாகையால் விசேஷமொன்றும் இல்லா
மையாலும், மரணத்தின்பின் சர்வகர்மங்களையும் விடுதல் சம்பவிக்
கின்றதென்று பகவானுடைய கருத்தென்று நீ சொன்னசொல் பரி
ஹாசத்துக்கு இடமாயிருத்தலால், எவ்வளவும் யுக்தமல்லவென்று
அறியவேண்டும். ஆனுல், அந்த சுலோகத்தில், தேஹே அஸ்தே
என்று அந்வயிக்காமல்

"మృతః"

"ம்ருதஃ"

அகுர்வந், அகாரயந்ஸர்வகர்மாணி மநஸாதேஹே ஸந்யஸ்ய
ஸுகமாஸ்தே, (இறந்தவன்) தான் எந்தத் தொழிலையும் செய்யாத
வனுயும், செய்விக்காதவனுயும் எல்லாத்தொழில்களையும் சரீரத்தில்
வைத்து சுகமாயிருக்கிறுன் என்று அந்வயித்தபக்ஷத்தில், உயிரோ
டிருக்கிறவனுடைய உடம்பில் சர்வகர்மத்யாகம் சம்பவிக்காதாகை
யால் இறந்தவனுக்கு சரீரத்தில் சர்வகர்மங்களையும் வைத்துச்சுக
மாயிருத்தல் சம்பவித்துக்கொண்டே யிருக்கின்றதென்று சொல்
வையானுல், சொல்லுகிறேன் கேள், இந்தக்கீதா சாஸ்திரம் முத
லான சமஸ்தவேதாந்த கிரந்தங்களிலும் ஆத்மா அவிக்ரியனே
யென்று நிச்சயித்துச் சொல்லுதலால், நீ அந்வயித்துச் சொன்ன

அர்த்தம், ஆத்மா அவிக்ரியனென்று நிச்சயித்துச் சொன்ன சொல்லுக்கு விரோதமாயிருக்கையாலும், ஆத்மா அவிக்ரியனென்று சொன்ன சொல்லுக்கு அநுகூலமாக வஶீநைவகுர்வந் அகாரயந் ஸர்வகர்மாணி மநஸா ஸந்யஸ்யதேஹே ஸுகமாஸ்தே (ஜிதேந்த்ரியனான வனுகிய ஆத்மவேத்தாவானவன், எந்தத் தொழிலையும் செய்யாதவனும் எந்தத்தொழிலையும் செய்விக்காதவனுயும், மனத்தினால் சர்வகர்மங்களையும் விட்டுச்சரீரத்தில் சுகமாயிருக்கிறான்)என்று அந்வயித்துஅர்த்தம் சொல்லுதலே நியாயமானதினாலும், சரீரசம்பந்தமுள்ளபோதே, செய்தலும் செய்வித்தலும் சம்பவிக்குமாதலாலும், கர்மங்களைச் செய்தல் சம்பவிக்கும்போதே சர்வகர்மநிஷேதம் செய்யத் தகுந்த தாகையாலும், அப்படி யிலலாதபக்ஷத்தில் ப்ராப்தப்ரதிஷேதம் (சண்டாளன் நமதுவீட்டுக்குள்ளே வராமலிருக்கும் போதே நீயெங்கள் வீட்டுக்குள்ளே வரவேண்டாம் என்றாற்போல சம்பவிக்காததை நிஷேதித்தல்) என்கிறதோஷம் சம்பவிக்கு மாதலாலும், நீ சொன்ன அந்வயப்ரகாரமாக, இறந்தவன் சர்வகர்மங்களையும் அந்த சரீரத்தில்வைத்து சுகமாயிருக்கிறானென்று சொல்லுதல் யுக்தமாயிருக்கவில்லையென்றும், யாம் சொன்ன அந்வயப்ரகாரமே சுருதிஸ்ம்ருதிகளுக்கு அநுகூலித்து மிகவும் நன்றாயிருக்கிறதென்றும் அறியத்தக்கது.

மேலும், இங்கு, நிக்ஷிப்யஎன்கிற இடத்தில் நி - என்கிற உபஸர்க்கத்துக்கு வையர்த்யம் உண்டாகுமாதலால், விட்டு என்று அர்த்தமேயல்லதுவைத்து என்று அர்த்தமல்ல. ஆகையால்விட்டு என்பதற்கு எவற்றைவிட்டு என்று கர்மாகாம்க்ஷையே உண்டாகின்றதாகையால், மநஸாஸர்வகர்மாணிநிக்ஷிப்ய (மனத்தினால் எல்லாத் தொழில்களையும் விட்டு)என்று அந்வயிக்கவேண்டியிருத்தலாலும், ஆஸ்தே (இருக்கிறான்) என்கிற க்ரியைக்கு, எதில் இருக்கிறானென்று அதிகரணாகாம்க்ஷையே உண்டாகையால், தேஹே ஆஸ்தே (தேஹத்தில் இருக்கிறான்) என்றே அந்வயித்தல் யுக்தமாயிருத்தலாலும், தேஹத்தில் சர்வகர்மங்களையும் வைத்து சுகமாயிருக்கிறானென்று நீ அந்வயித்துச் சொன்னசொல் எவ்வளவாயினும் யுக்தமாயிருக்கவில்லை. ஆகையால் ஆத்மதத்வத்தை அறிந்தவனுக்கு யாம்சொன்ன பிரகாரமாக ஸர்வகர்மஸந்யாஸத்திலேயே அதி

காரமன்றி, கர்மங்களைச்செய்வதில் அதிகார மில்லையென்று இந்தத் கீதா சாஸ்திரத்தில் அவ்வவ்விடங்களில், இனிமேல் ஆத்மஜ்ஞாநப்ரகரணததில் சொல்லுவோமென்று பகவத் பாதர்சொன்னார் என்று அறியவேண்டும்.

---

## ரஹஸ்யார்த்தம்.

---

இதுவரைக்கும் சொல்லப்பட்ட சுலோகங்களால் அஹம்சப்தத்தால் தெரிவிக்கப் பட்டுக்கொண்டிருக்கிற ஆத்மா, விகாரமில்லாதவனென்றும், நித்யனும், கூடஸ்த்தனும், அஸங்கனும், சித்ரூபனும் என்றும், சொல்லி இப்படிப்பட்ட ஆத்மஸ்வரூபத்தைத் தெரிந்து கொண்டவனுக்கு சர்வகர்மஸந்யாஸத்திலேயே அதிகாரமென்றும், வேறு எதினிடத்திலும் அதிகாரம் இல்லையென்றும் இந்தசுலோகத்தால் தெரிவிக்கிறாரென்று அறியவேண்டும். ஆனால், இதை நான் அறிகிறேன் என்று ஒவ்வொருமனிதனும் ஒவ்வொரு விஷயத்திலும் சொல்லுகிறானல்லவா; இந்தத்தெரிந்துகொள்ளுதலானது தேஹமா, ப்ராணனா, இந்த்ரியங்களா, மனமா, அஹங்காரமா, விசுவனா, (ஜாக்ரதவஸ்த்தாபிமாநியா) தைஜஸனா (ஸ்வப்நாவஸ்த்தாபிமாநியா) ப்ராஜ்ஞனா (நித்ராவஸ்த்தாபிமாநியா) தேஹமேயானபக்ஷத்தில், ஸ்வப்நகாலத்திலுள்ள தேஹமா; அன்றி, ஜாக்ரதவஸ்த்தையிலுள்ள தேஹமா; அன்றி இந்த இரண்டுதேஹங்களுமா; அன்றி, இவையெல்லாவற்றினும் வேறானவனா; என்று கேட்பாயானால் சொல்லுகிறேன் கேள். தெரிந்துகொள்ளுகிறவன், மேலே சொல்லப்பட்ட தேஹாதிகள் அல்லவென்றும்தேஹாதிகளைக் காட்டிலும் வேறாயிருக்கிற ஆத்மாவே தெரிந்துகொள்ளுகிறவன் என்றும், அறியவேண்டும், ஏனென்றால், விவரித்துச்சொல்லுகிறேன் கேள், நான் என்கிற சப்தத்துக்கு அர்த்தமானது ஸ்வப்நாவஸ்த்தையிலுள்ள தேஹமேயானால். அது ஜாக்ராவஸ்தையில் இல்லாமற்போகையாலும் ஜாக்ராவஸ்த்தையிலும் நான்என்கிற வ்யவஹார மிருக்கையாலும், ஸ்வப்நாவஸ்த்தையோடுகூட நான் என்னும் வ்யவஹாரம் நசித்துப்போகாமையாலும, நான் என்கிற சப்தத்துக்கு அர்த்தமான, ஜ்ஞாதா (அறிகிறவன்) ஸ்வப்நாவஸ்தையிலுள்ள தேஹமல்லவென்று அறியவேண்டும். இப்படியே ஜாக்ராவஸ்தையிலு

ள்ள தேஹமே நான் என்கிற சப்தத்துக்கு அர்த்தமான பக்ஷத்தில், ஸ்வப்நாவஸ்த்தையில் இந்த தேஹமில்லாமற் போகையாலும், அந்தஸ்வப்நாவஸ்த்தையில் நான் என்கிற வ்யவஹாரம் உண்டாயிருத்தலாலும், ஜாக்ராவஸ்த்தையிலுள்ள தேஹமும் அல்லவென்று அறியவேண்டும்.

ஆனல், நான் போகிறேனென்று சொன்னவுடனே, போவது தேஹமேயாகையால் நான் என்னும் சப்தத்துக்கு அர்த்தமானது ஜாக்ரதேஹமேயென்று சொல்லக்கூடாதா; என்றுகேட்கத்தகாது, ஏனென்ருல்,நான்தேவதைகளுக்கு ப்ரீதியுண்டாகும்படி யாகாதிபுண்யகாரியங்களைச்செய்து,ஸ்வர்க்கத்துக்குப்போவேனென்று சொன்னபிறகு ஸ்வர்க்கத்துக்குப் போவது இந்த தேஹமல்லாமையாலும், மரணமடைந்த தேஹத்தில் நான் என்கிற வ்யவஹாரம் இல்லாமற்போகையாலும், ஜாக்ரதேஹத்துக்கு நான் என்கிற வ்யவஹாரம் சம்பவிப்பதற்கு இடமில்லையாதலாலென்று அறியவேண்டும். மேலும், ஒன்று இருக்கும்போது மற்ருென்று இருப்பது சம்பவிக்காதாகையால், ஜாக்ரதேஹம் ஸ்வப்நதேஹம் என்கிற இரண்டும் நான் என்கிற சப்தத்துக்கு அர்த்தமல்லவென்று அறியவேண்டும். மேலும், ப்ராணம் ஜடபதார்த்தம் (ஜ்ஞாநமில்லாதவஸ்து) ஆதலால், தன்னையாயினும், தனக்கந்யமான மற்ருென்றையாயினும் அறிந்துகொள்வதற்குத் தகுந்த சக்தியில்லையாதலால், நான் என்பது ப்ராணமும் அல்லவென்று அறியவேண்டும். மேலும், சகலவிஷயங்களையும் க்ரஹிக்கிறது ஒரு இந்த்ரியமே யல்லவாதலாலும், ஒவ்வொரு இந்த்ரியமும் ஒவ்வொரு விஷயத்தை க்ரஹிக்கிறதாதலாலும், ஒரு இந்த்ரியம் நான்என்பதற்காயினும், எல்லா இந்த்ரியங்களும் நான் என்பதற்காயினும், இடமில்லை யாதலால், இந்த்ரியங்களும் நான் அல்லவென்று அறியவேண்டும். மேலும், நான் கண்ணுலே பார்த்தேன். நான்கையினுல் தீண்டினேன், என்று சொல்லும்போது, பார்த்தது ஒரு இந்த்ரியமும், தீண்டினது மற்ருெரு இந்த்ரியமும் ஆதலாலும், பார்த்தவனும்தீண்டினவனும் ஒருவனேயாதலாலும், விசாரிக்கையில், பார்த்தவனும் தீண்டினவனும் இந்த்ரியங்களைக்காட்டிலும் வேருயிருக்கிருனென்றும், ஆகலாலேயே இந்த்ரியங்கள் நான் அல்லவென்றும் தெரிந்துகொள்ளவேண்டும். மேலும் நான் ப்ராஹ்மணன் என்று சொல்லும்போது,

செவிமுதலான சகலேந்த்ரியங்களும் நானான பக்ஷத்தில் ஒரு சரீரம் அநேக ப்ராமணர்கள் ஆகவேண்டி வருமாகையாலும், ஒரு தேஹத்தைப்பார்த்தபோது இந்தப்ராஹ்மணன் ஒருவனேயென்று பிரசித்தமாய்க் காணப்பட்டுக்கொண் டிருத்தலாலும் இந்த்ரியங்கள் நான் அல்லவென்று அறியவேண்டும். மேலும்,

"శ్రు॥ మనసా హ్యేవపశ్యతి"

"மநஸாஹ்யேவபஶ்யதி"

(மனத்தினாலேயே பார்த்துக் கொண்டிருக்கிறான்.) என்கிற சுருதிப்ரமாணத்தால் ஆலோசிக்கும்போது மனமும் இந்த்ரியமேயாகையாலும், மனமும் நான் அல்லவென்று அறியவேண்டும். மேலும், நான் என்கிற சப்தத்துக்கு அர்த்தமானது விகாரரஹிதமானதாகையாலும், அஹங்காரம் என்று சொல்லப்படுவது விகாரமுள்ளதாகையாலும், அஹங்காரமும் நான் அல்லவென்று அறியவேண்டும்.

ஆனால், நான் அறிந்துகொள்ளுகிறேன் என்று சொல்லும்போது அறிந்து கொள்வது அஹங்காரமேயாதலால் நான் என்பது அஹங்காரமேயாகலாமென்று சொல்லக்கூடாது. ஏனென்றால், அஹங்காரம் ஸ்வயமாய் ஜடமாகையாலும், நான் மனிதன் என்று சொல்லும்போது எந்தவிதமாய்மாம்ஸதர்மம் தன்னிடத்தில்ஆரோபிக்கப்படுகிறதோ, அவ்விதமாகவே நான் தெரிந்துகொள்ளுகிறேன் என்று சொல்லும்போதும், ஜடமான அஹங்காரத்தில் தெரிந்துகொள்ளுதலாகிய ஆத்மதர்மம் ஆரோபிக்கப்படுதலாலும், ஜடமான அஹங்காரமும் நான் அல்லவென்று அறியவேண்டும். மேலும், பாலியத்தில் நான் த்ராக்ஷைப்பழத்தைப் புசித்தேன், விளையாடினேன், என்று சொல்லும்போது அந்தந்த விகாரங்களோடுகூட அஹங்காரம் நசித்துப்போகின்றது. பாலியத்தில் அநுபவித்த அநுபவம் மாத்திரம் கிழத்தனத்திலும் நினைப்புக்குவருகின்றது. இப்படிப்பட்ட அநுபவத்தைப்பற்றிப் பார்க்கையில், விகாரமுள்ளதும், அந்தந்த விகாரங்களோடுகூட நசித்துப்போவதும் ஆகிய அஹங்காரத்துக்குத் தெரிந்துகொள்ளுகிற சக்தியுண்டாவதற்கு இடமில்லையாதலால் அஹங்காரம் நான் அல்லவென்று அறியவே

ண்டும். மேலும், நெருப்பு ஒன்றுக்கே தஹநசக்தி சஹஜமாயிருப்பதுபோல, தெரிந்துகொள்ளுதலாகிய சக்தி ஆத்மாவொன்றுக்கேயன்றி மற்றொன்றுக்கும் இல்லையென்று தெரிந்துகொள்ளவேண்டும். மேலும், எனக்கு இந்த அஹங்காரம் பொல்லாததென்று சொல்லும்போது அஹங்காரம் அறியப்படுகிறது என்றும் தான் அறிகிறவன் என்றும் தோன்றுதலாலும் அஹங்காரம் நான் அல்லவென்று அறியவேண்டும். மேலும், விஶ்வ, தைஜஸ, ப்ராஜ்ஞர்கள் ஆகிய மூவரும் தெரிந்துகொள்பவைகளைக் காட்டிலும் பிந்நர்களாதலால் நான் அல்லவென்று அறியவேண்டும். எப்படியென்றால், விஶ்வன் ஜ்ஞாதா (தெரிந்துகொள்ளுகிறவன்) ஆனபக்ஷத்தில், தைஜஸன் அல்லாமற் போகவேண்டிவரும். தைஜஸன் ஆனபக்ஷத்தில் விஶ்வன் அல்லாமற் போகவேண்டிவரும். ப்ராஜ்ஞன் ஜ்ஞாதா ஆனபக்ஷத்தில், விஶ்வதைஜஸர்கள் அல்லாமற் போவார்கள். அதாவது ஒருவன் அநுபவித்தது மற்றொருவனுக்கு நினைப்புக்கு வாராததுபோல, ஸ்வப்நாவஸ்தையிலுள்ள சங்கதிகள், ஜாக்ராவஸ்தாபிமாநியாகிய விஶ்வனுக்கு நினைப்புக்குவாராமற் போகவேண்டிவரும். ஆகையால், இந்த மூவரும் நான் அல்லவென்று அறியவேண்டும். மேலும், எந்த நான் கனாக்கண்டேனோ, எந்த நான் தூங்கினேனோ, அந்த நானே விழித்துக்கொண்டேன், என்று ஒவ்வொரு மனிதனும் விஶ்வதைஜஸ ப்ராஜ்ஞர்களைக்காட்டிலும் பின்னமானவனென்று வ்யவஹரித்தலாலும் விஶ்வதைஜஸ ப்ராஜ்ஞர்கள் நான் அல்லவென்று அறியவேண்டும். மேலும்,

"శ్రు॥ నాన్యోऽతో౽స్తి విజ్ఞాతా"

"நாந்யோதோஸ்திவிஜ்ஞாதா"

(தெரிந்து கொள்ளுகிறவன் இந்த ஆத்மாவைக்காட்டிலும் பின்னமானவன் அல்லன்) என்கிற சுருதிப்ரமாணத்தால், தெரிந்துகொள்ளுகிறவன் (நான் என்கிற சப்தத்துக்கு அர்த்தமாயிருப்பவன்) ஆத்மாவைக்காட்டிலும் பின்னமானவன் அல்லவென்று அறியவேண்டும், மேலும, ஆத்மாவுக்கு புத்திமுதலானவற்றோடு கூட ஆத்யாஸிக சம்பந்தமுண்டாகுமாதலால், ஆத்மா நிர்விகாரனானாலும், ஜ்ஞாத்ருத்வம் (தெரிந்துகொள்ளுதல்) என்கிற விகா

ரம் சம்பவிக்கலாமாகையால், நிர்விகாரனான ஆத்மாவுக்கு ஜ்ஞாத்ருத்வம் எப்படியுண்டாகுமென்று கேட்கலாகாது, மேலும்,

"శ్రు॥ అహంవిజానామివివిక్తరూపః"

"அஹம்விஜாநாமிவிவிக்தரூபஃ"

(உபாதிரஹிதனான நான் தெரிந்துகொள்ளுகிறேன்) என்கிற சுருதிப்ரமாணத்தால், தெரிந்துகொள்ளுகிற ஆத்மாவே நானென்கிற சப்தத்தால சொல்லப்படுகிறவ னென்று அறியவேண்டும். மேலும்,

"శ్రు॥ ఆత్మానంచేద్విజానీయాదయమస్మీతిపూరుషః।
కిమిచ్ఛన్కస్యకామాయశరీరమనుసంజ్వరేత్"

"ஆத்மாநம்சேத்விஜாநீயாதயமஸ்மீதிபூருஷஃ।
கிமிச்சந்கஸ்யகாமாயஶரீரமநுஸம்ஜ்வரேத்"

"శ్రు॥ ౨॥ అయమాత్మాబ్రహ్మ"

"அயமாத்மாப்ரஹ்ம"

நான்பரமாத்மஸ்வரூபனானேனென்று தன்னைப் பரமாத்மஸ்வரூபனாகத் தெரிந்துகொண்டவன் எதைவிரும்பி எதின்பொருட்டு சரீராபிமாநமுள்ளவனாய்ப் பரிதாபத்தையடைவான் (உ) இந்த ஆத்மா ப்ரமஸ்வரூபம் என்கிற சுருதிகளால் ஆலோசிக்கும்போது, தான் நிர்விகார சுத்தப்ராஹ்மஸ்வருபனே யாதலால், தனக்கு எந்தக்கர்மத்திலும் அதிகாரமில்லையென்றும், ஆதலாலேயே பகவான் நிர்விகாராத்மஜ்ஞாநமுள்ளவனுக்கு சர்வகர்மசந்யாசத்திலேயே அதிகாரமென்று இந்த சுலோகத்தால் தெரியப்படுத்தினரென்றும் அறியவேண்டும்.

శ్లో॥ వాసాంసిజీర్ణానియథావిహాయ।
నవానిగృహ్ణాతినరోపరాణి।
తథాశరీరాణివిహాయజీర్ణా।
న్యన్యానిసంయాతినవానిదేహీ॥ ௨௨

"வாஸாம்ஸிஜீர்ணாநியதாவிஹாய |
நவாநிக்ருஹ்ணாதிநரோபராணி |
ததாஶரீராணிவிஹாயஜீர்ணா |
ந்யந்யாநிஸம்யாதிநவாநிதேஹீ"

இ-ள். நரः - மனிதன், ஜீர்ணாநி - கிழிந்த, வாஸாம்ஸி - வஸ்திரங்களை, விஹாய - விட்டு, அபராணி - இதரமானவையும், நவாநி - புதியவையும் ஆகிய, வாஸாம்ஸி - வஸ்திரங்களை, யதா - எந்தப்ரகாரம், க்ருஹ்ணாதி - க்ரஹிக்கிறானோ, ததா - அந்தப்ரகாரம், தேஹீ - ஆத்மா, ஜீர்ணாநி - சிதிலங்களான, ஶரீராணி - தேஹங்களை, (விஹாய-விட்டு) அந்யாநி - இதரமானவையும், நவாநி - புதியவையும் (ஆகிய) (ஶரீராணி) தேஹங்களை, ஸம்யாதி - அடைகிறான்.

## தாத்பர்யம்.

அர்ஜுநா; மனிதன் கிழிந்துபோன வஸ்திரங்களை ஒழித்துப் புதிய வஸ்திரங்களைத் தரிப்பதுபோல, ஆத்மாவும் கிழத்தனம் ரோகம் முதலானவைகளால் சிதிலங்களான தேஹங்களை ஒழித்துப் புதியதேஹங்களை அடைகிறானென்று தாத்பர்யம்.

## சங்கரபாஷ்யம்.

இதுவரைக்கும், விகாரமில்லையாதலால் ஆத்மாவுக்குக் கர்மம் சம்பவிக்காதென்று சொல்லி, இப்பொழுது விகாரம் இல்லாமற் போவதற்குத் தகுந்த காரணத்தை நிர்ணயித்துச் சொல்வதற்காகவே இந்த சுலோகமுதற்கொண்டு சொல்லுகிறாரென்று அறியவேண்டும். மேலும், ஆனால், இதுவரைக்குமே, ஆத்மாவுக்கு நாசமில்லை யென்றும், விகாரமில்லையென்றும், சொல்லப்பட்டதல்லவா; இப்பொழுது என்ன சொல்லவேண்டி யிருக்கின்றது என்று அர்ஜுநன் கேட்பானோ என்னவோவென்று நினைத்து, ஆத்மாவுக்கு நாசம் விகாரம், முதலானவைகள் இல்லையென்று சொன்னதற்கு த்ருஷ்டாந்தம் காட்டும்பொருட்டு, இந்த சுலோகத்தை

ஆரம்பித்தாரென்று அறியவேண்டும், ஆனல், ஆத்மாவுக்கு ஸஹஜமாய் விகாரமில்லாமற்போனல் போகட்டும், மூக்கினதேஹத்தை விடுதல், புதியதேஹத்தை க்ரஹித்தல்முதலான கார்யங்கள் உள்ளவனுதலால்விகாரமுள்ளவனென்றுசொல்லக்கூடாதா என்றுகேட்கலாகாது. ஏனென்றல், பழையவஸ்திரங்களை ஒழித்தல், புதியவஸ்திரங்களை க்ரஹித்தல் முதலானவேலைகளைச்செய்துகொண்டிருப்பதனுல், உலகத்தில் புருஷன் என்று சொல்லப்படுகிறவனுக்கு விகாரமுண்டாகாத விதம்போல மூக்கின தேஹத்தைவிடுதல், புதியதேஹத்தை க்ரஹித்தல் முதலான காரியங்களால் விகாரமுண்டாகாமற்போவதனுல் என்று அறியவேண்டும். மேலும், ஆத்மா விகாரரஹித ளுகையாலேயே இந்த தேஹத்தை விடும்போதும், மற்ளுெரு சரீரத்தைக் க்ரஹிக்கும்போதும், ஒருதன்மையாகவே யிருப்பானென்று அறியவேண்டும்.

---

### ரஹஸ்யார்த்தம்.

---

ஐயா, க்ருஷ்ணு, ஆத்மாவுக்கு நாசமில்லாமற்போனலும் தேஹங்களுக்கு நாசமுண்டாகும், ஆகையால் அநேகமான புண்யகாரியங்களைச்செய்வதற்குக் கருவியாயிருக்கின்ற பீஷ்மாதி[illegible]ங்களுக்கு நாசத்தையுண்டாக்குகிற யுத்தத்தைச் செய்[illegible] எனக்கு இஷ்டமில்லையென்று அர்ஜுனன் சொல்லுவானே எ[illegible]வென்று நினைத்து ஸ்ரீக்ருஷ்ணபகவான் இந்தசுலோகத்தைச்சொல்லுகிருரென்று அறியவேண்டும். மேலும், அர்ஜுனா; பீஷ்மாதி சரீரங்கள்நசித்துப்போகுமென்று விசநத்தை யடையவேண்டாம். பீஷ்மாதிகளுடைய சரீரங்கள் தவத்திலுைம் வயதிலுைம் மெலிந்திருக்கின்றன. ஆகையால், பீஷ்மாதிகள் அப்படிப்பட்ட சரீரங்களை விட்டு, சர்வோத்தமங்களான தேவாதி சரீரங்களையடைந்து அதிகமான போகங்களை அநுபவிக்கத் தகுந்தவர்களாயிருக்கிருர்கள். மேலும், அவர்களுக்கு அப்படிப்பட்ட தேவாதிசரீரங்களை யடையும்போது கர்ப்பவாசம்முதலான கிலேசங்கள் உண்டாகமாட்டா. மேலும், அந்த பீஷ்மாதிகள் விசேஷமாய் தவம்முதலான புண்யகாரியங்களைச் செய்தவர்களாகையால்,

“ శ్రు॥ అన్యన్నవతరంకల్యాణతరంరూపంకురుతేపిత్ర్యంవా
గాంధర్వంవాదైవంప్రాజాపత్యంవాబ్రాహ్మంవా,”

“அந்யந்நவதரம்கல்யாணதரம்ரூபம்குருதேபித்ரியம்வா
காந்தர்வம்வாதைவம்ப்ராஜாபத்யம்வாப்ராஹ்மம்வா”

இதரமானதும், மிகவும் நூதனமானதும், மிகவும் மங்களகரமானதும் ஆகிய பித்ருதேவதா ஸ்வரூபத்தையானாலும், கந்தர்வரூபத்தையானாலும், தைவரூபத்தையானாலும், ப்ராஜாபத்ய ரூபத்தையானாலும், ப்ராஹ்ம ரூபத்தையானாலும், செய்யாநின்றது என்கிற சுருதி ப்ரமாணானுஸாரமாக, காந்தர்வரூபம் முதலானவற்றில் எதையாயினும் ஒன்றை அடையத்தகுந்தவர்களா யிருக்கிறார்கள். ஆகையால், இந்த தர்மயுத்தத்தில், அந்த பீஷ்மாதிகள் புண்ய லோகங்களுக்குப் போவதற்குத் தடையான சரீரங்களை விட்டுவிட்டு திவ்யதேஹங்களை அடைகிறார்கள். ஆகையால் நீ இப்பொழுது யுத்தம்செய்த பக்ஷத்தில் அவர்களுக்கு மிகுந்த உபகாரம் செய்தவனாகிறாயேயன்றி அபகாரம் செய்தவனாகமாட்டாய், ஆகையால், யுத்தம்செய்தேனானால், பீஷ்மாதிகளுக்கு அபகாரம் செய்தவனாவேனென்று விசாரப்படவேண்டாம், என்கிற அர்த்தம் கிழத்தனம், ரோகம், முதலானவைகளால் மெலிந்திருக்கிற தேஹங்களை விட்டுப் புதியதேஹங்களை அடைகிறானென்கையாலே தோன்றுகின்றதென்று அறியவேண்டும். மேலும், ஸ்தூலஸூக்ஷ்ம பூதங்களின் சமுதாயமே ஸ்வரூபமாயுள்ள சரீரங்கள் பிறப்பதற்கு முன்னே காணப்படாதனவும், பிறந்தபிறகு மரணமடைகிறவரைக்கும் காணப்படுவனவும் என்று இந்த வேதாந்தசாஸ்திரத்தில் த்ருஷ்டி ஸ்ருஷ்டிவாதம் (பார்த்திலயை) பார்த்தலாலேயுண்டான ரஜத (ஸ்ருஷ்டியின்வாதம்) அங்கீகரிக்கப்படுதலால், ப்ராந்தி போனபிறகும் ப்ராந்தி யுண்டாவதற்கு முன்பும் பழுதையிற்பாம்பு என்கிற ப்ராந்தி இல்லாததுபோல, பூதசங்காதாத்மகங்களான சரீரங்களும் பிறப்பதற்கு முன்பும் பிறந்து நசித்தபிறகும் இல்லாதனவாகையால், பூதசங்காதாத்மகங்களான சரீரங்கள் கனவிலும் காரடிவித்தைக்காரனுடைய மாயையிலும் காணப்பட்டுக்கொண் டிருப்பவைபோல ப்ராந்தி பாசிகங்கள் (பார்ப்பதற்கு இருப்பவைபோலக் காணப்பட்டுக்கொண்டிருந்து உண்மையாக விசாரிக்கும்போது இல்லாதவை

யாதலால்) ஓ அர்ஜுநா; நீ இப்படிப்பட்ட சரீரங்களைக்குறித்தும் துக்கிக்கவேண்டியதில்லையென்று க்ருஷ்ணபகவான் அருளிச்செய்தாரென்று அறியவேண்டும்.

శ్లో॥ నైనంఛిదన్తి శస్త్రాణి। నైనందహతిపావకః
నచైనంక్లేదయన్త్యాపో। నశోషయతిమారుతః. ౨౩

"நைநம்சிதந்திஶஸ்த்ராணி| நைநம்தஹதிபாவக:|
நசைநம்க்லேதயந்த்யாபோ| நஶோஷயதிமாருத:"॥

இ-ள். ஏநம் - இந்த ஆத்மாவை, ஶஸ்த்ராணி - ஆயுதங்கள், நசிந்தந்தி - வெட்டமாட்டா, ஏநம் - இந்த ஆத்மாவை, பாவக: - அக்நிதேவன், நதஹதி - சுடமாட்டான், ஆப: - நீர், ஏநம் - இந்த ஆத்மாவை, நக்லேதயந்தி - நனைக்கமாட்டாது, மாருத: - காற்று, ஏநம் - இந்த ஆத்மாவை, நஶோஷயதி - அழிக்கமாட்டாது.

---

தாத்பர்யம்.

---

அர்ஜுநா, இந்த ஆத்மாவை, ஆயுதங்கள் பேதிக்கமாட்டா, அக்நிதேவன் இந்த ஆத்மாவைச் சுடமாட்டான், நீர் இந்த ஆத்மாவை நனைத்துக் கொல்லமாட்டாது, வாயுதேவன் இந்த ஆத்மாவை உலர்த்திக் கொல்லமாட்டான், என்று தாத்பர்யம்.

---

சங்கரபாஷ்யம்.

---

ஐயா; க்ருஷ்ணா; நீ எந்தக்காரணத்தால் ஆத்மாவுக்கு விகாரமில்லையென்று சொல்லுகிறாய்; உலகத்தில் ஒவ்வொரு பொருளுக்கும், மண், நீர், நெருப்பு, காற்று என்கிற நான்கு பூதங்களுக்குள்ளே ஏதோ ஒருபூதத்தால் நாசமுண்டாகின்றது, ஆதலால், அவ்விதமாகவே ஆத்மாவுக்கும் மண்முதலான நான்குபூதங்களால் நாசமுண்டாகக்கூடாதா, உண்டாகக்கூடுமே, என்று அர்ஜுநன் கேட்பானோ என்னவோவென்று நினைத்து, ஸ்ரீக்ருஷ்ணபகவான் இந்த சுலோகத்தால் மண்முதலிய நான்குபூதங்களாலும் ஆத்மாவுக்கு

‘‘శ్లో॥ అన్యన్నవతరంకల్యాణతరంరూపంకురుతేపిత్ర్యంవా
గాంధర్వంవాదైవంప్రాజాపత్యంవాబ్రాహ్మంవా,’’
‘‘அந்யந்நவதரம்கல்யாணதரம்ரூபம்குருதேபித்ரியம்வா
காந்தர்வம்வாதைவம்ப்ராஜாபத்யம்வாப்ராஹ்மம்வா’’

இதராமானதும், மிகவும் நூதனமானதும், மிகவும் மங்களகா
மானதும் ஆகிய பித்ருதேவதா ஸ்வரூபத்தையானாலும், கந்தர்வ
ரூபத்தையானாலும், தைவரூபத்தையானாலும், ப்ராஜாபத்ய ரூபத்
தையானாலும், ப்ராஹ்ம ரூபத்தையானாலும், செய்பாகின்றது
என்கிற சுருதி ப்ரமாணாநுஸாரமாக, காந்தர்வரூபம் முதலானவற்
றில் எதையாயினும் ஒன்றை அடையத்தகுந்தவர்களா யிருக்கிறார்
கள். ஆகையால், இந்த தர்மயுத்தத்தில், அந்த பீஷ்மாதிகள் புண்ய
லோகங்களுக்குப் போவதற்குத் தடையான சரீரங்களை விட்டு
விட்டு திவ்யதேஹங்களை அடைகிறார்கள். ஆகையால் நீ இப்பொ
ழுது யுத்தம்செய்த பக்ஷத்தில் அவர்களுக்கு மிகுந்த உபகாரம்
செய்தவனாகிறாயேயன்றி அபகாரம் செய்தவனாகமாட்டாய், ஆகை
யால், யுத்தம்செய்தேனானால், பீஷ்மாதிகளுக்கு அபகாரம் செய்தவ
னாவேனென்று விசநப்படவேண்டாம், என்கிற அர்த்தம் கிழத்த
னம், ரோகம், முதலானவைகளால் மெலிந்திருக்கிற தேஹங்களை
விட்டுப் புதியதேஹங்களை அடைகிறானென்கையாலே தோன்று
கின்றதென்று அறியவேண்டும். மேலும், ஸ்தூலஸூக்ஷ்ம பூதங்
களின் சமுதாயமே ஸ்வரூபமாயுள்ள சரீரங்கள் பிறப்பதற்கு முன்
னே காணப்படாதனவும், பிறந்தபிறகு மரணமடைகிறவரைக்கும்
காணப்படுவனவும் என்று இந்த வேதாந்தசாஸ்திரத்தில் த்ருஷ்டி
ஸ்ருஷ்டிவாதம் (பார்த்தலாலேயுண்டான ரஜத (ஸ்ரு
ஷ்டியின்வாதம்) அங்கீகரிக்கப்படுதலால், ப்ராந்தி போனபிறகும்
ப்ராந்தி யுண்டாவதற்கு முன்பும் பழுதையிற்பாம்பு என்கிற ப்ராந்தி
இல்லாததுபோல, பூதசங்கா தாத்மகங்களான சரீரங்களும் பிறப்ப
தற்கு முன்பும் பிறந்து நசித்தபிறகும் இல்லாதனவாகையால், பூத
சங்கா தாத்மகங்களான சரீரங்கள் கனவிலும் காரடிவித்தைக்கார
னுடைய மாயையிலும் காணப்பட்டுக்கொண் டிருப்பவைபோல
ப்ராந்தி பாசிகங்கள் (பார்ப்பதற்கு இருப்பவைபோலக் காணப்பட்
டுக்கொண்டிருந்து உண்மையாக விசாரிக்கும்போது இல்லாதவை

யாதலால்) ஓ அர்ஜுனா; நீ இப்படிப்பட்ட சரீரங்களைக்குறித்தும் துக்கிக்கவேண்டியது இல்லையென்று க்ருஷ்ணபகவான் அருளிச்செய்தாரென்று அறியவேண்டும்.

“శ్లో॥ నైనం ఛిన్దన్తి శస్త్రాణి । నైనం దహతి పావకః
న చైనం క్లేదయన్త్యాపో । న శోషయతి మారుతః. ౨౩

“நைநம்சிந்தந்திஶஸ்த்ராணி| நைநம்தஹதிபாவக:|
நசைநம்க்லேதயந்த்யாபோ| நஶோஷயதிமாருத:”||

இ - ள். ஏநம் - இந்த ஆத்மாவை, ஶஸ்த்ராணி - ஆயுதங்கள், நசிந்தந்தி - வெட்டமாட்டா, ஏநம் - இந்த ஆத்மாவை, பாவக: - அக்நிதேவன், நதஹதி - சுடமாட்டான், ஆப: - நீர், ஏநம் - இந்த ஆத்மாவை, நக்லேதயந்தி - நனைக்கமாட்டாது, மாருத: - காற்று, ஏநம் - இந்த ஆத்மாவை, நஶோஷயதி - அழிக்கமாட்டாது.

---

## தாத்பர்யம்.

---

அர்ஜுனா, இந்த ஆத்மாவை, ஆயுதங்கள் பேதிக்கமாட்டா, அக்நிதேவன் இந்த ஆத்மாவைச் சுடமாட்டான், நீர் இந்த ஆத்மாவை நனைத்துக் கொல்லமாட்டாது, வாயுதேவன் இந்த ஆத்மாவை உலர்த்திக் கொல்லமாட்டான், என்று தாத்பர்யம்.

---

## சங்கரபாஷ்யம்.

---

ஐயா; க்ருஷ்ணா; நீ எந்தக்காரணத்தால் ஆத்மாவுக்கு விகாரமில்லையென்று சொல்லுகிறாய்; உலகத்தில் ஒவ்வொரு பொருளுக்கும், மண், நீர், நெருப்பு, காற்று என்கிற நான்கு பூதங்களுக்குள்ளே ஏதோ ஒருபூதத்தால் நாசமுண்டாகின்றது, ஆகலால், அவ்விதமாகவே ஆத்மாவுக்கும் மண்முதலான நான்குபூதங்களால் நாசமுண்டாகக்கூடாதா, உண்டாகக்கூடுமே, என்று அர்ஜுனன் கேட்பானே என்னவோவென்று நினைத்து, ஸ்ரீக்ருஷ்ணபகவான் இந்த ஶ்லோகத்தால் மண்முதலிய நான்குபூதங்களாலும் ஆத்மாவுக்கு

": శ్రు॥ అన్యన్నవతరంకల్యాణతరంరూపంకురుతేపిత్ర్యంవా
గాంధర్వంవాదైవంప్రాజాపత్యంవాబ్రాహ్మంవా,"
"அந்யந்நவதரம்கல்யாணதரம்ரூபம்குருதேபித்ரியம்வா
காந்தர்வம்வாதைவம்ப்ராஜாபத்யம்வாப்ராஹ்மம்வா"

இதரமானதும், மிகவும் நூதனமானதும், மிகவும் மங்களகரமானதும் ஆகிய பித்ருதேவதா ஸ்வரூபத்தையாகுலும், கந்தர்வரூபத்தையாகுலும், தைவரூபத்தையாகுலும், ப்ராஜாபத்ய ரூபத்தையாகுலும், ப்ராஹ்ம ரூபத்தையாகுலும், செய்பாகின்றது என்கிற சுருதி ப்ரமாணநுஸாரமாக, காந்தர்வரூபம் முதலானவற்றில் எதையாயினும் ஒன்றை அடையத்தகுந்தவர்களா யிருக்கிறார்கள். ஆகையால், இந்த தர்மயுத்தத்தில், அந்த பீஷ்மாதிகள் புண்ய லோகங்களுக்குப் போவதற்குத் தடையான சரீரங்களை விட்டு விட்டு திவ்யதேஹங்களை அடைகிறார்கள். ஆகையால் நீ இப்பொழுது யுத்தம்செய்த பக்ஷத்தில் அவர்களுக்கு மிகுந்த உபகாரம் செய்தவனாகிறாயேயன்றி அபகாரம் செய்தவனாகமாட்டாய், ஆகையால், யுத்தம்செய்தேனானால், பீஷ்மாதிகளுக்கு அபகாரம் செய்தவனாவேனென்று விசனப்படவேண்டாம், என்கிற அர்த்தம் கிழத்தனம், ரோகம், முதலானவைகளால் மெலிந்திருக்கிற தேஹங்களை விட்டுப் புதியதேஹங்களை அடைகிறானென்கையாலே தோன்றுகின்றதென்று அறியவேண்டும். மேலும், ஸ்தூலஸூக்ஷ்ம பூதங்களின் சமுதாயமே ஸ்வரூபமாயுள்ள சரீரங்கள் பிறப்பதற்கு முன்னே காணப்படாதனவும், பிறந்தபிறகு மரணமடைகிறவரைக்கும் காணப்படுவனவும் என்று இந்த வேதாந்தசாஸ்திரத்தில் த்ருஷ்டிஸ்ருஷ்டிவாதம் (மாயாசக்தியை) பார்த்தலாலேயுண்டான ரஜத (ஸ்ருஷ்டியின்வாதம்) அங்கீகரிக்கப்படுதலால், ப்ராந்தி போனபிறகும் ப்ராந்தி யுண்டாவதற்கு முன்பும் பழுதையிற்பாம்பு என்கிற ப்ராந்தி இல்லாததுபோல, பூதசங்காதாத்மகங்களான சரீரங்களும் பிறப்பதற்கு முன்பும் பிறந்து நசித்தபிறகும் இல்லாதனவாகையால், பூதசங்காதாத்மகங்களான சரீரங்கள் கனவிலும் காரடிவித்தைக்காரனுடைய மாயையிலும் காணப்பட்டுக்கொண் டிருப்பவைபோல ப்ராந்தி பாசிகங்கள் (பார்ப்பதற்கு இருப்பவைபோலக் காணப்பட்டுக்கொண்டிருந்து உண்மையாக விசாரிக்கும்போது இல்லாதவை

யாதலால்) ஓ அர்ஜுநா; நீ இப்படிப்பட்ட சரீரங்களைக்குறித்தும் துக்கிக்கவேண்டிய தில்லையென்று க்ருஷ்ணபகவான் அருளிச்செய்தாரென்று அறியவேண்டும்.

“శ్లో॥ నైనంఛిందన్తి శస్త్రాణి। నైనందహతిపావకః
నచైనంక్లేదయన్త్యాపో। నశోషయతిమారుతః. ౨౩

“நைநம்சிந்தந்திஶஸ்த்ராணி। நைநம்தஹதிபாவகஃ।
நசைநம்க்லேதயந்த்யாபோ। நஶோஷயதிமாருதஃ”॥

இ-ள். ஏநம் - இந்த ஆத்மாவை, ஶஸ்த்ராணி - ஆயுதங்கள், நசிந்தந்தி - வெட்டமாட்டா, ஏநம் - இந்த ஆத்மாவை, பாவகஃ - அக்நிதேவன், நதஹதி - சுடமாட்டான், ஆபஃ - நீர், ஏநம் - இந்த ஆத்மாவை, நக்லேதயந்தி - நனைக்கமாட்டாது, மாருதஃ - காற்று, ஏநம் - இந்த ஆத்மாவை, நஶோஷயதி - அழிக்கமாட்டாது.

---

### தாத்பர்யம்.

---

அர்ஜுநா, இந்த ஆத்மாவை, ஆயுதங்கள் பேதிக்கமாட்டா, அக்நிதேவன் இந்த ஆத்மாவைச் சுடமாட்டான், நீர் இந்த ஆத்மாவை நனைத்துக் கொல்லமாட்டாது, வாயுதேவன் இந்த ஆத்மாவை உலர்த்திக் கொல்லமாட்டான், என்று தாத்பர்யம்.

---

### சங்கரபாஷ்யம்.

---

ஐயா; க்ருஷ்ணா; நீ எக்தக்காரணத்தால் ஆத்மாவுக்கு விகாரமில்லையென்று சொல்லுகிறாய்; உலகத்தில் ஒவ்வொரு பொருளுக்கும், மண், நீர், நெருப்பு, காற்று என்கிற நான்கு பூதங்களுக்குள்ளே ஏதோ ஒருபூதத்தால் நாசமுண்டாகின்றது, ஆதலால், அவ்விதமாகவே ஆத்மாவுக்கும் மண்முதலான நான்குபூதங்களால் நாசமுண்டாகக்கூடாதா, உண்டாகக்கூடுமே, என்று அர்ஜுநன் கேட்பானோ என்னவோவென்று நினைத்து, ஸ்ரீக்ருஷ்ணபகவான் இந்த சுலோகத்தால் மண்முதலிய நான்குபூதங்களாலும் ஆத்மாவுக்கு

நாசமுண்டாகாதென்று சொல்லுகிறாரென்று அறியவேண்டும். மேலும், இந்த ஆத்மாவுக்கு அவயவங்கள் இல்லையாகையாலும், சஸ்திரங்கள் (மண்ணினால் செய்யப்பட்டவை) அவயவங்களுள்ள சரீரம் முதலானவற்றின் அவயவங்களைவெட்டி, சரீரம் முதலானவைகளுக்கு நாசத்தை உண்டாக்குவதுபோலச் செய்யமாட்டாவென்று அறியவேண்டும். மேலும், இந்த ஆத்மா, மரம்முதலானவைகளைப் போன்றவனல்லன், ஆகையால், அக்நிதேவன் மரம்முதலானவற்றைச் சுடுவதுபோலச் சுடமாட்டான், மேலும், இந்த ஆத்மா அவயவங்களில்லாதவனாகையாலேயே அவயவங்களுள்ள வஸ்துவினுடைய அவயவங்களை நனைத்து நையச்செய்து அந்த வஸ்துவுக்கு நாசத்தையுண்டாக்கும்படியான நீர் இந்த ஆத்மாவை நசிப்பிக்கமாட்டாது. மேலும், ஸ்நேஹம் (எண்ணெய்) உள்ள வஸ்துவின் ஸ்நேஹத்தை உலரப்பண்ணி அந்த வஸ்துவுக்கு நாசத்தையுண்டாக்குகிற காற்று இந்த ஆத்மாவுக்கு நாசத்தை உண்டாக்கமாட்டாது. இப்படி ஆலோசிக்கும்போது, ஆத்மா எதினாலும் நாசமடையமாட்டான் ஆதலால், குடம்முதலானவை நசித்தபோது குடத்திலுள்ள ஆகாசம் விகாரமில்லாததும் நாசமில்லாததுமாயிருப்பதுபோல, தேஹங்கள் நசித்தாலும் தேஹத்திலுள்ள ஆத்மாவுக்கு நாசமில்லையென்றும், ஆகையாலேயே ஆத்மா, விகாரமில்லாதவன் ஆவானென்றும் அறியவேண்டும்.

---

ரஹஸ்யார்த்தம்.

---

ஐயா, க்ருஷ்ணா; வீடு வெந்துபோனபோது, வீட்டிலுள்ள புருஷனும் வெந்துபோவதுபோல, உடம்பு நசிக்கும்போது உடம்பின் நடுவிலுள்ள ஆத்மாவும் நசிக்கமாட்டானா; என்று அர்ஜுநன் கேட்பானோ, என்னவோ வென்றெண்ணி, ஆத்மா அவயவங்கள் இல்லாதவனாதலால் நசிக்கமாட்டானென்று தெரிவிக்கும்பொருட்டு ஸ்ரீக்ருஷ்ணபகவான் இந்த ச்லோகத்தைச் சொன்னாரென்று அறியவேண்டும். ஆனால், நசிக்கச் செய்யத்தகுந்த வஸ்துக்களுள் எதுவும் ஆத்மாவை நசிப்பிக்கமாட்டாதென்று சொல்லத் தகுந்ததாயிருக்க, சஸ்திரங்களை மாத்திரமே சொல்லுதற்குக் காரணமே